# கண்ணுசாமியம்

45-37

என்னும்

## வைத்திய சேகரம்

இஃது

ஆயுர்வேதத்தைக் கற்க விரும்பும் மாணவர்களுக்குப் பயன்படுமாறு
வெளியம்பாக்கம் A. கணேசமூர்த்தி சுவாமிகள் மாணவரும்,
"சிகிச்சா ரத்னதீபம்" "வைத்திய சிந்தாமணி" என்னும்
நூல்களின் ஆசிரியருமான

சி. கண்ணுசாமிப் பிள்ளையவர்கள்

இயற்றியது



நான்காம் பதிப்பு

B. இரத்தின நாயகர் ஸன்ஸ்

பதிப்பாளர் :: :: சென்னை.

பதிப்
புரிமை

விலை
ரூபா 1-8-0.

LB
69
4537

# சிறப்புப்பாயிரம்

வந்தவாசி தாலுகா வெளியம்பாக்கம் கிராமம்

ஸ்ரீ அகஸ்தியர் ஆச்சிரமம்

கணேசமூர்த்தி சுவாமிகள் இயற்றிய

அறுசீர்க் கழிநெடிலடி யாசிரிய விருத்தம்

திருவிருந்த தமிழ்நாடு செய்ததவந் திரண்டெழுந்த செயலே மானப்
பொருவிறந்த மருத்துவத்தின் புகழிருந்த வன்மையெலாம் புவனி காணத்
தருவிருந்த வகையெந்நத் தமிழிருந்த முறையெந்நத் தரையில் யார்க்குங்
கருவிருந்த பவந்துமிக்குங் கலையெந்ந செய்ம்முறையின் காட்சி மேவ.

ஆதங்கத் திடையிருந்திங் கலமந்து பன்னுளு மந்தோ வாளா
சாதங்கை நிலையென்று தளர்ச்சியுறு வாரக்கமுதந் தந்தா லொப்ப
வேதங்கைம் முறைபலவும் விரித்திங்கே விளக்கிடலால் விபுலை மீது
நோதங்கற் கிலதென்று மருத்துநூற் புலவர்மன நோய்க்கொண் டேங்க.

கார்நாடுஞ் செஞ்சாலி கதிநாடும் மோனரகங் கடல்வ ளாகஞ்
சீர்நாடுஞ் செந்தமிழ்ச்செப் பணிநாடும் பல்லாற்றுஞ் செறிந்தே வண்டர்
தார்நாடுஞ் செயலென்னத் தரைமாந்த ரிகபோகந் தனிற்கு லாவப்
பார்நாடு மிந்நூற்போ லெந்நூலம் மாவென்று பணிந்து போற்ற.

கற்றவர்க்குங் கல்லார்க்கும் மங்கையர்க்குஞ் சிறுவர்க்குங் கவினு ரன்பு
பெற்றவர்க்குந் தளர்ந்தவர்க்கும் பிணியோர்க்கும் பயன்வரவே பீழை நூறு
நற்றவர்க்கும் புலவருக்கும் நவநிதிய மெனமிளிர நவை யிலாத
மற்றவர்க்கும் மனத்தகத்தே களிசிறப்பப் பலபடமும் வயங்கத் தீட்டி.

வரையிருந்த வெங்குரவன் குறுமுனிவன் வாக்கிருந்த பொருளும் வன்மைப்
பரையிருந்த சித்தர்பலர் பன்னுவா கடம்பலவும் பரிவி னய்ந்து [டித்
கரையிருந்த மொழிதபுத்துக் கைம்முறையுஞ் செய்ம்முறையுங் கவினக் காட்
தரையிருந்த மன்பதையோ ரமுதென்று பல்லாற்றுஞ் சாற்று மாறு.

வசனநடை தனிலெழுதின் வாசிப்போர் மனத்தகத்தே வதியா தந்தோ
விசனமுறு வாரதனுல் வேரூன்றற் கின்மையென விளக்க மாக
எசனங்களுக் கின்பளிக்கும் பல்சந்தப் பாவினத்தி லெழுதி யாங்கே
அசனமென வுரைவிளக்கிக் கண்ணுசா மியப்பெயரா லறைந்திட் டானல்.

அன்னவன்யா ரெனக்கேட்கி லெழுத்துமுத லேந்தியலு மரிதி னய்ந்து
பன்னரும்வா கடபுணரி தனையுண்ட மேகமெனப் பகர நின்ருேன் [னுன்
மன்னிருஞ்சீர் நுண்ணுணர்வோர் மாச்சவையில் திகழ்ந்தொளிரு மதியமன்
என்னிருகண் மணியன்னுன் கற்ருேருக் கின்பூட்டு மெழிற் குணத்தான்.

பண்டிருந்த வகத்தியனு ரிடம்பயின்ற மாணவனே பாரோர் போற்றத்
தொண்டிருந்த சித்தர்குழாந் தனைமான வந்தனெனத் தொழச்சில் லோர்கள்
கண்டிருந்த படிபுகலுங் காட்சியினன் மாட்சியினன் ககன மட்டுங்
கொண்டிருந்த வில்லறமே நல்லறமாய்க் கொண்டிலகுங் குணமிக் கோனே.

நிலம்பூத்த பன்னோய்க ணிலைதவிர்த்திங் கேமாப்ப நெடிதி னுய்ந்து
வலம்பூத்த சிகிச்சாரத் தினதீப மென்றொருநூல் வகுத்து மாண்பார்
கலம்பூத்த மதியடைந்த கண்மணியான் மருத்துவருட் கருது நேயன்
தலம்பூத்த கண்ணுச்சா மிப்பெயரார் பண்டிதனுந் தமிழ ரேறே.

---

சென்னை ஆயுர்வேத கல்லூரிப் பண்டிதரும்,

நிகில ஆயுர்வேத மகாமண்டல ஆசாரிய பரீக்ஷகருமாகிய

ஆயுர்வேத பூஷணம்

## K. சுப்பிரமணிய சாஸ்திரிகளின் மதிப்புரை

அளவிடக்கூடாத செல்வத்தையும், விசேட மாட்சிமையையும், யோக சாதனையையும் வகித்து யாரொருவர் ஸ்ரீ அகஸ்தியாஸ்ரமம், என்கிற ஓர் சாலையை ஏற்படுத்தினரோ அந்தக் கணேசமூர்த்தி சுவாமிகளின் மாணுக்க ராகிய கண்ணுசாமி பிள்ளை தம் பெயரால் சர்வ ரோகங்களையும் பரிகரிக்கக் கூடிய ஓர் நூலை யியற்றினர். அந் நூல் வைத்தியர்களுக் கெல்லாம் பெரும் நன்மையைத் தரத்தக்கது. அது பதினுன்கு அத்தியாயங்களாக வகுக்கப் பட்டுத் தேக தத்துவம், நாடி லட்சணம், அசாத்திய குறிகள் முதலியவற்றை முற்பாகத்துக்கொண்டும்; கல்கம், கியாழம், சூரணம், மெழுகு, தீ நீர், லேகியம், பற்பம், செந்தூரம் முதலிய சித்தௌஷதங்களைப் பிற்பாகத்துக் கொண்டு மிருக்கிறது.

அகஸ்திரம் முதலான மகாமுனிவர்களால் கூறப்பட்டனவும், அநேக சிரேஷ்ட வைத்தியர்களால் வெகுகாலமாகக் கைம்முறையாக அனுட்டித்துப் பிரசித்து பெற்றனவுமாகிய அவிழ்தங்களின் செய்ம்முறைகளும் இந்நூலில் இராக்காலத்தில் தீபங்களைப்போலப் பிரகாசிக்கின்றன.

ஆயுள்வேதத்திலும் அகஸ்தியர் முதலான சித்தர்களுடைய பன் னூற்களிலும் பாண்டித்தியமுள்ள கண்ணுசாமி பிள்ளை என்கிற பெரி யோர் "கண்ணுசாமியம்" என்ற நூலை வெளிப்படுத்தினர். இந்நூலில் கூறப்பட்டுள்ள விஷயங்கள் எல்லாம் சத்து உடையன. சுப்பிரமணிய சாஸ்திரி என்ற நான் ஆமோதித்திருப்பதால் எவ்வுலகில் நீடூழி வெகு காலம் பிரசித்தி பெற்று இஃது இருக்குமாறு திருவருளைச் சிந்திக் கின்றேன்.

---

திருமயிலை வேங்கடாமண வைத்தியப் பாடசாலையில் போதகாசிரியரும், தங்கமெடல் பரிசு பெற்றவருமாகிய வைத்திய விசாரதர்.

## K. C. நடேச சாஸ்திரி, M. R. A.

4537.

அவர்களின் மதிப்புரை

ஸ்ரீமான் கண்ணுசாமி என்ற ஸ்ரீ அகத்திய முறையைத் தழுவிய வைத்தியர்களுள் முதன்மையானவரும், ஸ்ரீ கணேச மூர்த்தி என்று திருப் பெயர் பூண்ட வைத்திய சிகாமணியின் சீடருமான வைத்தியமணி அவர்க ளால் தமது பெயரால் இயற்றப்பட்ட "கண்ணுசாமியம்" என்னும் அரிய நூலை யாம் கண்ணுற்று அளவிடா இன்பத்தை யடைந்தோம். இவ்வரிய நூலில் வைத்திய விடயங்களே யன்றி மருந்து யோக விடயங்களு மடங்கி யுளது இந்நூல் சொற்பொலிவு, விடயத்தின் மேன்மை முதலிய அரிய முதனூற் குணங்கள் பெற்ற மாணிக்கம் என்று நாம் சற்று தயங்காமற் சொல்வோம், இந்நூலும், அதை ஆக்கியோரும் நீடூழி பெரும் புகழுடன் வாழ்க என்று யாம் உள்ளன்புடன் உமாகாந்தரை எப்பொழுதும் வேண்டு கிறோம்.

---

திருமயிலை வேங்கடாமண வைத்தியசாலையிலும், நுங்கம் பாக்கம் தர்ம வைத்திய சாலையிலும் பிரதம வைத்தியராக இருந்தவரும்,

சர்வ இந்திய ஆயுர்வேத மகாமண்டலத்தில்

வித்தியாபீடம் முதலிய பரீக்ஷகருமாகிய வைத்திய விசாரதர்

## ஸ்ரீ K. A. வேங்கடாசலம் சாஸ்திரி

அவர்களின் மதிப்புரை

ம-ா-ா-ஸ்ரீ வித்துவன்மணி கண்ணுஸாமிப் பிள்ளை அவர்களுக்கு அன்பார்ந்த ஐயா,

தாங்கள் அன்பு கூர்ந்து தங்களால் இயற்றப்பட்ட "கண்ணுசாமியம்" என்ற நூலை எமது பார்வைக்கு அனுப்பியதை, நான் ஆமூலாந்தம் (அடி முதல் நுனிவரை) படித்துப் பார்த்தேன். அதனில் தொகுத்துக் கூறி யுள்ள விஷயங்கள் அனைத்தும் நம் ஸஹோதர வைத்தியர்களுக்கு இன்றி யமையாதனவாயும், பல நுட்ப மருந்து பாகங்கள் அனுபவ சித்தியுடன் கூடினவையாயும், எளிதில் படித்தறியக்கூடிய கருத்துரையுடன் கூடிய வையாயும் இருக்கின்றமையால் வைத்திய வகத்திற்கு ஒரு பெரும் உதவியைச் செய்த தங்களுக்குத் தீர்காயுளையும், திடகாத்திரத்தையும் அளிக்கத் தன்வந்திரிக் கடவுளைத் தியானிக்கின்றேன்.

---

சிதம்பரம் தளவரிசை

ஆயுர்வேத பாஸ்கர - சுப்பிரமணிய பண்டிதாவர்கள் குமாரர்

## சி. த. முத்தைய பிள்ளை யவர்கள் இயற்றியது

நல்லாயுள் வேதமுறை நன்மருந்தின் பன்முறைக
ளெல்லாருங் கொண்டுமகிழ்ந் தின்புறவே—நல்லான்சீர்க்
கண்ணுசா மிப்புனிதன் கந்தனருட் கொண்டுதந்த
கண்ணுசா மீயமிது காண்.

---

சூளை ஆயுர்வேத பண்டிதர்

## C. S. முருகேச முதலியாரவர்கள் இயற்றிய

விருத்தம்

உலகுறு மாந்தர்க் குற்ற வுறுபிணி யொழிய வெண்ணி
இலகுறு பன்னூ லாய்ந்து மிக்கநல் லனுப வத்துந்
திலகமாய் நின்ற யெண்ணிற் சீர்முறை துலங்க வைத்து
விலகிலாக் கண்ணுச்சாமி வியப்புற நூல்செய் தானே.

---

திருமயிலை ஆயுர்வேத சித்தாஸ்ரமம் வைத்தியபூபதி

## ஸ்ரீமான் கிருஷ்ணராவ் அவர்கள் இயற்றிய

எண்சீர்க் கழிநெடிலடி யாசிரிய விருத்தம்

கங்கைமதி சடைக்கணிந்தோன் கருணை யாலே
கனமருத்து நூற்புலவன் கண்ணுச் சாமி
துங்கமுனி வரர்சித்தர் சொன்ன வாறும்
துகளறத்தான் கைகண்டு துணிந்த வாறும்
இங்கெவரு முணர்ந்துபய னெய்தும் வண்ணம்
யெழிலுடம்பின் றத்துவமு மியங்கு நாடி
தங்குநிலை யும்பிறவும் தயங்கச் சேர்ந்துத்
தன்பெயரா விந்நூலைச் சாற்றி னானே.

---

சிந்தாதிரிப்பேட்டை ஆயுர்வேத பண்டிதர்

## ஸ்ரீமான் சுப்பராய ஆசாரி யவர்கள் இயற்றிய

நேரிசை யாசிரியப்பா

திருவார் கமலச் செல்வா சனங்கொள்
குருவாஞ் சதுர்முகன் குயிற்றிய பண்டை
ஆயுர் வேத அரும்பெரும் முறைகள்
பாயபே ருலகம் பயனுற வேண்டி
குடமுனி சித்தர் கொங்கணர் முதலாந்
திடந்தரு பெரியார் செப்பிய நூலில்
மணந்தரு முறையுண் மாட்சிமைத் தாய
குணந்தரு முறைகள் கோத்தெடுத் தன்பின்
மன்பதை யோர்க்கு வரும்பிணி பாற்றற்
கின்பதை யாகு மெழின்முறை யாக
நண்ணுங் கைம்முறை நவின்றே யினிது
கண்ணுசா மியப்பேர் காட்சி மேவப்
பார்நூ லேத்திப் பயன்பெறற் கீண்டே
ஓர்நூர் தந்திங் குயர்வடைந் தனனால்
அன்னவன் யாரெனிற் பன்னுவல் கேட்டி
வன்னியர் குலமே வழிவழிச் செய்த
உத்தம னுல்க நாதவே ளொண்சீர்
வைத்தமெய்ப் புதல்வன் வண்மையிற் போந்த
செந்தமிழ் வாகடச் செந்நூல் பலவும்
அத்தங் கண்டு அவையினைத் தழீஇய
மருந்தெனுந் திரையுள மருத்துவ வாரி
இருந்து மூழ்கி யிறுமாப் பெய்திப்
பரம ரகசிய பற்பல வவிழ்தம்
திறமுடன் தேடித் தெரிந்தே யறிவால்
மணியெனக் கண்டு மதியெனு முடியில்
தணிவில் பெற்றுத் தரித்தவன் பல்லார்
கண்டிதங் கூறும் கண்ணுசா மிப்பேர்
பண்டித னென்னும் பண்புரு வோனே.

---

குடும்ப சௌக்கிய சாத்திரம், கருப்ப சாத்திரம் முதலிய
நூல்களின் ஆசிரியரும், ஆயுர்வேத பண்டிதருமாகிய

## ஸ்ரீமான் வீ. ஏ. முனிசாமிப் பிள்ளை இயற்றிய

அறுசீர்க் கழிநெடிலடி யாசிரிய விருத்தம்

பொன்னாடு மருத்துப் புங்கவன்ற னுந்திபூத் தெளிரும் புத்தேள்
தென்னாடு மொழியமைத்துப் பல்லாற்றுஞ் சிறந்திலங்குந் தேர்ச்சி யானே
நன்னாடு பரவலுறுங் குடமுனிவன் முதலாய நவையில் சித்தர்
சொன்னாடும் புகழ்மைமரீஇ யாயுர்வே தப்பெருமை சொல்லற் பாற்றோ.

எத்தகைய வறந்தனினுங் கல்விருப் புறவளித்த விதற்கு மேலாஞ்
சத்துவமார் மன்பதையோர் பிணிதீர்த்த லேற்றமெனச் சாற்றும் வேதம்
உத்தமமா மதற்கொருநூ லுறுதியென வுளத்தெண்ணி வுண்மை யாய
கத்துகடற் புவிகண்ணு சாமியமென் றெப்பருநூற் கழறி னானல்.

அன்னவன்யா ரெனில்வன்னி குலதிலக னொழுக்கமுத லமைந்த கீர்த்திப்
பன்னலஞ்சே ருலகநா தக்குரிசில் நோற்றதவப் பரிசே மான
நன்னலஞ்சே ரினியகுண னாயுர்வே தக்கடலை நாவான் மாந்தி
என்னிருகண் மணிபோலு மிசைகண்ணு சாமியென விலங்கு வோனே.

---

சென்னையம்புரி பாம்பே வைத்தியசாலை

## பொன்னரங்க முதலியாரவர்கள் இயற்றிய

விருத்தம்

மதியாரும் குறுமுனிவன் முதலாய பெரியோர்கள் வகுத்த மாண்பின்
கதியாரு மாயுர்வே தக்கடலை நனிதேக்கிச் சுகமே மாந்தர்
விதியாரும் பிணிதெறுவான் கண்ணுசா மியப்பெயர்நூல் விளம்பி னானிப்
பதியாருங் கண்ணுசா மிப்பெயர்கொள் பண்டிதனும் பண்ப னம்மா.

---

தின்னனூர் ஆயுர்வேத பண்டிதர்

## ஸ்ரீமான் இராமசாமி முதலியார் அவர்கள் இயற்றிய

வெண்பா

ஆறங்கத் தொன்றுரு மாயுர்வே தப்புணரி
பேறங்கைக் கொண்டு பிழைப்பாற்றி—மாறின்றிக்
கண்ணுசா மிப்பிள்ளை காட்டியதோ ரிந்நூலுக்
கென்ன வுவமையிலை யீங்கு.

---

உ

# கண்ணுசாமியம்

## பாயிரம்

விநாயகர் வணக்கம்

எழுசீர்க் கழிநெடிலடி யாசிரிய விருத்தம்

சீகர முலவு நனந்தலை யுலகார் சீவர்க ளுறும்பிணிப் பயனுஞ்
சோகம தாற்றக் கண்ணுசா மியமென் றூயநல் லனுபவ வைத்ய
சேகரம் பாட வூறிலா தகற்றிற் சேயனுக் குறுதுணை யாகு
மாகரப் பெருமான் றிருவடிப்போதை மனத்திலே நினைத்தலே புரிவாம்.

முருகர் வணக்கம்

வேறு

பூவலங் கொண்ட மாந்தர் பிணியெலாம் போக்கு மாறு
நாவலங் கொண்ட கண்ணு சாமிய நாமம் பூண்ட
மாவலங் கார வைத்ய சேகர மதிப்ப நிற்கச்
சேவலங் கொடியோன் பாதஞ் சிந்தனை செய்கு வாமால். (2)

கலைமகள் துதி

பாரதி லாருஞ் சாத்ர நலமெலாம் பண்பி னுய்ந்து
சீரதி கஞ்சேர் கண்ணு சாமிய மென்னச் சீர்த்தி
நீரதி கஞ்சேர் வைத்ய சேகர நிலவு மாறு
பாரதி யம்மை பாதம் பற்றெனப் பற்றி வாழ்வாம். (3)

பொதிகைமலைச் சிறப்பு

காவிலே கற்பம் கற்பின் கலையிலே ஞானம் பூத்த
பூவிலே மரையும் புந்திப் புகழிலே மெய்ம்மைச் செய்ய
பாவிலே வெண்பா பத்திப் பரிவிலே திண்ணன் போலும்
நாவிலே கலையைப் போலு நகுந்திருப் பொதிகைக் குன்றம். (4)

பொதிகையே வதிவார்க் கெல்லாம் புன்மைநோய்ப் பலவு மாற்ற
கதிகையே யெனவி ளங்கிக் காண்பல தருசஞ் சீவி
அதிகையே படர்ந்து நந்த மகத்தியர் மரபென் ஞேங்க
துதிகையே பெறுத லானே துரிசிலா திலங்கக் குன்றம். (5)

## அகஸ்தியர் துதி

குன்றிலே விளங்கும் பல்ல குருமுனி வர்க்கெல் லாஞ்சீர்
மன்றிலே வதியுமீசன் மாண்பெடுத் தோதி துய்ய
அன்றிலே போலும் பாரோர்க் கருந்தமிழ் விளங்கச் செய்து
நன்றிலே மலர்ந்த நங்கள் குறுமுனி நற்ருள் போற்றி. (6)

## குரு வணக்கம்

வேட்டுறும் பொருளுன் ஞது வீணிலே யலைந்த நாயேன்
மாட்டுறும் மீழை நாறி மடந்தபுத் தின்பார் முப்பைக்
காட்டுறுங் கருணை செய்த கல்வியே றென்னச் சீர்மேம்
பாட்டுறுங் கணேச மூர்த்திப் பண்மனை வணக்கஞ் செய்வாம். (7)

## அவை யடக்கம்

பலகலையுங் கற்றுயரும் பாவலர்கண் முன்னே
சிலகலையுங் கல்லாச் சிறுவன்—உலகமிது
ஓதுமுறை சொற்றேன் உயர்மருந்தின் றன்மையினல்
வாதுசெயா தென்றே மகிழ்ந்து. (8)

## நூற் பயன்

மருத்துநூற் பாகம் வரன்முறை கற்ருர்க்
கருத்திதரு மிந்தநூல் அன்றித்—திருத்தமிலார்
கைக்கொள்ள வெண்ணின் கருதும் பலன்ருனே
மெய்க்குருடன் முன்னே விளக்கு. (9)

தேர்சிகிச் சாரத்ன தீபமென யானெழுதிப்
பேர்தந்து விட்டதனிற் பேசாத—ஓர்பாகம்
இன்னூ றனில்வரைந்தேன் ஏற்றுநெறி நின்றக்காற்
பன்னூல்கள் வேண்டாநீ பார். (10)

பாயிரம் முற்றிற்று.

---

## நூல்

### வெண்பா

1. சீராங் குளவி சிறுபுழுவைக் கொண்டப்பால்
வேரு மொருகூட்டில் விட்டேன்—பேரு
முருவதனைத் தான்நோக்க வுற்றசீர் போலக்
கருதநூ லாலாகுங் கற்று.

(கருத்து) சிறப்புற்ற குளவி சிறுபுழுவைக் கௌவிக்கொண்டு வந்து, வேறொரு கூட்டில் அடைத்து, தன்னுருவையே எப்பொழுதுங் கருத, அஃதும் அவ்வாறே திருவருளால் ஆவதுபோல், நூலையும் பலனடைய வேண்டிக் கற்கும்போது, அஃதும் வீண்போகாது பெரும்பயனையே கொடுக்கும்; என்பதாம். (1)

2. கற்ற குருவாக்கும் காதலித்த வாகடமும்
பற்றுக்கோ லென்றே பரிகாரம்—முற்ற
அவன்பொறுப்பல் லாலொன்று மாவதில்லை யென்றே
இவனு ணரக்கீர்த்தி இங்கு.

(க-து) இந்நூலைக் கற்கப்புகும் மாணவன் குருவினிடமாக அறிந்த விஷயங்களையும், வைத்திய நூன்முகமாய்க் கற்றவைகளையும், நடை தளர்ந்த காலத்தில் கோலை ஆதாரவாகக் கொண்டதுபோல் தான் செய்யும் பரிகாரமும் அத்தகையதே என்றெண்ணித் தானென்ற அகம்பாவத்தை யொழித்து, எல்லாம் சிவன் செயலல்லால் தன்னால் ஆவது ஒன்றுமில்லை என்று உணர்ந்து நடப்பானாயின், எவ்வகையானும் பெருமையை அடைவன்; எ-ம். (2)

3. இங்குவரும் ரோகி இதமோ டடுக்குங்கால்
அங்கே சிகிச்சைதனி லாயாது—பொங்கமுடன்
கற்பழிக்க நோக்கிடினுங் காணவுறு பேராசை
உற்றிடினு மாநரக மோது.

(க-து) ரோகத்தின் கொடுமையால் உன்னிடம் வந்து பாதுகாப்பிற்காக நிற்கும்போது, உடனே தகுந்த சிகிச்சையை எண்ணாமல் மோகத்தாலேனும் அல்லது எவ்விதக் காரணமுமின்றிப் பெரும் தனத்தைக் கருதியேனும் நடப்பின் நரகம் குடியிலை யாகும்; எ-ம். (3)

4. ஓது முறுதியிலான் உற்றபெருங் காமிமந்தன்
வாதுகளி லோபிமடி மானமிலான்—சூதுற்றுப்

புண்ணியமே செய்யப் புறங்காட்டு வோன்துட்டர்க்
கெண்ணியசி கிச்சை யிழுக்கு.

(க-து) வைத்தியரிடம் உறுதியாக நம்பிக்கை இல்லாதவர்களுக்கும், சதா சிற்றின்ப முடையவர்களுக்கும், வைத்தியன் சொல்லும் பத்திய பாகத்தை அறிந்துகொள்ளச் சக்தியில்லாத பெருஞ் செவிடனுக்கும், அவிழ்தங்களுக்கு விரோதத்தைக் கொடுக்கக்கூடிய மதுபானம் செய்கின்றவர்களுக்கும், சிகிச்சை செய்துகொண்டபின் பொருள் கொடுக்காத லோபிகளுக்கும், மருந்தைச் சாப்பிட்டுக் குணமடைய வேண்டும் என்ற நோக்கமில்லாத சோம்பல் உடையவர்களுக்கும், வைத்தியனை மதிக்காது பேசக்கூடிய ஈனர்களுக்கும், தர்மகுணமில்லாப் பாவிகளுக்கும் பரிகாரம் செய்வது பயனில்லை; எ-ம். (4)

5. இழுக்கிலா நற்குணத்தோ னேற்றதவம் பூண்டோன்
மொழிதவறு நோன்புற்றோன் முற்றும்—வழியிலாத்
தூய வறிமுன் துறவியா மின்னோர்க்கே
ஈயப் பரிகார மெண்.

(க-து) சிறிதும் குறைவுபடா நற்குணமுடையார்க்கும், ஜீவ காருண்ணிய முடையார்க்கும், சொற்றவறாமல் நடப்பவர்களுக்கும், தீது அறியாத் தரித்திரர்களுக்கும், சன்மார்க்கமுடைய பெரியோர்களுக்கும் உடனே வைத்தியம் செய்யக் கடவாய்; எ-ம். (5)

---

# தேக தத்துவம்



6. எண்ண விருநான்கி னேற்றசடம் சாணளவில்
மண்ணா லுருவாகி வானுலவப்—பண்ணுவித
மேர்வாயுந் தேயு மெழிலப்புந் தான்கூடிச்
சார்வுற்ற தென்றேநீ சாற்று.

(க-து) அவரவர் கையில் எண்சாண் அல்லது தொண்ணூற்றாறு அங்குலம் உயரமுடையதென்று நினைக்கக்கூடிய இச் சரீரம் பிருதிவி யென்னும் பூதமாகிய மண்ணால் உருவாகி, ஆகாயம் என்ற பூதத்தினிடமாக ஒடுங்கி, வாயு-தேயு-அப்பு என்னும் மூன்று பூதங்களால் இயக்கப்பட்டிருக்கின்றது; எ-ம். (6)

7. சாற்ற வெலும்புதோல் சாரிறைச்சி காணுமயிர்
போற்ற நரம்பும் புகலமண்—ஏற்ற

உதிரமச்சை சுக்கிலநீ ரூற்றதோர் மூளை
மதிக்கவப் பென்றே வழுத்து,

(க - து) பஞ்சபூதத்தான் ஆக்கப்பட்ட சரீரத்தில் எலும்பு, தோல், மாம்சம், மயிர், நாடி முதலியவைகள் பிருதிவி யென்னும் பூதத்தின் அம்சங்களாம். உதிரம், மச்சை, சுக்கிலம், நீர் முதலியவைகள் அப்பு என்னும் பூதத்தின் கூறும்; எ-ம். (7)

8. வழுத்தவகங் காரம் வருஞ்சோம்ப லின்பம்
எழுந்தபயம் நித்திரையும் ஏற்கத்—தழுவுந்தீ
ஓடல்கி றல்நடத்த லொப்பக்கண் மூடலுடன்
நாடவிருத் தல்வாய்வாம் நாடு.

(க - து) அகங்காரம், சோம்பல், மைதுனம், பயம், நித்திரை இவை தேயு என்னும் பூதத்தின் கூறும். ஓடல், கிரல், நடத்தல், கண்மூடல், திறத்தல், இருத்தல் முதலியவை வாயு என்னும் பூதத்தின் கூறும்; எ-ம். (8)

9. நாடுங்கா மங்கோபம் நன்மதங்கு ரோதமுடன்
தேடுலோ பந்தானும் சேருவிண்—கூடுங்
குணமிருபத் தஞ்சுங் குறிக்குங் கருவி
யினமாம் பிறவிக் கிருப்பு.

(க - து) காமம், கோபம், மதம், குரோதம், லோபம் முதலியவைகள் ஆகாயம் என்னும் பூதத்தின் கூறும். இங்ஙனம் ஏற்பட்ட இருபத்தைந்து அம்சங்களும் பிறவிக்குக் கருவியாக உடையன; எ-ம். (9)

10. இருப்பான நாடி யெழுபதோ டீரா
யிரமான தேகத்தில் ஏலப்—பெருநாடி
ஒக்கதச மத்தொழிலே யூக்கதச வாயுக்கள்
தக்கபடி யானதே சார்பு.

(க - து) இப் பிறவி கருவிகளாகவுடைய பூதங்களில் ஒன்றாகிய பிருதிவி யென்னும் பூதத்தால் சிருஷ்டிக்கப்பட்ட தேகத்தினிடமாக எழுபத்தீராயிரம் நரம்புகள் தோன்றி யிருக்கின்றன. அவைகளில் பிரதானமானவை இடைகலை, பிங்கலை, சுழிமுனை, அலம்புடை, காந்தாரி, அத்தி, சிகுவை, சங்கினி, இயல்புருடன், குரு எனப் பத்து அவைகளை இயக்குதற்குப் பிராணன், அபானன், உதானன், சமானன், வியானன், நாகன், கூர்மன், கிருகரன், தேவதத்தன், தனஞ்சயன் எனப் பத்து வாயுக்கள் ஏற்பட்டிருக்கின்றன; எ-ம். (10)

11. சாருந் தசநாடி தன்னில்மூ லம்மூன்று
பேருமிடம் பிங்கலையும் பின்னலுடன்—மாறும்
உரைக்கவிரற் காற்றெட் டுணர்த்துமே நாசி
வரைச்சுழியோ மையத்தில் வந்து.

(க - து) முற்கூறப்பட்ட தசநாடியில் மூலாதாரமாக நின்றவை இடைகலை, பிங்கலை, சுழிமுனை என மூன்று. இடைகலை பிங்கலை இவ்விரண்டும் வலம், இடக்கால் பெருவிரல்களிலிருந்து ஆரம்பித்து இடம். வல நாசிவரையில் கத்தரிக்கோல் மாறலாக ஓடி நிற்கும். சுழிமுனை, நடுவே மூலாதாரத்திலிருந்து உச்சிவரை அச்சுருவாணியாக நிற்கும்; எ - ம். (11)

12. வந்த கலைமூன்றில் வாய்வா மபானனுடன்
தந்த பிராணன் சமானனும்—சந்தமுறக்
கூட்டுறவின் ரேசித்தல் கூறுவா தம்பித்தம்
நாட்டுங் கபமேயாம் நாடு.

(க - து) இடைகலை, பிங்கலை, சுழிமுனை எனப் பெயர் கொண்ட மூன்று மூலாதார நாடிகளை முறையே அபானன், பிராணன், சமானன் என்னும் வாயுக்களின் இயக்கத்தால் விடும் சுவாசம் இடைகலை வாதமென்றும், பிங்கலை பித்தமென்றும், சுழிமுனை கபமென்றும் அறிவாய்; எ - ம். ()

13. நாடு மிடைகலையே நானன்கு அங்குலமாய்
ஓடுமே பிங்கலையு முய்யத்—தோடிரண்டும்
போக நடுசுழியோ போற்ற வுபயமாய்ப்
பாகம் பகிர்ந்திடுமே பார்.

(க - து) இடைகலையென்ற வாதமானது நாசியின்வழியாய்ப் பதினாறு அங்குலம் பாய்ந்தும், பிங்கலையென்ற பித்தமானது பன்னிரண்டு அங்குலம் பாய்ந்தும், இவையொழிந்த சுழிமுனை இரண்டு நாசி துவாரங்களுக்கும் இடையே யிருந்து பகிர்ந்தோம்; எ - ம். (13)

14. பாருங் கலைமூன்றில் பற்றியவா யும்மூன்று
சாரும்வன் மைக்குறையான் சாற்றக்கேள்—தேருமதின்
மெய்யளவு வாதமொன்று மேல்பித்த மோரரையாம்
ஐயங்கா லென்றே யறி.

(க - து) இடைகலை, பிங்கலை, சுழிமுனை எனக் குறிக்கப்பட்ட மூன்று கலைகளாகிய பெருநாடியோடு அபானன், பிராணன், சமானன் என்னும் வாயுக்கள் சம்பந்தப்படுங்காலத்தில் ஒன்றுக்கொன்று வலிவு குறைவு பட்டிருப்பதால் வாதம் மாத்திரை ஒன்றாகவும், பித்தம் அரையாகவும், கபங் காலாகவும் ஏற்பட்டதென்று அறிவாய்; எ - ம். (14)

---

ஸ்ரீதாராம தமிழ் ரவணி
வாசக சாலை.

# நாடி நிலை

15. அறியவுந்தி வாத மடுத்தபித்தந் தானும்
மறியு நடுமார்பில் வன்மை—குறிக்குமே
ஐய முயருச்சி யண்டுநிலை யாங்குணரப்
பையக் கரம்பற்றிப் பார்.

(க - து) வாதம் உந்தியிலும், பித்தம் மார்பிலும், ஐயம் உச்சியிலும் குடிநிலையாக அமர்ந்துள்ளன. இவற்றை அறியக் காத்தைப் பிடித்துப் பார்க்க; எ - ம். (15)

16. பார்க்கமணிக் கட்டில் பகரங் குலந்தான்
சேர்க்கவிட்டு மூவிரலால் செப்புதுடி—மார்க்கமே
சுட்டுவிரல் வாதமாந் தூயநடு பித்தமே
தெட்டுகபந் தற்சனியாஞ் செப்பு.

(க - து) மணிக்கட்டுக்கீழே ஒரு அங்குலம் தள்ளி மூன்று விரலால் அழுத்தியும் தளர்த்தியும் பார்க்கும்போது ஆள்காட்டி விரலில் உணர்வது வாதம் என்றும், நடுவிரலில் உணர்வது பித்தம் என்றும், பவுத்திர விரலில் உணர்வது கபம் என்றும் கொள்க; எ - ம். (16)

17. செப்பவாண் மக்களுக்குச் சேரவலக் கையாகும்
ஒப்ப வரிவையார்க் கோதவிடம்—தப்பாது
அறைந்தார் முனிவ ரளவுகேள் தோற்றும்
விரைகோ துமையாம் வியந்து.

(க - து) ஆண் மக்களுக்கு வலக்காத்திலும், பெண்களுக்கு இடக்காத்திலும் நாடி பார்த்தல்வேண்டும். இன்னும் அதன் அளவை நோக்க ஒரு கோதுமை விரைப் பிரமாணம் எழுந்தடங்கக்கூடிய வேகமுடையதாக இருக்கும்; எ - ம். (17)

18. வியந்த பசியோர்க்கும் வீணாய்த் திரிந்தார்க்கும்
பயந்தே யிருந்தார்க்கும் பாரில்—மயங்கி
மடவார்மோ கத்தார்க்கும் மாறுக்கோ பிக்கும்
திடமில்லை நாடி திறம்.

(க - து) அதிகமாகப் பசியினால் வருந்தும்போதும், வெய்யலில் திரிந்தபோதும், பயந்து இருந்தபோதும், இன்னும் ஸ்திரிபோகம் அனுபவித்த பின்னும் ஆற்றமுடியாத கோபமுண்டாயிருக்கும்போதும் நாடியின் நடை நன்றாய்ப் புலப்படாது; எ - ம். (18)

19. திறமான லாகிரிக்கும் தீண்டுவிஷத் தார்க்கும்
துறந்த தவத்தார்க்கும் துய்ய—சிரத்தி
னழலை யொழியநீ ராடினர்க்கும் நாடி
கழற முடியாது கண்டு.

(க - து) லாகிரிகள் கொண்டபோதும், விஷம் தீண்டியிருக்கும் போதும், தவம் பூண்டிருக்கும்போதும், ஸ்நானஞ் செய்தபோதும், நாடியின் நடையைக் கண்டு சொல்லமுடியாது; எ - ம். (19)

20. கண்டத்தின் மேலேதான் காணும் பிணிகளையும்
விண்ட இடைக்கீழ் வியாதியையும்—பண்டையோர்
நாடியுணர்த் தாவதன்று நாட்டியுரை செய்வததைத்
தேடி யுணர்த்தினேன் தேர்.

(க - து) கண்டத்திற்கு மேலாகிய சிரத்தில் வரும் நோய்களையும், இடையின் கீழாகிய கால்களில் வரும் நோய்களையும் நாடியால் பரீட்சித்துக் கூறமுடியாதென்று பெரியோர் உரைத்ததை அறிவாய்; எ - ம். (20)

---

## நாடி

---

21. தேரும்வா தந்தான் தெறிப்போடு மீறுங்கால்
பாருமுடல் நொந்து பதறுமே—சார்வின்றி
யின்னும் நெகிழ்ப்புற் றிறுகியே தான்வாங்கும்
அன்னஞ்செல் லாதே யறி.

(க - து) வாதத்தில் வாதமாகில், உடல் நொந்து வலிக்கும், உடல் பதறும், நெகிழ்ச்சியாய்ச் சுருங்கும், ஆகாரம் செல்லாது; எ - ம். (21)

22. அறியும்வா தத்தில் அடுத்தபித்த மாயின்
குறியதுதான் வாயுங் குழறும்—நெறியாக்
குளிருங்கால் வீங்கும் குடல்புரட்டும் விம்மித்
தெளிவில்லை புத்தியெனச் செப்பு.

(க - து) வாதத்தில் பித்தமாயின் வாய் குழறிப்பேசும், கைகால்கள் குளிரும், வீங்கும், குடல் விம்மிப் புரட்டும், அறிவு மாறுபடும்; எ-ம். (22)

23. செப்பும்வா தத்தில் செறியக் கபமாயின்
ஒப்பவலி தேகமெங்கும் ஓதவே—தப்பாது
வீங்கும் தலையிடிக்கும் வேண்டியூண் செல்லாது
தேங்குங் குணந்தவறும் தேர்.

(க - து) வாதத்தில் கபமாயின் உடல் முழுவதும் வலியுண்டாகும், வீங்கும், தலைநோ யுண்டாகும், அன்னஞ் செல்லாது, குணங்கள் வெவ் வேறாகத் தோன்றும்; எ-ம். (23)

24. தேருநற் பித்தமதில் சேரவது மீறுங்கால்
சாருந் தலைசுழற்சி சாற்றக்கேள்—ஊருற்ற
வாந்திமிகுந் தேகம் வறளும் வெளுப்பாகுஞ்
சாந்த முடல்வீங்குஞ் சாற்று.

(க - து) பித்தத்தில் பித்தமாயின் தலை கிறுகிறுக்கும், வாந்தி யுண் டாகும்; மேனி அத்திப்போல் உலர்ந்து வற்றும், வெளுக்கும், பின்பு வீக்கமுண்டாகும்; எ-ம். (24)

25. சாற்றபித் தத்தில் சதுராக வாதமுற
ஏற்றக்கால் கைபிடரி எங்குமே—வேற்றுமையாய்க்
குத்துங் குழறும்வாய் கோபமிகும் காயுமனல்
வற்று முடலம் வழுத்து.

(க - து) பித்தத்தில் வாதமாயின் கைகால் பிடரி முதலியவை களில் குத்தலுண்டாகும்; கோபமுண்டாகும்; சுரங்காயும்; உடல் வற் றும்; எ-ம். (25)

26. வழுத்தவே பித்தத்தில் வந்தகப மாயின்
விழுத்த குழறும்நா வீணாய்—முழுத்தும்
பிடரி·வலியும் பெரும்வாந்தி விக்கல்
தொடரும் வயிற்றுவலி சொல்.

(க - து) பித்தத்தில் கபமாயின் வாய்குழறும், பிடரி வலிக்கும், வாந்தியும் விக்கலும் உண்டாகும்; இன்னும் வயிற்று நோயுங்காணும்; எ-ம். (26)

27. சொல்லுங் கபத்தில் தொடர வதுவாயின்
வெல்லும் விழிதானே மேனோக்கிக்—கொல்லுமே

தேகம் மிகக்குளிரும் தேரவன லேருது
ஆகுமுடி வென்றே யறி.

(க - து) கபத்தில் கபமாயின் விழிகள் மேனோக்கி வட்டமிட்டு உயிர் பிரியும்; தேகம் குளிரும். எவ்வித சிகிச்சையானும் உஷ்ணம் உண்டாகாது. இதுவே முடிவுகாலத்தில் தோன்றும் குறிகள்; எ - ம். (27)

28. அறியக் கபந்தன்னி லாம்வாத மாகில்
நெறியும் நரம்புவலி நேரும்—பறிந்துதான்
நோக்கும் விழிமேலே நோகும் பிடரிகுன்றி
ஏக்கக் குழறும்வாய் எண்.

(க - து) கபத்தில் வாதமாயின் நரம்புகளில் வலியுண்டாகும், விழி மேலே வட்டமிடும், பிடரி நோகும், வாய் குழறும்; எ - ம். (28)

29. எண்ணக் கபந்தன்னில் ஏற்றபித்தந் தானுகில்
உண்ணக் கசக்கும் உறுங்கோழை—திண்ணமதாய்க்
கண்பீளை சாரும் கருத்தறியா வாய்பிதற்றும்
மண்ணி லிவைகுறியா மற்று.

(க - து) கபத்தில் பித்தமானால் உண்பது கசக்கும், கபம் கட்டும், கண்பீளை சாரும், வகைதப்பி வாய்குழறும்; எ - ம். (29)

---

## அசாத்திய நாடிக்குறி

30. மற்றுநல் வாதமு மாருத பித்தகபம்
முற்று மவைமுரணு மொய்ம்புடனே—உற்றிருக்கில்
நீதியாய் நோயில்லை நின்றவவை மாறிடவே
பேதிக்கும் நாடியென்று பேசு.

(க - து) வாதம், பித்தம், கபமுதலியவை வேற்றுமை யடையாமல் வலிவாக (தன்னிலைமையில்) இருப்பின் நோய் என்பதே கிடையாது. அவை வேறுபடுமேயாயின் நாடிகளும் பேதப்படும்; எ - ம். (30)

31. பேசக் கபமீறிப் பின்பற்ற பித்தமதைப்
பாசவுல காசையறும் பண்டிதரே—வாசலிதே
நாடுவதேன் வாதத்தை நாடுங் கபமாயின்
ஓடுமுயிர் நாழிகையி லொப்பு.

(க - து) கபம் அதிகப்பட்டுப் பித்தத்தைப் பற்றுமாயின் அன்றே உலகாசையொழியும்; பித்த மடங்கினபின் கபமானது வாதத்தை நாடுமாயின், ஒரு நாழிகையில் இறுதிவரும்; வைத்தியர்களுக்கும் அங்கு அவிழ்தம் கொடுக்க வேண்டிய காரணமில்லை யென்று அறிவாய்; எ - ம். (31)

32. ஒப்பநா டிப்பதற வுற்றுநடுங் கச்சுவைநாச்
செப்ப வறண்டு செயலற்றுத்—தப்பவிழி
மேனோக்கக் கண்டத்தில் மீதுகபம் நின்றுழலுங்
காநோக்கச் சாராதே கண்டு.

(க - து) நாடி பதறவும், நடுக்க முறவும், நாவரண்டும், கண்விழிகள் அசையாது மேல் நோக்கவும், தொண்டையில் கபம் கட்டியிருக்கவும் நேர்ந்த காலம் வைத்திய சிகிச்சைக்கு வசப்படாத காலமென்றறிக; எ - ம். (32)

33. கண்டபித்தந் தானடங்கக் காட்டு மருந்தினால்
கொண்ட பயனில்லை குற்றமோ—டண்டுகபம்
ஓடப் பரிகாரம் ஓதுவதில் லைத்தெரிய
தேடவா தம்மோடிற் செய்.

(க - து) பித்தம் அடங்கினபின் மருந்து கொடுத்தாலும், எல்லாம் அடங்கிக் கபம் நடக்கும் காலத்தில் அவிழ்தம் கொடுத்தாலும் வியர்த்தமாகும். * வாதம் சிறிதேனும் நடக்கும் பரிகாரம் செய்யக் கடவாய்; எ - ம். (33)

34. செய்யமூன் றென்றுகச் சேர நடந்திடினும்
பைய வடங்கிடினும் பற்றற்று—நெய்ய
வரணைவாற் போற்றற்று ஞர்ந்திடினு மக்காற்
சுரணையற் றுவிபோஞ் சொல்.

(க - து) மூன்று நாடிகளும் சேர்ந்து ஒரேவிதமாக நடப்பினும், அல்லது அடங்கினும் அல்லது வெட்டுண்ட அரணைவால்போல் துடிக்கப் பெறினும் விரைவில் இறுதியடையுங் காலமென்று சொல்; எ - ம். (34)

---

* இது பூர்வ நூலாசிரியருடைய கருத்தாயினும், சில சந்தர்ப்பங்களில் வாதம் அடங்கின பின்னும், பித்தமுங் கபமும் முறையே அடங்க ஆரம்பித்த பின்னும் திருவருளாற்றுனே அவிழ்த சிகிச்சையினால் வாதம் மீண்டு மெழுந்து குணமடையு மனுபவ திருஷ்டாந்தத்தான் முடிவுகாலம் வரையில் அவிழ்தப் பிரயோகம் செய்து பார்ப்பதே அறிவிற் சிறந்த பண்டிதரின் கடமை.

# தோஷக் குறிப்பு

பொது

35. கையின் மணிக்கட்டைக் காட்சி நுதனடுவில்
ஐய மறவைத் தனிவிழியான்—மையின்றி
நோக்கிற் பெருத்து நுவலளவிற் காட்டுமேல்
காக்குமுயிர் போய்விடுமே காண்.

(க - து) கையின் மணிக்கட்டைப் புருவநடுவில் நாசியோடு சேரும் படி வைத்து இரண்டு விழிகளால் நோக்கும்போது, அக்கரமானது தன்னளவிற் சிறுத்துக் காணில் நலம், பெருத்துக் காணில் மரணம் நேருமென்று அறிவுடையோர் கூறுவர்; எ - ம். (35)

36. பிணியாளன் றன்செவியைப் பின்னின்று கிள்ளத்
திணிதோள் துடியாது தோன்றில்—அணியிழாய்
எச்சிற் றனைத்துப்பி னேகாது வாய்தவறின்
இச்சை யுயிர்போ மியம்பு.

(க - து) பிணியாளனுக்குப் பின்புறமாக நின்று திடுக்கென்று அவன் செவியைக் கிள்ளும்போது அவனது இரண்டு தோள்களும் துடிக்கின் நன்று. அங்ஙனம் துடியாவிடின் மரணத்திற் கேதுவாம். அன்றியும், நோயாளி எச்சிலைத் துப்பும்படி செய்யும்போது சிதறிவிழாமல், வாயோடு இலயித்துநின்றால் தீதாகும்; எ - ம். (36)

37. முதுகுபுறங் கைகாலு முன்னுறவே வீங்கிக்
கதமுடனே நெஞ்சினிலுங் காணில்—குதமோடு
கோச மிகவீங்கிக் கூறுமவை சில்விடினும்
நாச மவர்க்கெனவே நாடு.

(க - து) முதுகுபுறம் கைகால் வீங்கி நெஞ்சவரை செல்லினும், குதமும் கோசமும் வீங்கிச் சரீரம் குளிர்ந்திட்டாலும் நற்குறியல்லவென்று அறிவாயாக; எ - ம். (37)

38. வீங்கிக்கால் கைப்புறமும் விக்கி விளைப்போடு
ஏங்க மலநீரும் ஏந்திழையே—ஓங்கியிட
வாந்தி யுடனே வயிறும் பொருமுமேல்
சாந்தி யரிதென்றே சாற்று.

(க - து) கால்கை மேற்புறமும் வீங்கி, விக்கல், மயக்கம், மலசலம் அடைத்தல், வாந்தி, வயிற்று உப்பிசம், நாவறட்சி இத்தகைய தோஷங்கள் காணுமாயின் இதற்குப் பரிகாரம் கஷ்டசாத்தியமென்று கூறுவர்; எ - ம். (38)

39. நாசிவளி தண்ணெனினும் நல்லதிரு வாயினின்றும்
வீசுவளி வெம்மையுற வீறிடினும்—பாசமிகு
தாகம் மிகுந்திடினுஞ் சாருந் துடியிடையாய்
தேகம் விழுந்திடுநீ தேர்.

(க - து) நாசியினின்று வரும் சுவாசம் குளிர்ந்து இருப்பினும் வாயினின்று வரும் சுவாசம் உஷ்ணமாக இருப்பினும், தாக மதிகரிப்பினும் மரண மென்க; எ - ம். (39)

40 படுக்கப் பொருந்தாமல் பல்லுங் கறுத்துத்
தொடுக்கவிழி மேற்சுழன்று தோன்ற—வடுத்தே
உயர்முகடு நோக்க வுரன்கெட்டே யாவி
துயருற்று நீங்குமாஞ் சொல்.

(க - து) படுக்கையிற் சரீரம் பொருந்தாமலும், பற்கள் * ஈறு உதடு முதலியவைகள் கறுத்திடினும், கண் விழிகள் சுழன்று வட்டமிடினும், ஜீவனானது மயங்கி நீங்குமென்று கூறுவாய்; எ - ம். (40)

41. தன்னறிவு தப்புந் தனைதூக் கெனமொழியும்
பன்னிப் பெருங்குரலே பண்பாக்கும்—உன்னியிடின்
நீர்தடித்து நெய்யாகும் நீளெரியி லும்மெரியும்
பார்க்கி லுலகொழியும் பண்பு.

(க - து) நோயாளியின் அறிவு மாறித் தூக்கு தூக்கு என்னும் பதத்தைப் பிரயோகிப்பினும், விகாரமான ஒலியோடு பெருங்குர லிடினும், மரணம் வரும். நீரானது நெய்போலத் தடித்திருப்பினும், நெய்யோடு உறவாகும் தன்மையைப் பெற்றிருப்பினும், அதனை ஒரு வர்த்தியில் தோய்த்துக் கொளுத்தின் எரிந்தாலும், உலகைவிட்டொழியுங் காலக்குறி யென்பர்; எ - ம். (41)

42. தாங்கிமல நீரும் தவிக்க வுடற்குளிர்ந்
தேங்கி யினத்தாரை யெத்திடினும்—ஒங்குகபம்

* சீதளம் மிகுங்காலத்தில் உதடு ஈறு இவைகள் கறுத்த பின்னர் பற்கள் கறுக்கும் சுபாவ முடையன ஆதலால், இங்ஙனம் கூறப்பட்டது.

கட்டிநெஞ்சில் நின்றுழலக் கண்ணீர் ததும்பிடினும்
கட்டுவிடுங் காலமது காண்.

(க-து) மலசலம் அடைத்து, உடலும் குளிர்ந்து, சுற்றத்தாரைப் பேரவாவுடன் நோக்கும்; தொண்டையில் கபம் கட்டி இழுப்புண்டாகும்; கண்ணில் நீர் வடியும்; அக்காலமானது தேகத்திற்கும் உள்ள சம்பந்தம் நீங்கிச் சரீரத்தை வீழ்த்தும் காலமெனக் காண்பாயாக; எ-ம். (42)

43. வண்செவியோ டேநாசி வல்லென்று தண்ணுறினும்
தண்புயங்கள் நன்கு சரிந்திடினும்—திண்மார்பு
மேடிடினும் கண்மலரில் வெண்மாசி தோன்றிடினும்
தேடுவரே மன்றமர்கள் சென்று.

(க-து) நோயாளியின் செவிகளும் மூக்கும் விறைத்துச் சில்லென்று இருப்பினும், புயங்கள் சரிந்திடினும், மார்பு உயர்ந்திருப்பினும், கண்களின் மணிகள் வெளுத்திருப்பினும் உயிருக்குக் கெடுதிவரு மென்பர்; எ-ம். (43)

44. ஓசை யடங்கி லுயிர்போமே யேழ்நாளில்
தேசில் விழியடங்கில் தேரைந்தில்—நாசி
யுயிர்ப்படங்கில் மூன்றி லுயர்நா விரண்டி
லயர்க்கு முடல்வெறுக்கி லன்று.

(க-து) நோயாளியின் செவிகளை இரண்டு கைகளாலும் மூடி உற்றுக் கவனித்தால் அவனுக்குக் கடலொலிபோன்ற ஓங்கார ஒலி கேளாதிருப்பின் ஒரு வாரத்திலும், கண்கள் பார்வை யிழப்பின் ஐந்து நாட்களிலும், நாசி ஒரு பொருளையும் மோவாவிடின் மூன்றுநாட்களிலும், நாக்கு ருசியை அறியாவிடின் இரண்டுநாட்களிலும், உடலில் ஸ்பரிச வுணர்ச்சி யொழியின் ஒருநாளிலும் இறுதி வருமென்று ஐம்புலன்களின் வகையினை உணர்ந்த ஆன்றோர் கூறுவர்; எ-ம். (44)

45. கறுத்துமலம் போயின் கலைமாறு தேகின்
வெறுத்துப் புரண்டுமண் வேண்டின்—செறித்துமலம்
நீரிற்கு முன்னர் நிகழ்ந்திடிற் றீதென்று
பாரித் துரைத்தனரே பார்.

(க-து) நோயாளியின் மலம் கறுப்பு நிறமாகக் கழிந்திடினும், இடகலை பிங்கலை மாறாமல் ஒன்றாகவே ஓடிடினும், படுக்கையை வெறுத்துப் புரண்டு மண்ணின்மேல் விச்சைகொண்டு படுத்துக் கொள்ளினும்,

நீர் போவதற்குமுன் மலம் போகுமாயினும் தீமை விளையுமென்று தொல்லாசிரியர் துணிந்துரைத்தனர்; எ - ம், (45)

46. மண்ணி விறந்திட்ட மக்க ளுடன்பேசல்
வண்ண விமானந்தான் வந்ததெனல்—நண்ணினர்
தூத ரெனவுரைத்தல் தூய நிலங்கிற
லோது மிவையாகா வுன்.

(க - து) இறந்த பந்துக்களோடு பேசுதல், விமானம் வந்ததென்று தாவிச் செல்லுதல், யமதூதர் வந்துவிட்டார் என்று பலகால் சொல்லுதல், நிலத்தைக் கீறுதல் ஆகிய இக்குறிகள் தீமையைப் பயக்கும் என ஆயுர்வேத முணர்ந்த பெரியோர்களால் எண்ணப்பட்டது; எ - ம். (46)

ரோகங்களின் இறுதியி லுண்டாகும் தோஷக் குறிப்பு

47. வெப்புப் பிணியதனில் வெம்மேகத் தால்வருந்தின்
தப்பு மிகைநீரே தானிறங்கின்—செப்பும்
கிராணியிற் பாண்டில் கிளநீர்ச் சுருங்கிற்
பிராணன் பிரியுமெனப் பேசு.

(க - து) நோயாளிக்குச் சுரரோகத்தினும், மேகரோகத்தினும் சிறுநீர் அதிகரித்து இறங்கினலும், கிராணி பாண்டு முதலிய ரோகத்தில் சிறுநீர் இறங்குதல் குறைந்திடினும் உயிர்க்குத் தீது என்று உரைப்பது ஆயுள் வேதியர் சம்மதமாகும்; எ - ம். (47)

48. சந்நி யதிசாரஞ் சாருங்கி ராணிகுன்மம்
உன்னி சயகாசம் உட்காச்சல்—துன்னியே
போக்கும் விஷசோபை பொல்லாத நீரிழிவில்
வீக்கங்கூ டாதென்றே விள்.

(க - து) சந்நி, அதிசாரம், கிராணி, குன்மம், க்ஷயகாசங், அஸ்திசுரம், விஷசோபை, நீரிழிவு முதலிய ரோகங்களில் வீக்கம் உண்டாகக்கூடாது. அங்ஙன முண்டாயின் அசாத்தியக்குறியென அறிவாயாக; எ - ம். (48)

49. பாண்டு பிரமேகம் பன்வாத சூலைகுன்மம்
வேண்டா க்ஷயஞ்சந்நி வெண்சோபை—நீண்ட
அதிநீரே காமாலை யானபிணி தம்மு
ளதிசார மாகா தறி.

(க - து) பாண்டு, பிரமேகம், வாதசூலை, குன்மம், க்ஷயம், சந்நி, சோபை, நீரிழிவு, காமாலை முதலிய பிணிகளில் வருந்தும்போது பேதி யுண்டாகில் துன்பமென்றறிக; எ - ம். (49)

50. மந்தார காசம் வருவும் பெரும்பாடு
தொந்த வதிசாரம் தோகையே—வந்தணுகும்
கர்ப்பச்சூ லைப்பிளவை காணிரத்தப் பித்தமதில்
பற்றுவாய் வுத்திராப் பார்.

(க - து) சுவாசகாசம், பெரும்பாடு, அதிசாரம், கருப்பச்சூலை, பிளவை, இரத்தபித்தரோகம் முதலியவைகளின் வாயு சம்பந்தமான வேறு பிணிகள் உண்டாகக்கூடாது; அங்ஙனமாயின் கஷ்டசாத்திய மென்பர்; எ - ம். (50)

51, சந்நி விஷசோபை சார்குன்மம் நீரிழிவு
துன்னும் கிராணி சுரம்பேதி—பன்னுபிர
மேகம் க்ஷயமிவற்றுள் மூச்சுவிக்கல் மேல்வீக்கம்
ஆகி லுயிர்போ மறி.

(க - து) சந்நி, விஷசோகை, குன்மம், நீரிழிவு, கிராணி, சுரம், அதிசாரம், பிரமேகம், க்ஷயம் இந்த ரோகங்களில் சுவாசம், விக்கல், வீக்கம் முதலியவைகள் உண்டாயின் தீமை என்பர்; எ - ம். (51)

சந்நிபாதங்களினு லுண்டாகும் தோஷக் குறிப்பு

52. சார்தேக மீதெரிவு சந்நிசுரம் நாவறட்சி
சேர்தாகம் வாந்திச் சிறுவிக்க—வார்ந்துடனே
பொல்லா மயக்கம் புகல்பிரமை வாய்பிதற்ற
லெல்லாந்தீ மைக்குறியா மே.

(க - து) தேகத்தில் எரிவு, சந்நி சம்பந்தமான சுரம், நாவின் வறட்சி, அதனுலுண்டான அதிதாகம், வாந்தி, விக்கல், மயக்கம், பிரமை, வாய்பிதற்றுதல் முதலிய குறிகளெல்லாம் கஷ்ட சாத்தியத்தை அறிவிப்பனவாம்; எ - ம். (52)

53. தேகங் குளிரத் திகைத்து மிகப்பேசத்
தாக முடன்பேதி சாரிருமல்—வேகமுள
விக்க லிளேப்பு விரும்ப வதில்வாந்தி
மிக்க கொடிதாய் விளம்பு.

(க - து) தேகம் குளிர்ச்சியடையினும், பிரமையுடன் வாய் பிதற்றினும், தாகம் - பேதி - இருமல் - விக்கல் - இளைப்பு - வாந்தி முதலியவைகள் ஏற்படினும் மகா துன்பத்தைத் தெரிவிக்கும் அறிகுறியெனச் சொல்லுவார்; எ - ம். (53)

54. நாவுதடும் தான்வெடித்து நச்சுசுரங் காயவதில்
ஏவுமிரத் தக்கழிச்சல் எய்ப்படைய—தாவுவிக்கல்
சித்தப் பிரமை செவிமந்தம் பைந்தொடியே
சுத்தப் பிசகாகுஞ் சொல்.

(க - து) நாவும் உதடும் வெடித்துக் காண, சுரம் மேலிட்டு இருக்க, அதனுடன் இரத்தபேதி, விக்கல், சித்தப்பிரமை, காது மந்தம் முதலிய இலட்சணங்கள் ஏற்படின் பரிகாரத்திற்கு வழி மறிக்கின்ற குறிகளெனக் கூறுவர்; எ - ம். (54)

55. தேக வலிமூர்ச்சை சேருமிரு மல்வாந்தி
தாகமுடன் விக்கல் சார்மயக்க—மாகவதில்
மார்பு தலைநோயும் மாளா நரம்பிழுப்பு
சார்குறிதீ தென்றேநீ சாற்று.

(க - து) தேகமாதி யெங்கும் ஓயாவலி, இருமல், வாந்தி, தாகம், விக்கல், மயக்கம், மார்பு, தலை முதலிய இடங்களில் நோய், நரம்பு இசிவு இவைகள் எல்லாம் ரோகிக்கு நேருமாயின், சுகமடைவதற்கு இடையூறான குறிகளெனச் சொல்லுவார்; எ - ம். (55)

அதிசாரரோகத்தினு லுண்டாகும் தோஷக் குறிப்பு.

56. ஊன்போ லடுத்துமலம் ஓகோ கழிந்திடினும்
தேன்போ லதன்சாயல் சேர்ந்திடினும்—மேன்மேலே
விக்க லுடனிளை வீக்க மதில்வேர்வை
துக்கமுடைத் தென்றே துணி.

(க - து) மாமிசத்தைப்போல் மலங்கழிந்திடினும், தேன்சாயலாகப் பேதியாகிடினும், இன்னும் - விக்கல் - இளைப்பு - வீக்கம் - வியர்வை முதலிய குறிகளுண்டாயினும் துன்பத்தை எளிதி லுண்டாக்கு மென்பர்; எ - ம். ()

57. சூற்கொண்ட மாதர்க்கும் சொல்மகவை யீன்றார்க்கும்
மேற்கொண்டு பேதி மிகுந்திடினுஞ்—சேற்கண்ணாய்
ஞாலத்து நற்சிகிச்சை நன்மையிலை யாமாயின்
காலந்தாழ் வென்றே கருது.

(க-து) கருப்பமாக இருக்கும் ஸ்திரீகளுக்கும், பிரசவித்த ஸ்திரீகளுக்கும், சீதபேதி அதிசாரம் முதலிய ரோகங்கள் உண்டானபோது எளிதில் மருத்துவத்திற்கு வசப்படாவிடின் பெரும்பாலும் கஷ்டசாத்தியமென்றே கற்றுணர்ந்த ஆயுர்வேத நிபுணர் கூறுவர்; எ-ம். (57)

58. உண்டவுண வுஞ்செறியா தூண்மிகுதி செல்லாது
கொண்டதோர் வாயுங் குடலிற்ற—னண்டிப்
புரண்டு வலித்தே பொருமிவரும் பேதி
பிரண்டு வழிதப்பும் பேசு.

(க-து) உட்கொண்ட ஆகாரம் நன்றாய்ச் செறியாமலும், ஆகாரம் அரோசிகப்படினும், இவற்றுடன் வாயுவானது குடலிற்றங்கிப் புரண்டு வலியுடன் பேதியாகுமாயின் கஷ்டசாத்தியமெனக் கூறுவர்; எ-ம். (58)

மேகரோகத்தி லுண்டான தோஷக் குறிப்பு.

59. மேகத்தில் நீரிழிவு மேவுமதில் வாதநோய்
வேகவா தத்துள் வயிற்றுளைவு—சோகவிக்கல்
பன்னுவிக்கல் தன்னிற் பகரிளைப்புப் பாங்கதனிற்
பின்னிளை யாகாது பேசு.

(க-து) மேகரோகத்தில் நீரிழிவும், நீரிழிவில் வாதரோகமும், அவ்வாத ரோகத்தால் வயிற்று வலியும் விக்கலும், இதனுடன் இளைப்பு-மேல் சுவாசம் காணப்படின் தீமையென்க; எ-ம். (59)

60. நீரிற் பிளவை நிகழ்பிளவை யில்தாகம்
ஒருமதில் தேகத் துறுமனலுங்—தேருமதில்
சோரு மயக்கமுஞ் சொல்மயக்கத் தில்வேர்வை
ஆரிற்றீ தாமென் றறி.

(க-து) இன்னும் நீரிழிவில் பிளவையும், பிளவையில் தாக மிகுதியும் தேகவனலும் மயக்கம் வியர்வை முதலிய குறிகள் ஒன்றன்பின் ஒன்றாக உண்டாயின் தீயகுறிகளென்று அறிவாய்; எ-ம். (60)

61. வேர்வை தனிற்கபமும் மேவுமதில் விக்கல்நோய்
கார்முகில்நேர் கூந்தலாய் கண்டிடுமேல்—சீர்கொள்
மருத்துவத்திற் றேர்ந்த மதியுடையா ராவி
தரித்திரா தென்பர் சரி.

(க - து) இன்னும் மேலே கூறப்பட்ட முறையானே வந்த நோய்கருள் வியர்வை மிகுந்தபோது கபத்தினுலுபத்திரவமும் விக்கலும் காணுமாயின் உயிர் பிழைப்பது அரிது என்று மருத்துவநூலில் மதிநுட்பம் வாய்ந்த பெரியோர் உரைப்பார்; எ - ம். (61)

க்ஷயரோகத்தி லுண்டாகும் தோஷக் குறிப்பு

62. சுரத்திற் கபநோயும் சொல்வதில் வேர்வை
இரத்த முடன்வாந்தி ஈண்டும்—பொருந்தாதே
பேதி யுடன்வீக்கம் பேசிடுங்கா லாங்கேநீ
வாதிக்க நன்றல்ல வந்து.

(க - து) சுரரோகத் தோடுகூடிய கபநோயும், அதில் வியர்வை மிகுதியும், இரத்தவாந்தியும் கூடாது எனினும், பேதியும் வீக்கமுமுண்டாய் விடின் மருத்துவன் வீனே அவிழ்தம் கொடுத்து வாதாடுவது நலமில்லையாம்; எ - ம். (62)

63. கபத்திற் சுரரோகம் காணுமுடல் மென்மை
சுபமன் றதிலசதி சொல்லின்—விபத்தேயாம்
பேதிக்க மெய்குளிர்ச்சி பேச மயிர்க்கூச்சம்
கோதி லிவையாய்ந்து கொள்.

(க - து) க்ஷயரோகத்தில் சுரமிகுதியும், உடல்மெலிவும் இளைப்பு ஆயாசமும் உண்டாயின் ஆபத்துக்கு இடமாம். இன்னு மிதனுடன் தேகக் குளிர்ச்சி மயிர்க்கூச்சம் முதலியவைகள் உண்டாயின் கொடியதெனக் கொள்வர்; எ - ம். (63)

64. கொள்ளு மிதனேடு கூறும்வி லாச்சந்து
விள்ள நடுமுதுகும் மீறிவலி—கொள்ளையிடத்
தோன்றின் மடமயிலே தோஷமாங் கூற்றுவனுந்
தோன்றுங் குறிகளெனச் சொல்.

(க - து) மேலே கூறப்பட்ட வரன்முறையில் வந்த குறிகளோடு விலாச்சந்து நடுமுதுகு அதிகமாக வலிக்குமாயின் யமன்போதருங் காலமென்றுணர்க; எ - ம். (64)

சோபைரோகத்தி லுண்டாகும் தோஷக் குறிப்பு

65. சொல்பித்தத் திற்சோபை சோபைதனில் வாயுதொந்தம்
வல்ல வதிற்பாண்டு வன்பாண்டில்—நல்ல
வயிற்றுக் கடுப்பு வளர்கடுப்பிற் சீதம்
பயிலிற் கெடுதியெனப் பன்.

(க - து) பித்தத்தால் சோபையும், அச் சோபைரோகத்தில் வாயு தொந்தமும், வாயுதொந்தத்தில் பாண்டுரோகமும், அப் பாண்டு ரோகத்தில் வயிற்றுக் கடுப்பும், கடுப்பில் சீதமும் தீமைக்குறிகளாக உணர்க; எ - ம்.

66. சீதந் தனிற்கபமும் சேர்கபத்தில் வீக்கலுட
னோது மயக்கமிவை யுற்றிடினு—மாதேகேள்!
கோது தனைநீக்கிக் கூறுலகோர் தாம்போற்றத்
திதி லுலகுபுகுந் தேர்.

(க - து) முன் கூறப்பட்ட குறிகளோட சீதம் வெளியாகவும், கபம்-விக்கல்-மயக்கம் முதலியவை படிப்படியாகத் தொடரினும் இவ்வுலக வாழ்வை அநித்தியமென்று வெறுத்து இந்திரபோகத்தை அடைவாரென்று அறிக; எ - ம். (66)

குன்மரோகத்தி லுண்டாகும் தோஷக் குறிப்பு

67. வாதத்திற் குன்மம் வளர்குன்மத் திற்பேதி
யாத லதிற்பொரும லாங்கதனில்—வேதனைசெய்
பொல்லாக் கபமும் புணருமதில் விக்கல்நோய்
கொல்லு மதின்மயக்கங் கூறு.

(க - து) வாதரோகத்தில் குன்மமும், குன்மத்திற் பேதியும், பேதியில் வயிற்றுப்புசமும், வயிற்றுப்புசம் கண்டபோது நெஞ்சிற் கபமும் விக்கலும் காணுமாயின் தீதென் றறிக; எ - ம். (67)

பெரும்பாட்டி லுண்டாகும் தோஷக் குறிப்பு

68. தேகத் துறமழலும் தீதா மதிலெரிச்சல்
வேகப் பெரும்பாடு வெண்ணிறமாய்ப்—போகவதில்
நாற்றமேல் மூச்சு நவிலக் கபமயக்கம்
தோற்ற வுடல்சாயுஞ் சொல்.

(க - து) ஸ்திரீகளுக்குத் தேக அழல்கொண்டு எரிச்சலுண்டாகி, மாதவிடாயிலேற்பட்ட உதிரம் வெண்ணிறமும், நாற்றத்துடனும்கூடி உள்ள காலத்தில், மார்பு படபடத்து மேல்மூச்சு, கபம், இருமல், மயக்கம் முதலிய பாதைகள் தோன்றின் அவர்களது தேகநிலைமை படிப்படியாய்க் குன்றும். பரிகாரத்திற்கும் வசப்படாதென ஆயுர்வேத நிபுணர் உரைப்பர்; எ - ம்.

---

# மருத்துவ போதம்

முத்தோஷ குணம்

69. முந்தியதோ டத்தாலே மூன்று சமயமாம்
சந்திப் பிரகோபம் சார்சமனம்—விந்தையிதி
லுற்றதோ டத்திற்கே ஓதுகுண மோராறை
முற்று முணர்ந்திடுக முன்.

(க - து) முத்தோஷங்களென ஆயுர்வேதத்தில் கூறப்பட்டுள்ள வாதபித்த சிலேத்துமம் தன்னளவிற்கு மீறுகின்றதென்று அறியக்கூடிய காலம் சந்திசமயம் என்றும், மீறிநின்றபோது பிரகோபசமயம் என்றும், அவிழ்தங்களைக்கொண்டு பரிசரித்துக் குணமாகும்போது சமனசமயம் என்றும் கூறுவர். அங்ஙனம் கூறப்பட்ட தோஷங்களுக்கெல்லாம் ஆறு குணங்களுண்டு. இதனை முதலில் கற்றுணர்வது மருத்துவன் கடமையாகும்; எ - ம். (1)

70. கொள்ளு முணவிலுமே கோதுமிகுந் தோடமுண்டு
விள்ள வதனல் விருத்திபெறும்—மெள்ளவதை
நீக்கிச் சுகமருவ நேரு மெதிர்குணத்தைத்
தாக்கிடவே யாகாரந் தா.

(க - து) உட்கொள்ளப்பட்ட அன்னபானுதிகளிலும் தீயகுணங்களிருக்கின்றன. அதனுல் தோடம்வன்மைபெறும். ஆதலால், அவைகளைக் கண்டறிந்து நீக்கிச் சுகம் பெறுமாறு தோடத்திற்கு எதிர்குணங்களையுடைய ஆகாரங்களைத் தருவாயாக; எ - ம். (2)

71. வாதங் கடுமை வறட்சியுடன் நொய்மை
சீதமுஞ் சலனம் சிதறணுவு—ஏதமுட
னிக்குணத்தோ டுற்றே யியக்கந் தருமளவிற்
றக்க பரிகாரந் தா.

(க - து) வாதமானது படினம், வரட்சி, இலேசு, குளிர்ச்சி, அசைதல், அணுத்துவம் ஆக ஆறுகுணங்களை அறிகுறியாகத் தேகத்தின்கண்பெற்று இயக்குமாதலால் இதற்குத் தகுந்த பரிகாரம் செய்தல் அவசியமாகும்; எ - ம். (3)

72. வாதண மாறுக்கும் மாறுகுண மேநோக்கின்
ஓதமிரு தீரம் உயர்பாரம்—போதரவா
யுள்ளதீ யோடுறுதி யுற்றுத் திரளாக
உள்ள குணத்தையே யூட்டு.

(க - து) முன் கூறப்பட்ட வாதகுணம் ஆறுக்கும், எதிரான குணத்தைச் சொல்லுமிடத்து மிருது, பளுவு, அக்கினி, ஸ்திரம், கட்டி முதலான குணரூபங்களையுடைய ஆகாரங்களாக உட்கொள்ளின் பரிகாரமாகும்; எ-ம்.

73. பித்தத்தின் சீர்குணத்தைப் பேசிடிலோ ராருகும்
சுத்தப் பசைதீயும் சொல்கடுமை—மெத்த
திரவம் புளியோடு சீர்கார முற்றிங்
குரமாய் நிலைபெறுமா முன்.

(க - து) பித்தத்திற்குச் சுபாவமான ஆறு குணங்களையும் விவரித்துச்சொல்லு மளவில் பசுமை, அக்கினி, குரூரம், சலரூபம், புளிப்பு, காரம் முதலிய குணங்களாக விளங்கும்; எ - ம். (5)

74. தோன்றிவரும் பித்தம் தொடரா தடங்கிடவே
சான்ற வறட்சிகுளிர் சாந்தமுடன்—ஈன்றதொரு
கெட்டி யுடனே கினிரிளப்பு கைப்பினேடு
கிட்டும் பரிகாரங் கேள்.

(க - து) உண்டாகிய பித்தமானது அதிகப்படாமல் குறைய வேண்டின் வறட்சி, குளிர்ச்சி சாந்தம், கெட்டி, இனிப்பு, கசப்பு, முதலிய குணங்களைப் பெற்றுள்ளவைகளாகப் பரிகார நிமித்தம் சேர்ப்பாயாக; எ - ம்.

75. ஐயத்தின் வன்மையா லாகுங் குணமெல்லாம்
உய்யபா ரஞ்சீதம் உற்றபசை—நைவு
மிருது வழுவழுப்பு மீறு மினிப்புக்
கருதுங் குணமாருங் காண்.

(க - து) சிலேத்துமம் வலுத்துநின்றபேது பளுவு, குளிர்ச்சி, ஈரம் மிருது, வழுவழுப்பு, இனிப்பு என ஆறு குணங்களையும் அறிவிக்க விளங்கும், எ - ம். (7)

76. சொல்லுங் கபந்தன்னைச் சோதிக்க மாறுகுணம்
வல்லலகு தீயும் வறட்சியுடன்—வெல்லக்
கடின முடனே கரகரப்புக் காரம்
படியப் பரிகாரம் பார்.

(க - து) சிலேத்துமத்திற்கு மாறுகுணத்தை ஆராயும்போது உஷ்ணம், வறட்சி, கடினம், காகரப்பு, காரம் முதலிய குணங்களைப் பொருந்தினவைகளாகப் பரிகார நிமித்தம் சேர்ப்பாயாக ; எ -ம். (8)

77. வாதமே விட்டால் மதுரம் புளியுப்பு
சேத முறச்செய்யும் சீரையான்—ஓதக்கேள் !
காரந் துவர்கசப்புக் காட்டுஞ் சுவையெல்லாம்
சாரப் பரிகாரஞ் சாற்று.

(க - து) இனிப்பு, புளிப்பு, உப்பு இம் மூன்று சுவைகளும் வாதத்தைச் சமப்படுத்தும். காரம், துவர்ப்பு, கசப்பு இம் மூன்று சுவைகளும் கபத்தைச் சமப்படுத்தும். ஆதலான், வாத கப பிர கோபமுடையார் முறையே அனுகூலமான சுவைகளை உண்டு வருதல் ஆவசியமாகும் ; எ - ம். (9)

78. பித்த மதிகரிப்பின் பேசும் பரிகாரம்
சுத்தத் துவரோடு சொல்லினிப்புச்—சத்தாகும்
கைப்புச் சுவையே கருத வதன்வீறு
எய்ப்படையு மென்றுரைத்தா ரிங்கு.

(க - து) பித்தம் அதிகமாயின் துவர்ப்பு, இனிப்பு, கைப்பு முதலிய சுவைகளை அதிகமாக உண்டுவரின் பித்தம் சமப்படும் ; எ - ம். (10)

79. புளிமா துளையோடு போற்றுங்காய் நெல்வி
க்ளிக்கவெலு மிச்சங் கருதி—யளிக்க
வொழியுமாம் பித்த முணரவதன் சத்துப்
பொழியு மதுரமாம் போற்று.

(க - து) புளிப்பு மாதுளம்பழம், நெல்லிக்காய், எலுமிச்சம்பழம் இவைகளை யுட்கொள்ளின் பித்தம் சமப்படும். இப் புளிப்புச் சுவை பித்தத்திற்கு அனுகூலமாய் விருத்தியும் குணமாக இருப்பினும் ஜீரணகாலத்தில் இனிப்பாக மாறுதல் அடையும் இயற்கை யுடையதாதலால் பரிகாரமாகக் கொள்ளப்பட்டது ; எ - ம். (11)

80. கொள்ளும் மருந்தொன்றில் கூறும் நலிதீர்ந்து
கள்ளப் பிணிவேறு கண்டிடின்கேள் !—உள்ள
மருந்தாகா தென்றே மருத்துவத்தி லான்றோர்
கருத்தமைத்துக் கூறினர் கண்டு.

(க - து) ஓர் வியாதிக்காக அவிழ்தம் கொடுத்து நிவர்த்தி செய்யும் போது, அம் மருந்தால் வேறு தோஷத்தையுடைய பிணி ஏதேனும்

உண்டாகுமாயின், அது எவ்வளவு உயர்தரமான அவிழ்தமாக இருப்பினும் சிகிச்சைக்குப் பிரயோசன மற்றதென்று மருத்துவத்தில் அதிக தேர்ச்சி யுடையவர் கூறுவா ராயினர்; எ-ம். (12)

81. கொண்ட விரேசனத்தாற் கோரு மலங்கழியா
தண்டிடினும் வாந்திபின் ருகிடினும்—பண்டிதனே!
நீட்டாதே மீண்டும் நிகழு மதன்வீறை
ஓட்ட வொருசாந்தி யோது.

(க-து) விரேசனத்திற்காக ஒரு மருந்து உட்கொண்டு அவன் சக்திக் குறைவால் பேதியாகாது ஜீரணித்துவிட்டாலும், அவன் சக்திக் குறைவால் பேதியாகாது ஜீரணித்துவிட்டாலும், அல்லது அம்மருந்தின் வேகத்தால் வாந்திபாய்விட்டாலும், மீண்டும் பேதியாகும்பொருட்டு அவிழ் தத்தைக் கொடுக்க லாகாது. தேவையாயின் காரண மறிந்து மருந்தின் வீறு தணிய உபசாந்தியாக ஏதேனு மொரு கியாழ முதலியவைகளால் பரி காரம் செய்க; எ-ம். (13)

82. பாற்குடிக்கும் மக்கடமைப் பற்றுதரங் கொட்டுதற்குத்
தேற்றிடவே நல்லபினி சேர்மருந்து—கூற்றுரும்
மென்மை நரம்பதனில் மேவவலி நேருதலால்
நன்மையிலே யென்றே நவில்.

(க-து) பால் குடிக்கும் பருவத்தையுடைய பாலர்களுக்கு உண்டா கும் அதிசாரபேதி, சீதபேதி முதலிய பிணிகளுக்கு அபினி சம்பந்தமான அவிழ்தம் கொடுத்தல் நன்றன்று. அது தற்காலம் நோயைப் பரிகரிப்பினும் பின்னர் இளமையான நரம்புகளில் வியாபித்துக் கெடுதலைச் செய்யும் குண முடைய தாதலால் ஆபத்துக்கு இடமுண்டாகும்; எ-ம். (14)

83. நேர்க்கு முயர்தங்கம் நொய்தாகப் பூத்திடிலோ
ஆக்குஞ் சுகங்கள் அறச்செய்து—ஊக்கவாண்
றன்மைக் கிழுக்காய்த் தணியா துளநோய்கள்
துன்பந் தருமென்றே சொல்.

(க-து) தங்கமானது லோகசத்தோடி முடிந்திருக்குமாயின் தேக சுகத்தைக் கெடுத்துவிடுவதுமன்றி, ஆண் தன்மையாகிய வீர்யத்தையும் குறைத்துவிடும். இன்னும் தேகத்திலுள்ள பழைய நோய்களை விருத்தி செய்து கஷ்டத்திற்கு உள்ளாக்கும்; எ-ம். (15)

84. சொல்லும் பசும்பொன்னிற் சோபிக்க நற்குணமே
நல்லாணின் வீர்யமு நன்ருமே—வல்லே

யிருதயத்தின் ரோகமுதல் ஈளைசய காசம்
கருத வினியேது காண்.

(க - து) தங்கமானது லோகசத்தில்லாமல் தனக்குரிய சிறப்புக் குணத்தோடு முடிவுபெறின் வீர்யத்தை யுண்டாக்கும். இன்னும் இருதயம் சுவாசாசயம் முதலியவற்றைப் பற்றியுள்ள பல நோய்களையும் குணமாக்கும்; எ - ம். (16)

85. காணுங்கண் ரோகம் கருத்தறியா மந்தறிவு
நாணு மிதைக்கண்டால் நல்லுறவிற்—றேணுங்கேள்!
கட்டழகு தேகங் கனவாயு ளேவிருத்தி
சட்ட மிதுவென்றார் சார்.

(க - து) நேத்திர ரோகமும், ஞாபகக் குறைவும், இம் மருந்தைக் கண்டவளவில் வெட்கி யோடும். இன்னுமிதனால் தேகம் வலுக்கும், தேஜசு உண்டாக்கும் என்று பெரியோர் சொல்லுவர்; எ - ம். (17)

86. சாரும் மதிபற்பம் சத்திருக்க பூத்திடின்கேள்!
நேரும் பலரோகம் நிச்சயமே—சேரும்
மலபந்தம் தன்னோடு மாட்சிமனே வாழ்க்கை
நலந்தரா வென்றுளத்தே நாடு.

(க - து) வெள்ளி பற்பம் லோகசத்திருக்க முடிந்தது பல ரோகங்களையும் வருவிக்கும், மலபந்த முண்டாக்கும், இணைவிழைச்சியைக் குறைத்துவிடும்; எ - ம். (18)

87. நாடுஞ் சுயவெள்ளி நன்றே குணம்பயக்க
தேடுங் கனவாயுள் சீர்மைபெறும்—ஓடுங்கேள்
வாத முடன்பித்தம் வாழ்கோப மிப்புவியில்
சேதபிர மேகமிலை செப்பு.

(க - து) விரும்பத்தக்க வெள்ளி பற்பம் சத்தில்லாமல் முடிந்திட்டால் ஆயுள்விருத்தி செய்யும், வாதபித்த பிரகோபங்களைத் தணிக்கும். நீடித்து உண்பவர்களுக்குப் பிரமேகத்தால் உண்டான எவ்வித குற்றங்களையும் பரிகரிக்கும் என்று சொல்லுவாய்; எ - ம். (19)

88. செப்புமுயர் தாம்பிரஞ் சீர்குன்ற துன்பமே
கப்பு முடல்நடுக்கும் காட்டாதே—தப்பு
வருஞ்சூலை குன்மம் வணங்காப் பிடிப்புக்
கருத்தே யுடல்நலியுங் காண்.

(க - து) தாம்பிரமானது சீர்கேடாக முடியின் உடல் நடுக்கத்தை யுண்டாக்கும். தவிர சூலை, பிடிப்பு, குன்மம், தேகங் கருத்தல் முதலிய துர்க்குணத்தை யுண்டாக்கு மாதலால் அத்தகைய மருந்தைக் கொடுக்கக் கூடாது; எ - ம். (20)

89. காணு மினிநோய்கள் கல்லடைப்புக் கட்டிசுரம்
தோணுங் கபடுநெஞ்சில் தொந்தித்தே—பூணும்
பிரமேகம் பாண்டும் பெரும்வீக்கம் வாய்க்க
வரம்பூண்ட தென்றனரே வந்து.

(க - து) இன்னும் இதனல் காணும்படியான நோய்கள் கல்லடைப்பு, கட்டி, சுரம், கபவிருத்தி, பிரமேகம், பாண்டு, வீக்கம் முதலிய பலரோகங்களை விருத்தி செய்ய வரங்கொண்டு முடிந்ததாகவே பெரியோர் கூறுவர்; எ - ம். (21)

90. வந்தக் குறைகேடு வஞ்சிக்கும் நாகமுமே
இந்தபடி மானிடர்க்கு என்றிடினும்—சொந்தகுணம்
தாபமுடன் பேதி தரும்வேர்வை வாந்தியிவை
ஆகரவிக் கென்றே யறி.

(க - து) இங்ஙனம் ஏற்பட்ட துர்க்குணங்களெல்லாம் சுத்தமிலாது முடிந்திட்ட நாகத்திற்கும் உளதெனக் கூறினும், தாம்பிரம், தாகம், பேதி, வியர்வை, வாந்தி முதலியவைகளை விசேட குணமாக உடையது என்று அறிக; எ - ம். (22)

91. அறிய ரவிபற்ப மாகச்சீ ரோங்கின்
செறியுஞ் சுரங்குட்டம் சேரும்—வெறிபித்தம்
பாண்டு சயரோகம் பற்றுஞ்சூ லைக்குன்மம்
மாண்டுபோ மென்று மதி.

(க - து) அருமைக்குணத்தோடு முடிவுபெற்ற தாம்பிரயானது சுரம், குட்டம், பித்தம், பாண்டு, சயரோகம், சூலை, குன்மம் முதலிய ரோகங்களைப் பரிகரிக்கும்; எ - ம். (23)

92. மதிக்க திரிவங்கம் மாளா திருக்கின்
விதிக்கு முடல்நடுக்கம் வீறு—செதுக்க
வரும்வீக்கம் பாண்டு வருந்துமா சூலை
பெருத்து வருமென்றே பேசு.

(க - து) வெள்வங்கம், கருவங்கம், நாகம் எனக் கூறப்பட்ட திரிவங்கங்கள் பற்ப சிந்தூரங்களானபோது லோகசத்து இருந்திடில்

தேகநடுக்கம், வீரியக் குறைவு, வீக்கம், பாண்டு, சூலை, பிடிப்பு முதலிய ரோகங்களைப் பெருத்த அளவில் விருத்திசெய்து வருத்தமுறச் செய்யும்; எ - ம். (24)

93. பேசுமிதன் தோடம் பெருக்கப் பிறங்கிடிலோ
தேசுகெடும் குட்டஞ் செறிகுன்மம்—வீசிடுமே
மேக சயரோகம் மேவும் பிரமேகம்
தாகசுரத் தோடுலவுந் தான்.

(க - து) இதனுடைய விஷமானது தேகத்தில் பிரவிர்த்தி ஆனல் தேஜசு கெடும்; குட்டம் வரும்; குன்மம், சயரோகம், பிரமேகம், தாக சுரம் முதலியவைகளால் துன்புறச் செய்யும்; எ - ம். (25)

94. தானை வங்கந் தகுதியுறுங் காலத்துக்
கோனை குட்டம் கொடும்வறட்சி—ஆனத
துர்க்கிருமி பாண்டு தொடர்மேகங் காசசய
வர்க்க மில்லையென்றே வாழ்.

(க - து) திரிவங்கமானது நற்குணத்தோடே முடியுங் காலத்தில் ரோகங்களுக்கெல்லாம் பெரிதாகிய குட்டரோகத்தையும், தேக வறட்சியையும், கிருமி உற்பவங்களையும், பாண்டு ரோகத்தையும், மேக ரோகத்தையும், சயகாசத்தையும் பரிகரிக்கும்; எ - ம். (26)

95. வாழ்மிருகந் தன்னுள் வரம்பூண்ட சிங்கம்போ
லாழ்கொண்ட மேகத்தை யாகுலிக்கும்—தாழ்வில்லையே
பித்தப் பிரகோபம் பேச விதிலுளதால்
பத்தியமா யுண்டிடவே பார்.

(க - து) வாழ்கின்ற மிருகவினங்களில் சிங்கமானது மற்ற எல்லா மிருகங்களையும் வதை செய்வதற்காக எங்ஙனம் வரம்பெற்றுப் பிறந்திருக்கின்றதோ அங்ஙனமே ரோகங்களில் மகாரோகம் என்று கூறப்பட்ட மேக ரோகங்களைப் பரிகரிக்க வரங்கொண்டு வந்ததெனக் கூறல்வேண்டும். நிற்க, இம் மருந்தினிடத்தில் சிறிது பித்தப் பிரகோபத்தை யுண்டாக்கும் சுபாவ முண்டாதலால் அதனை யொழிக்கத்தக்க பத்தியங் கோடல் சாலச் சிறந்தது; எ - ம். (27)

96. பாருமயங் கெட்டால் பலரோகம் பந்தித்துச்
சாரு முடல்குறுகிச் சத்தழியும்—நீரதனிற்
கல்லடைப்புச் சூலை கனமார்பின் தன்றுடிப்பி
னல்லல் புரியுமா மாங்கு.

(க-து) அயம் சரிவர முடியாமல் இருப்பின் பல ரோகங்களை உண்டாக்கும்; குடல் குறுகும்; வலிமை கெடும்; கல்லடைப்பு, சூலை, மார்பின் துடிப்பு முதலியவைகளை யுண்டாக்குவதுடன் ஆயுளுக்கே கெடுதியை யுண்டாக்கும்; எ-ம். (28)

97. ஆங்குப் பயன்றூக்க வாகு மயந்தன்னல்
ஓங்கு முயராவி யுண்மையிது—பாங்குடனே
வாதக் கபபித்தம் வற்ருவீக் கம்பாண்டு
சேதமுறச் செய்யுமெனச் செப்பு.

(க-து) அயமானது உயர்தரமாகச் சத்தில்லாமல் முடியுமானல் ஆயுளை விருத்திசெய்யும்; வாத பித்த கப முதலியவைகளால் உண்டான பல ரோகங்களையும், வீக்கம் பாண்டு முதலிய ரோகங்களையும் நிவர்த்தி செய்யும்; எ-ம். (29)

98. செப்பும் விஷஞ்சூலை சேர்கிருமி குட்டமுடன்
வெப்பு நவமூல வேதனைக—ளெப்படியும்
சொல்ல விடமின்றி சோக முறவோடும்
நல்ல வயந்தன்னல் நாடு.

(க-து) விஷம், சூலை, கிருமி, குட்டம், நவமூலம் முதலிய ரோகங்கள் எல்லாம் நல்லபடியான அயநீற்றினங்களால் குணமாக்கப்படும் என்று அறிவாய்; எ-ம். (30)

99. நாட்டின் வளமை நலங்குன்றிப் போனமையால்
பூட்ட மருந்ததிகம் பொல்லாதே—கேட்டுணர்வாய்
வர்க்கமாங் கற்கங்கள் மாண விருகாசு
தர்க்கம் புரியாமற் ரு.

(க-து) நாட்டின் வளமையானது பூர்வஸ்திதிக்குக் குறைவுபட்டிருப்பதினல், காலதேச வர்த்தமானத்திற்கு எற்றவாறு மருந்தின் அளவைச் சரிபடுத்திக்கொள்ள வேண்டும். முன்னூற்களில் கூறிய அளவின்வண்ணம் கொடுத்துவரின் அவை சில தேசங்களுக்குப் பொருந்தாமல் தீங்குகளை விளைவிக்கின்றன வென்பதை முன்னிட்டுச் சிகிச்சாபிரகிருதியில் தெரிந்தாண்டனுபவித்த அளவைத் தெரிந்து கொள்வாயாக. கற்கமென்று கூறப்பட்ட மூலிகை சம்பந்தமான சூரணங்கள் எல்லாம் வேளைக்கு இரண்டு விராகனெடையாகக் கொடுப்பதென்று உணர்வாய்; எ-ம். (31)

100. தானை கெந்திரசம் தார முடன்பூரம்
கோனை சிந்தூரம் கூட்டுறவே—யானல்
சிறுகுன்றி போலாஞ் சிறக்கத் தனியேல்
கறுத்த வுளுந்தளவே காண்,

(க - து) இரசம் கெந்தியெனும் அல்லது அவையுடன் தாளகம் பூரம் முதலியவைகள் சேர்ந்தேனும் சிந்தூரமாயின் சத்துரு மித்துருவாகிய சாக்குகள் சம்பந்தப்பட்டு வீறு அடங்கின நிமித்தம் வேளைக்குச் சிறு குன்றிப் பிரமாணமாகவும், அச் சாக்குகளே தனித்தனியாகச் சிந்தூரமாயின் வீரியத்தின் நிமித்தம் உளுந்து பிரமாணமாகவும் கொடுத்தல் நலமென்றறிக ; எ - ம். (32)

101. காண ரசகெந்தி காதலுற்ற சிந்தூரம்
பூணவீ ரம்வெள்ளை புக்கிடிலோ—நாணுதே
நாட்டு வுளுந்தின் நவிலு மதனளவு
தீட்டப் பிரமாணந் தேர்.

(க - து) முற்கூறப்பட்ட இரசகெந்தியினங்களில் வீரம், வெள்ளை பாஷாணம் முதலிய கடுமையான சாக்குகள் சம்பந்தப்பட்டுச் சிந்தூரமாக முடியின் வேளைக்கு உளுந்து பிரமாணம் கொடுப்பதே சாலச் சிறந்ததாகும் ; எ - ம். (33)

102. தேரு முபரசத்திற் சேர்மதஞ்சி லாசத்துச்
சேரு முயர்பவளம் செப்பிற்கல்—நாருடனே
வில்ளக் கலைசிங்கி வீறுமை சங்கினங்கள்
கொள்ள வரைப்பணமே கூறு.

(க - து) உபரசமென்று கூறப்பட்ட சாக்குகளில் கல்மதம், சிலா சத்து, பவளம், கல்நார், மான்கொம்பு, ஆமை யோடு, சங்கு இவைகளின் பற்பம் வேளைக்கு அரைப்பணவெடை வீதம் கொடுத்தல் நன்று ; எ - ம்.

103. கூறும் படிகாரம் குற்றமில்லாச் சோற்றுப்புச்
சீறு மிணங்கன் திரிசாரம்—வீறுமன்ன
பேதிப் பொரிகாரம் பேசுங்கல் லாங்கருடன்
சாதிக்க ஓர்பணமே சாற்று.

(க - து) படிகாரம், சோற்றுப்பு, வெடியுப்பு, சர்ஜசாரம், எவாச் சாரம், நவாச்சாரம், அன்னபேதி, வெங்காரம், கருடக்கல் இவைகளின்

நீற்றினங்கள் வேளைக்கு ஓர் பணவெடை வீதம் கொடுத்தலென் றறிக ; எ - ம். (35)

104. சாற்ற வயக்காந்தம் சத்துமிகு மண்டூரம்
ஆற்றச்சிந் தூர மடரின்கேள்—போற்றதனில்
குன்றியெடை மூவரையே கொள்ளும் விதிமுறையால்
நன்றென் றுளந்தனிலே நாடு.

(க - து) அயம், காந்தம், மண்டூரம் இவைகள் சிந்தூரங்களாக முடியின் வேளைக்கு $1\frac{1}{2}$-குன்றிப் பிரமாணம் கொடுத்தல் நல்ல பயனை யுண்டாக்கும் என்று அறிவாய் ; எ - ம். (36)

105. நாடு மயக்காந்த நல்ல மருந்தோடு
ஓடும் ரசகெந்தி ஊர்ச்சிதமாய்க்—கூடுங்கால்
செங்குன்றி தன்னளவே சேர்க்கக் கடமையெனச்
செங்கமல நன்முகத்தாய் செப்பு.

(க - து) அயக்காந்தம் என்னும் சிந்தூரத்தோடு ரசம், கெந்தி, தாளகம், வீரம், பூரம் முதலியவைகள் சம்பந்தப்பட்டுச் சிந்தூரமாக முடிவு பெறின் ஒரு குன்றிப் பிரமாணம் கொடுப்பது கடமையாம் ; எ - ம். (37)

106. செப்பத் திரிவங்கம் சிந்தூர மாகிடினும்
கப்பி வெளுத்திடினுங் காண்குன்றி—ஒப்பவிடை
வெள்ளிசுய தங்கம் வெளுத்துச் சிவந்திடினும்
கொள்ள உளுந்தளவே கூறு.

(க - து) கருவங்கம், வெள்வங்கம், நாகம் முதலிய லோகங்கள் பற்பம் அல்லது சிந்தூரமாகின் குன்றிப் பிரமாணமும், வெள்ளி தங்கம் முதலியவைகள் பற்பச் சிந்தூரங்களாகின் உளுந்து பிரமாணம் உட்கோடல் நன்றெனக் கூறுவாய் ; எ - ம். (38)

107. கூறுந் திரிவங்கம் கொள்கார மேவிடிலோ
கோரு முளுந்தளவே கொண்டிடாய்—சீருடனே
தங்கம் மதிலோகம் தானுகி லோரரிசி
பங்கமிலை யுட்கொள்ளப் பார்.

(க - து) கருவங்கம், வெள்வங்கம், நாகமிவைகள் சுன்னங்களாக முடியின் வேளைக்கு உளுந்தளவாம் ; இவ்வண்ணமே தங்கம் வெள்ளிகாரத் தோடு சுன்னமாயின் அரிசி எடை உட்கொள்ளலாம் ; எ - ம். (39)

108. காரிபுதன் திங்கள் கருதமருந் தாகாது
பாரினிற் சுங்கன் பரிகாரம்—நேரன்று

தேரகுரு சேயுந்தான் தீதில்லை யென்றாலும்
பேரருக்கன் நன்றெனவே பேசு.

(க-து) சனி, புதன், திங்கள் ஆகிய இவ் வாரங்களில் மருந்து உட்கொள்ளல் ஆகாது. வெள்ளிக்கிழமை உட்கொள்ளின் பிணி மிகுதிப் படும். வியாழன் செவ்வாய் இத்தினங்களில் மருந்து கொள்வது நன்று. ஆயினும், ஆதிவாரம் எல்லா வாரங்களிலும் சிறந்ததாகும்; (40)

109. தொடுத்த பிணியாளர் தொல்லைவினை போக்க
படுக்கத் திசைகானின் பாரில்—வடக்காகா
உத்தமங்கி ழக்காம் உயிர்வளர்த் தெற்காகும்
மத்திப மேற்கா மதி.

(க-து) பிணியால் வருத்தமுற்றவர்கள் தம் நோயைப் போக்கத் தலைவைத்துப் படுக்கவேண்டிய திசைகளில் வடக்கு ஆகாது; நோய் அதிகரித்து உயிர் பிரியுமென்பர்; கிழக்கு உத்தமமானதென்றும், தெற்கு ஆயுளை விருத்தி செய்யுமென்றும், மேற்கு மத்திமமென்றும் அறிவாய்; எ-ம். (41)

வைத்தியன் கவனிக்கவேண்டிய சகுனம்

110. செந்துகிலை மேற்கொண்டு செங்கைகாற் றன்சொரிந்து
வெந்தந்தத் தைக்குற்றி விண்பார்த்துச்—சந்தமுற
வைத்தியன் நெய்யாடும் வேளைகளில் போயழைக்கில்
சைத்தியத்தாற் றீதென்றே சாற்று,

(க-து) சிகப்பு வஸ்திரத்தை உடுத்திக்கொண்டும், கைகால்களைச் சொரிந்துகொண்டும், பல்லைக் குத்தியும், ஆகாயத்தைப் பார்த்துக்கொண்டும் வைத்தியனிடம் வந்தழைத்தாலும், அல்லது வைத்தியன் எண்ணெயிட்டுக் கொண்டிருக்கும்போது போயழைப்பினும் சீதள ரோகத்தால் நோயாளிக்குத் தீமை என்றறிக; எ-ம். (42)

111. கம்பம் பிடித்துக் கவின்சுவ ரும்பற்றித்
தும்பிக் கரநெட்டைத் தாவிட்டுச்—செம்மையில்
கொட்டாவி தன்னுடனே கூப்பிட்டால் நோயாளி
விட்டாவி போகும் விரைந்து.

(க-து) கம்பத்தைப் பிடித்துக்கொண்டும், சுவரைப் பிடித்துக் கொண்டும், தும்பியும், நெட்டைவிட்டும், கொட்டாவி விட்டும் வைத்தியனை அழைப்பின் நோயாளிக்குத் தீங்கு வருமென்பது எ-ம். (43)

112. விரிந்த தலையும் வியன்தடியார் கையும்
பரிந்த உடல்சொரிந்தும் பையப்—புரிந்த
நகங்கிள்ளிக் கைகட்டி நாடி யழைக்கி
னிகபோக நீங்கு மியம்பு.

(க-து) தலையை விரித்தும், தடியைக் கைக்கொண்டும், உடம்பைச் சொரிந்தும், நகத்தைக் கிள்ளியும், கைகளைப் பின்கட்டாகக் கட்டிக்கொண்டும் மருத்துவனை அழைக்கின் நோயாளி தேருவது கடினமென்க; (44)

---

## குடிநீர் வகை

நீர் பேதி

113. சோம்போ டியர்வாழை சொல்சருகு சுட்டெரித்த
சாம்பற் சிறுபீளை சாரும்வா—லாம்மிளகு
வெள்ளரிதன் வித்தும் விளங்கக் குடிநீரைக்
கொள்ளையிட்டு நீரிறங்கக் கொள்.

(க-து) சோம்பு, வாழைச்சருகு சாம்பல், சிறுபீளை, வால்மிளகு, வெள்ளரிவிரை இவ்வைந்து சரக்குகளையும் வகைக்கு ஒரு தோலா வீதம் $\frac{1}{2}$-படி சலத்தில் போட்டு $\frac{1}{8}$-படியாகக் காய்ச்சி தினம் இருவேளை 3-நாள் சாப்பிட நீரடைப்புத் தீரும்; எ-ம். (1)

பஞ்சமூலிக் கியாழம்

114. பத்திநில வேம்போடு ரோகணிபற் பாடகமும்
முத்தக்கா சுச்சீந்தில் மொய்குழலே—நித்தநித்தங்
காற்பலமே தட்டிக் கதிக்கபடி நீரிட்டுக்
காற்படியாய்க் காய்ச்சிடவே காண்.

115. காணுங் குடிநீரைக் கட்டா யிருவேளை
தோணும் படியருந்த தோடசுரம்—வானுலகில்
சத்தியம் விட்டகலும் சாத்திரம்பொய் போகாதே
பத்தியம் பாற்கஞ்சே பார்.

(க-து) நிலவேம்பு, கடுகுரோகணி, பற்பாடகம், கோரைக்கிழங்கு, சீந்தில்கொடி இவ்வைந்து மூலிகைகளையும் வகைக்கு $\frac{1}{4}$-பலமாக நறுக்கி ஒரு புதுமட்பாண்டத்தில் போட்டு, ஒரு படி சுத்த சலம் விட்டுக் கால் படியாகச் சுண்டக்காய்ச்சி வடித்து அதனை இருவேளையாகச் சாப்பிட

வும். இவ்வாறு சுரத்தின் வன்மை மென்மைக்கேற்றவாறு கால் அரை மண்டலம் சாப்பிட எத்தகைய பழைய சுரங்களாக இருப்பினும் குண மாகும். சுரமிருக்கும் காலத்தில் பாற்கஞ்சி தவிர அன்னத்தைச் சேர்க் கக் கூடாது. சுரமில்லாதபோது கியாழத்தைச் சாப்பிட்டு எளிதில் ஜீரணமாகக்கூடிய ஆகாரங்களை உட்கொள்ளல் வேண்டும். இன்னும் சுரத்தின் வேகத்தினுல் ஈரல்கள் பெருத்து (இதுவே சுரகட்டி) அதன் நிமித்தம் அடுத்துவரும் சுரங்களுக்கு இக் கியாழத்துடன் வேளைக்கு 5, 7 - துளி சங்க திராவகத்தை ஒருமிடர் சலத்தில்விட்டு விளாவிக் கொடுத்துவரின் சுரத்தையும் கட்டியையும் பரிகரிக்க இன்றியமையாத திவ்விய அவிழ்தமாகும்; எ - ம். (2)

சுரக் கியாழம்

116. தக்க மிளகோடு தானுங் கறிமஞ்சள்
மிக்க நிலவேம்பு மேவுமெடை—முக்கழஞ்சு
இங்கு மிகக்காய்ச்சி யேற்குங் குடிநீரில்
தங்கா தினிசுரமே தான்.

(க - து) மிளகு, நிலவேம்பு, கறிமஞ்சள் வகைக்கு மூன்று கழஞ்சாக இடித்துக் கால்படி ஜலத்தில் போட்டு, அரைக்கால் படியாகச் சுண்டக் காய்ச்சி அதனை இருவேளையாக ஆறு வேளை (மூன்று நாள்) சாப்பிட எவ்வித சுரமும் நிவிர்த்தியாகும்; எ - ம். (3)

வேறு

117. கொள்ளே ழிலைப்பாலை கூறுமா டாதோடை
மெள்ளக்காய்ச் சுக்கட்டி வெட்பாலை—விள்ளக்
கொடிசிந்தில் தேர்வசம்பு கொண்டமுத்தக் காசும்
கடியப் புடல்பேயாம் காண்.

118. காணுஞ் சரக்கெட்டும் காணவொவ் வோர்பலமாய்ப்
பூணுநீர் நாழிதனிற் போட்டுநீ—காணுமுறை
யொக்கக்கி யாழமிட்டே யுட்கொள்ள மூவேளை
கக்குஞ் சுரமூலங் காண்.

(க - து) ஏழு இலைப்பாலை, ஆடாதோடை, காய்ச்சுக்கட்டி, வெட் பாலை யரிசி, சீந்தில்கொடி, வசம்பு, கோரைக்கிழங்கு, பேய்ப்புடல் ஆகிய எட்டுச் சரக்கினையும் வகைக்கு 1 - பலம் கொண்டு பஞ்சுபோல் நறுக்கி,

அரைப்படி ஜலத்தில் போட்டு, கால்படி அல்லது காலேயரைக்காலாகச் சுண்டக்காய்ச்சி வடித்து அதனைத் தினம் மூன்று வேளைக்குப் பகிர்ந்துண்ண 4, 5, வேளையில் வாதபித்த கப பிரகோபங்களையுடைய எவ்வித சுரங்களும் குணமாகும்; எ-ம். (4)

நாவறட்சிக்குக் கியாழம்

119. சென்னா யுருவியுடன் சேர்வாழை பூநாகம்
நன்றாய்க் கரியாக்கி நாடுபல—மொன்றாய்ப்
படிநீரிற் கூட்டிப் பதமுறவே காய்ச்சில்
குடிநீரிற் வகைபோலாங் கொள்.

120. கொள்ளக் குடிநீரைக் கோதுபெறும் நாவறட்சி
விள்ளவிக்கல் தாகம் விளையாதே—மெள்ள
வடுத்துக் குடிக்க வரும்நாவின் முள்ளுந்
தொடித்திரா தென்றேநீ சொல்.

(க-து) நாயுருவிச்சாம்பல், வாழைச்சருகுசுட்ட சாம்பல், கரியாக வறுத்தெடுத்த பூநாகம் வகைக்குப் பலமாக ஒருபடி சலத்தில் போட்டுக் காய்ச்சி வடித்து, கொஞ்சமாகச் சீதளத்தினால் நாவறட்சி கண்டவர்களுக்குக் கொடுத்துக்கொண்டுவரத் தாகம், விக்கல், நாவறட்சி, நாவின் சுரசுரப்பு, கறுப்பு முதலியவைகள் எல்லாம் பரிகாரமாகும்; எ-ம். (5)

மதுமேகக் கியாழம்

121. பஞ்சவகை யாவாரம் பாரிற் கடலழிஞ்சி
மிஞ்சமரு தம்பட்டை வெண்ணாவல்—கொஞ்சுவித்து
மேற்பட்டை நீர்விட்டான் மேலான பாதிரிவேர்
ஏற்கப் பலமிரண்டா மெண்.

122. எண்ணு மரமஞ்சள் ஏற்றகன் னார்பலமே
நண்ணுங்கு ரோசாணி நாடக்கால்—மண்ணி
இடித்துத் துகளாக்கி யேமூவ ராகன்
குடிநீராய்க் காய்ச்சியே கொள்.

123. கொள்ளுங் குடிநீரில் கூட்டிச் சிறுமதுரம்
விள்ளவிரு நேரம் விரும்பிடவே—உள்ள
மதுமேகம் தன்னழலே மட்டில்லாத் தாகம்
பதுங்கிடுமே பேரொழியப் பார்.

(க - து) ஆவாரப்பஞ்சகம், கடலழிஞ்சிப்பட்டை, மருதம்பட்டை, வெண்ணாவல் கொட்டை அதன் பட்டை, தண்ணீர்விட்டான் கிழங்கு, பாதிரிவேர் இவைகள் வகைக்குப் பலம் - 2; மாமஞ்சள், கல்நார் வகைக்குப் பலம் - 1; குரோசாணி ஓமம் பலம் - $\frac{1}{4}$ இவைகளை நன்றாய் இடித்துச் சூரணம் செய்து வைத்துக்கொண்டு வேளைக்கு மூன்று வராகன் எடை கால்படி சலத்தில் போட்டு அரைக்காற்படியாகக் காய்ச்சிச் சிறிது சர்க்கரை போட்டு, வேண்டுமாயின் கொஞ்சம் பசுவின்பால் விட்டுச் சாப்பிடுக. இப்படி தினம் இருநேரம் ஒருமண்டலம் சாப்பிட மதுமேகம், அதனா லுண்டான அழலை, தாகம் முதலியவைகள் நீங்கும்.

இதனைச் சாப்பிடுங்காலத்தில் மேகசிந்தாமணி சிந்தூரமாயினும், அல்லது இந்நூலில் கூறப்பட்டுள்ள ஏதேனும் ஒரு அப்பிரகச் சிந்தூரமாயினும் கிரமப்படி சாப்பிடுவது சாலச் சிறந்தது; எ - ம். (6)

### சர்வசுரக் கியாழம்

124. பாரே சிறுதேக்குப் பற்பா டகந்தேவ
தாரேநன் னாரிச்சீந் தல்கோஷ்டம்—பேராய
சுக்குப் புடல்பேயும் சுத்தசுணைக் காஞ்சொறியும்
பக்குவமுத் தக்காசும் பண்பு.

125. பண்பாய் வகைக்குக்கால் பத்தியுடன் பார்த்திடித்து
நண்பாய்ப் படிநீரில் நான்கிலொன்றாய்ப்—பெண்மணியே
காய்ச்சி வடித்திருவே ளைக்கொள்ளக் கன்மசுரம்
போய்ச்சு தெனவே புகல்.

(க - து) சிறுதேக்கு, பற்பாடகம், தேவதாரு, நன்னாரி, சீந்தில், கோஷ்டம், சுக்கு, பேய்ப்புடல், காஞ்சொறி, கோரைக்கிழங்கு இவைகளை வகைக்குப் பலம் $\frac{1}{4}$ - ஆக இடித்து, ஒரு புது மட்கலத்தில் போட்டுப் படி சலம் விட்டுக் கால்படியாகச் சுண்டக் காய்ச்சி வடித்துத் தினம் இருவேளை சாப்பிடவும்; மூன்று நாளில் எவ்வித சுரங்களும் நிவர்த்தியாகும்; எ - ம். (7)

### சந்நிசுரக் கியாழம்

126. திப்பிலிமுத் தக்காசு செங்கழுநீர் மூலஞ்சுக்
கொப்பில் சிறுதேக் குயர்கோஷ்டம்—அப்பேர்க்கம்
சீந்திற்றண் டானைச் சிறுகாஞ் சொறிப்பூவேம்
பேந்தாடா தோடை எடு.

127. எடுக்கவகை காற்பலமே ஏற்க இடித்துப்
படியிரண்டி நீரில் பதிய—விடயெரித்தே
காற்படியில் வற்றக் களிப்பாக மூன்றுபோ
தேற்றிடவே சந்நிசுர மேது.

(க - து) திப்பிலி, மூத்தக்காசு, செங்கழுநீர்க்கிழங்கு, சுக்கு, சிறு தேக்கு, கோஷ்டம், பேய்ப்பீர்க்கு, சீந்திற்றண்டு, சிறுகாஞ்சொறி, நில வேம்பு, ஆடாதோடை வகைக்குக் காற்பலம் எடுத்து நறிக்கி இரண்டுபடி சலத்தில் இட்டுக் காற்படியாகச் சுண்டக் காய்ச்சி, மூன்றுவேளை யுட் கொள்ள எவ்வகையான சந்நிவாத சுரங்களும் உடனே குணமாகும்; எ - ம். (8)

பித்தசுரக் கியாழம்

128. சுக்கோ டதிமதுரம் சோம்புநன் ஞரிவில்வம்
புக்குமுள் சேர்நெருஞ்சி பூவிலுப்பை—பக்குவமாய்
ஆற்றுமணல் நெல்லி யருவிளா மேலோடும்
ஏற்றப் பொரியுடனே எண்.

129. எண்ணும் விலாமிச்சம் ஏற்றகொடி முந்திரியும்
கண்ணே பலமரையாம் காணிடித்து—உண்ணும்
குடிநீரைப் பாண்டத்தில் கூட்டி யிரண்டு
படியரையாக் காய்ச்சிடவே பார்.

130. பார்வடித்து நாள்மூன்று பற்றி யிருவேளை
ஆர்த்தக் குடிநீ ரடுத்தருந்த—கூர்த்தசுரம்
கண்டு மதிமயங்கிக் காயுமணல் விட்டினிது
தெண்டனிட் டோடுமெனச் செப்பு.

(க - து) சுக்கு, அதிமதுரம், சோம்பு, நன்ஞரி, வில்வவேர், நெருஞ்சிமுள், இலுப்பைப்பூ, ஆற்றுமணல், நெல்லிவற்றல், விளாம்பழத்து ஓடு, நெற்பொரி, விலாமிச்சம், திராட்சைப்பழம் இவைகளை வகைக்குப் பல மரையாக இடித்து, இரண்டு படி சலத்தில் போட்டு, அரைப்படியாகச் சுண்டக் காய்ச்சி வடித்துத் தினம் இரண்டு வேளையாக மூன்று நாள் உட் கொள்ள எவ்வகைப் பித்த சுரமும் குணமாகும்; எ - ம். (9)

---

# சூரண வகை



### நீரிழிவுக்குச் சூரணம்

131. வெண்ணுவல் வித்தோடு வேண்டிப் பரிகாரம்
நன்ரு யரைத்துசமன் நட்பாக்கிக்—குன்ருமல்
பாரிற்பொன் காசெடையே பற்றியிரு வேளையுண
நீரிற் பெருக்கமிலை நேர்.

(க - ரை) வெண் நாவல்கொட்டையும், பொரித்த படிகாரமும், தனித்தனி இடித்துச் சமனெடையாக நன்ருய்க் கலந்து வைத்துக் கொண்டு தினம் இருவேளை ஒரு வராகனெடைப் பிரமாணம் ஒருவாய் சலத்துடன் உட்கொள்ள அதிக நீர்போதல் நிவர்த்தியாகும்; எ - ம். (1)

### இரத்தப் பிரமேகத்திற்கு

132. மெள்ளப் படிகாரம் மேதினியில் வால்மிளகு
கொள்ள விராகன் கொடுத்தாட்டி—விள்ளவதில்
மூன்றிலொரு பாகநிறை மூவிரண்டு வேளையுண
ஆன்றுதிர மேக மறும்.

(க - து) படிகாரம், வால்மிளகு தனித்தனியாகச் சூரணம் செய்து வகைக்கு ஒரு வராகனெடையாகக் கல்வத்திலிட்டு நன்ருய் அரைத்து, அதனை மூன்று பாகமாகப் பங்கிட்டுக் காலை, உச்சி, மாலையாக மூன்று வேளையும் ஒருவாய் சலத்துடன் மூன்று நாள் 9-வேளை யுண்ண, சிறுநீரிற் கலந்த இரத்தமேகம் நீங்கும். இதற்குப் பத்தியம் காரசாரமற்ற பால் அன்னமே நன்று; எ - ம். (2)

### வெள்ளைக்குச் சூரணம்

133. படிகாரம் கற்கண்டு பார்நெல்லி வற்றல்
இடித்துசம னீர்கழஞ்சி ஈயக்—குடிமோரில்
விட்டகலும் வெள்ளை விரும்பாச் சுருக்குநீ
ரிட்டெரிச்ச லில்லை யியம்பு.

(க - து) படிகாரம், கற்கண்டு, நெல்லிவற்றல் இவைகளைச் சமனெடையாக இடித்துச் சூரணம் செய்து, கலக்கி, வேளைக்கு இரு கழஞ்சி வீதம் தினம் அந்தி சந்தி மோருடன் கலந்து சாப்பிட மூன்றுநாளில்

வெள்ளை, நீர்ச்சுருக்கு, எரிச்சல் முதலியவைகள் நிவர்த்தியாகும்; எ - ம். (3)

### வசம்பு சூரணம்

134. கருவிருந் தீன்ற மஞ்சற் காக்குறு மன்னை பந்த
மருவிருந் துண்டி யானே வந்துறும் பிழை யெல்லாம்
வருவிருந் தன்ன நீங்கி வாழுமா றிதயத் தன்பு
பெருவிருந் தன்ன மேலார் பேசுசூ ரணஞ்சொல் வேனே.

135. சொல்லமா மிளகு சுக்குத் தூய்மைதிப் பிலியுங் காய
நல்லவிந் துப்போ டோம நாட்டிரு சீர கஞ்சீர்
பல்லவும் வறுத்தி டித்துப் பலம்வகைக் கோர்கா லாக
எல்லவு நேர்வ சம்பி னெரிகரி தனைசேர்ப் பாயே.

136. பாயடுத் துறங்கும் பாலர் பாலெடுத் திருமல் கக்கல்
வாயடுத் தேம்பல் வாந்தி வயிற்றின திரைச்ச லுப்பல்
தாயடுத் தழுது ணுது சலமலங் கட்டல் பேதி
ஏமடுத் துள்ள பாலர்க் கியம்பிய ரோகம் போக.

137. போக்கவே குன்றி யாகப் பொருந்திய முலைப்பா லோடு
தாக்கவே காலை மாலை சலம்புரி மாந்த மெல்லாம்
சீக்கவே ரற்றுப் பாலர் செம்மையே வளர்வா ரன்னை
காக்கவே பத்தி யத்தைக் காரமும் புளியுந் தள்ளே.

(க - து) சுக்கு, மிளகு, திப்பிலி, சீரகம், கருஞ்சீரகம், இந்துப்பு, பெருங்காயம், ஓமம் இவை தம்மைப் பொன்மேனியாக வறுத்து, இடித்து வஸ்திரகாயம் செய்து எடுத்தது வகைக்கு பலம் $\frac{1}{4}$, இவை சேர்ந்த மொத்த எடைக்குச் சமவளவாக வசம்பைச் சுட்டுக் கரியாக்கியது இரண்டுபலம் சேர்த்துக் கல்வத்திலிட்டு நன்றாய்க் கலக்க அரைத்துச் சீசாவி விடவும். இதனைக் குழந்தைகளின் பருவத்திற்கு ஏற்றவாறு ஒரு சிட்டிகை முதல் 4, 5 சிட்டிகை வரையில் முலைப்பாலில் தினம் இருநேரம் கொடுக்கச் சீதளத்தினு லுண்டான இரைப்பு, கப சம்பந்தமான ரோகங்கள், மாந்தம், வாந்தி, வயிற்று இரைச்சல், பேதி முதலியவை குணமாகும். பத்தியம்: பால் உண்ணும் குழந்தையாக இருப்பின், தாய்: காரம், புளி, நீக்கி உண்ணல் வேண்டும்; எ - ம். (4)

### பரங்கிப்பட்டைச் சூரணம்

138. வாங்கவே பறங்கிச் சக்கை வளம்பெற பலமீர்பத்துப்
பாங்குறச் சிறுதுண் டாக்கிப் பரிந்துவே சரிநீர் தன்னல்
தாங்கவே தோயப் பெய்து தனலதி லெரித்துச் சித
நீங்கவே நிழலு லர்த்தி நிகழ்த்தவே பாண்டங் கொண்டு.

139. கொண்டதில் யானைத் தோலுங் கூடவே சாம்பி ராணி
மண்டிய வகைவ கைக்கு வழுத்துவேன் பலம்பத் தாகக்
கண்டிடப் பொடித்துப் போட்டுக் கப்பிய வாய்க்குச்சீலை
விண்டிடப் பொருந்தக்கட்டி விதிமுறை விபரஞ் சொல்வேன்.

140. சொல்லமுன் பறங்கிச்சக்கை சூரணந் தனைமேற் பெய்து
நல்லமேற் சட்டிமூடி நன்குநாற் சாமப் போது
புல்லிய தீபம் போலப் போட்டெறித் தாற விட்டு
வல்லரும் பதக்கச் சூர்ணம் வடித்தொரு குப்பி வையே.

141. வைத்திடு சூர ணத்தில் வாங்கிக்காற் றோலா மட்டு
முய்த்திடு நிரைபோற்கண்டு மொருங்குசேர்த் துண்ணுங்காலை
கைத்திடு தேக மூடே கண்டவெண் குறைநோ யந்தோ
பொய்த்திடு நான்கு பத்து நாளையிற் புகலுங் காலே.

(க - து) அரைவீசை பறங்கிச்சக்கையைச் சிறு துண்டுகளாக நறுக்கிக் கழுதை மூத்திரத்தில் மூன்றுநாள் ஊறப்போட்டு, நான்காம்நாள் நீர் சுண்டச் சிறுதீயில் எறித்துச் சற்று ஈரமிருக்கும்போதே எடுத்து நிழலில் உலர்த்தி இடித்து வைத்துக்கொள்க. அடுத்த பக்கத்தில் வரைந்துள்ள தாபாவி யந்திரத்தைக் குறிப்பிக்கும் சித்திரத்தின்படி ஒரு அகண்ட மட்பாண்டத்தில் 10-பலம் சாம்பிராணித்தூளையும் சிறு துண்டுகளாக நறுக்கிய 10-பலம் யானைத்தோலையும், கலந்து போட்டு, சட்டியின் வாய்க்குச் சல்லடைக் கொப்பான சீலையைக்கொண்டு வாய்மூடிக் கட்டி, முன் சித்தப்படுத்தியுள்ள பறங்கிச்சக்கை சூரணத்தை இடையில் பரப்பி, அடிசட்டியின்வாய்க்குப் பொருத்தமான மற்றோர் சட்டியை மேல் மூடி, இவ்விரண்டு சட்டிப் பொருந்த வாய்க்கு மண்பூசிச் சீலை செய்து காய்ந்தபின் அடுப்பில் வைத்துத் தீபாக்கினியாக நான்கு சாமம் எரித்துச் சாங்க சீதளமானபின், உள்ளிருக்கும் பறங்கிச்சக்கையையும், அதனுடன் உறவாகியிருக்கும் சாம்பிராணிப் பதங்கத்தையும் சேதப்படாமல் எடுத்துக் கல்வத்திலிட்டு அரைத்துப் புது மட்கலயத்தில்போட்டு வைத்திடுக. இதனில் வேளைக்கு $\frac{1}{4}$-ரூபாய் எடை சமன் சர்க்கரைசேர்த்துத் தினம் இருவேளை ஒருமண்டலம் உட்கொள்ள வெண்குட்டம் தீரும். இன்னும் சர்மத்தினிடமாகத் தோன்றும் பல மேகவியாதிகளும் தீரும். பரங்கிச்சக்கைக்கு ஆகாத பதார்த்தங்களாகிய கறிமஞ்சள், நல்லெண்ணெய், களிப்பாக்கு, மாம்சம், உறைப்பு, இஞ்சி கடுகு, கசப்பு, புளிப்பு இலவண முதலியவைகளையும்; கோலா, மடவை, சன்னை, வெளவால் முதலிய மீன்களையும் சேர்க்கலாகாது. சேரின் மருந்தின் குணங் கெடும்; எ - ம்.

## தூப இயந்திரம்




### சித்திர விளக்கம்

1. வாயகண்ட மட்பாண்டம்
2. தூபத்திற்காக இட்ட சரக்கு
3. சல்லடைக்கொப்பான சீலை கட்டப்பட்டிருப்பது
4. பறங்கிச்சக்கை சூரணம்
5. பொருத்தமான மேல்சட்டி மூடிச் சீலை செய்தது

### காக்கை வலிக்கு நசியம்

142. வாங்கெருக்கன் நற்செடியில் வாழும்வெட் டுக்கிளியின்
தேங்குமிற குக்கால் தெறித்துலர்த்தி—ஏங்காது
வேக வருந்தனலில் வேண்டிமிள கிட்டரைத்து
காகவலிக் கோர்நசியங் காண்.

(க - து) எருக்கஞ் செடியில் புழுவைப்போல் உற்பத்தியாகிப் பின்னர் நீலப்பச்சை மஞ்சள் முதலிய வர்ணங்களை யுடையனவும் நாற்ற முடையனவுமாய் மாறுதல் அடையும் பெரும் வெட்டுக்கிளிகளைக் கொண்டு வந்து, காலின் அடிப்புறமும் சிறகும்போக்கி, எறும்பு முதலியவற்றிற்கு இரையாக்காமல் சர்வசாக்கிரதையாக இரவியில் உலர்த்திப் பொன்மேனி யாக வறுத்து, அதனுடன் சமன் அல்லது அரையெடை வறுத்த மிளகையும் கூட்டியரைத்துக் காற்றுநுழையாக சீசாவில் அடைத்து வைத்துக்கொண்டு தினம் 4, 5-தடவை ஆக்கிராணித்தல் வேண்டும். இதனல் நரம்புச் சூடு களுக்கு ஆதீனமாக ஏற்பட்ட மூளையினின்ற சீதளத்தையும் வாய்வையும் போக்கி, மயக்கம், மூர்ச்சை, வலி முதலியவைகளைப் பரிகரித்துப் பூரண சுகத்தை யுண்டாக்கும்; எ - ம். (6)

இஃது அருவருப்பான சிகிச்சையாயினும், குணவிசேடத்தானும், இதனைவிடச் சிறந்தது இத்தகைய ரோகத்திற்கு அனுபவத்தில் வேறு கண்டிலேனுதலானும், ஈண்டுக் கூறலாயினேன். இவ் அவுடதம் அதிக அளவாகச்செய்து குப்பியிலிடின் சிறிது நாளில் கிருமிக ளுற்பவமாகும். ஆதலால், வேண்டும்போது கொஞ்சங் கொஞ்சமாகச் செய்துகொள்ளல் நன்று.

### சுரக்கட்டி சூரணம்

143. கெந்திவெடி யுப்பும் கிளர்சார மேமிளகு
தொந்த முறக்கூட்டிச் சொல்லனைத்தும்—அந்தமுற
அம்மி தனிலாட்டி ஆகுநற் சூரணத்தை
நம்பிக் கொடுத்திடவே நன்று.

144. நன்று யிருவேளை நல்விரா கன்னிடையே
குன்று நன்றுந்தேனில் கூட்டிய—மன்றுடும்
காருச்ச லதன்கட்டி காணப் பருவமொன்றில்
பாய்ச்ச லெடுத்தோடும் பார்.

(க - து) கெந்தகம், வெடியுப்பு, நவாச்சாரம், மிளகு இவைகள் வகைக்குச் சமனெடையாகக் கல்வத்திலிட்டு நன்றாய் அரைத்துச் சீசாவில் அடைத்து வைக்கவும். சுரக்கட்டி யுள்ளவர்களுக்கு வேளைக்கு விராக னெடையாகத் தினம் இருவேளை தேனில் கொடுத்துவர 15 - நாளில் சுரக் கட்டி கரைந்துவிடும்; சுரமும் வராது. இம் மருந்தின் உபயோகத்தில் மலமும் சலமும் தாராளமாகப் போகும்; மலம் அதிகமாய்ப் போகுமாயின் மருந்தைக் குறைத்தும், மலசலம் சரிவரப் போகாவிடின் மருந்தை அதிகப் படுத்தியும் கொள்க; எ - ம். (1)

### கிராணி சூரணம்

145. சுண்டக்காய் கார்வேம்பும் சொல்மா துளைவித்தும்
உண்டமாங் கொட்டைதன் னுட்பருப்பும்—பண்டுநெல்லி
வற்ற லுடனேமம் வாட்டசிறு வெந்தயமும்
பற்ற வெடைசமனும் பார்.

146. பாரே வறுத்திங்கே பக்குவமாய்ச் சூரணித்துச்
சேரே யொருகடித்தூள் செம்மையுற—நேரேதான்
மேதைத் தயிரதனில் மேவவிரு வேளைகொள
கோதையரே யென்னுருங் கூறு.

147. கூறுமாந் தம்பொருமல் கொட்டுதரம் பேதி
சீறுமூ லந்திரண்டு சேர்வாயு—பேறுமாம்
ஒப்பக் கரும்பிணியை யொட்டுங்கி ராணிமுதல்
தப்பா தொழிந்திடுமே தான்.

(க - து) சுண்டக்காய்வற்றல், கருவேப்பிலை, மாதுளம்விரை, மாங்கொட்டைப்பருப்பு, நெல்லிவற்றல், ஓமம், வெந்தயம் ஆக ஏழு சரக்குகளையும் வகைக்குப் பலமாக எடுத்து இளம் வறுப்பாக இடித்துச் சூரணமாகச் செய்து வைத்துக்கொண்டு, வேளைக்கு ஒரு கடிபிரமாணம் எருமைத் தயிரில் தினம் இருவேளை கொடுத்துவர மாந்தம், வயிற்றுப்பிசம், வயிற்றிரைச்சல், பேதி, மூலவாயு, ஊஷ்ணவாயு, கருப்பிணிகளுக்குக் காணும் கிராணி முதலியவைகள் குணமாகும். பத்தியம்: அதிக காரசாரமில்லாததும், எளிதில் செறிக்கற்பாலதுமான ஆகாரம் உட்கொள்ளல் வேண்டும்; எ - ம். (2)

---

# மாத்திரை வகை

வெண்குட்ட மாத்திரை

148. நாட்டுதுரா நல்மூலி நாக்கசுக்குஞ் சீரகமும்
போட்டுத் தசபலமே பொற்பாவாய்—நாட்டுக்
கருப்பாட்டுப் பிச்சின் கருநீரா லாட்டிக்
கருதக் குளிகையவை காண்.

149. காணக் குளிகை கரிக்குன்றி போலளவாய்
மாண வுருட்டி மணியுலர்த்தி—நாணப்
பிறந்துள்ள வெண்குட்டம் பேதிக்க வுண்ணப்
பறந்துபோ மென்றே பகர்.

150. பகரும் பெரியோர் பதமிறைஞ்சிக் கேட்ட
நிகரிற் குளிகையிது நித்தஞ்—சுகமாகத்
தின்று வருவாரேல் தேகசுசி யேபத்ய
மின்றிதற்கிங் கென்னே யினி.

(க - து) தூராயிலையை வேறொன்றுமில்லாமல் திருத்தி நிழலில் உலர்த்தி இடித்து எடுத்த சூரணம் புலம் - 10, காட்டுச்சீரகம் (விஷச்

சீரகம் கசப்புச்சீரகம்) இடித்தெடுத்த சூரணம் பலம் - 10, இவைகளை யொருமிக்கக் கலந்து, ஒரு மட்பாண்டத்திலேனும் பீங்கானிலேனும் போட்டு, கறுப்பு வெள்ளாட்டுப் பிச்சிநீர் கொஞ்சங் கொஞ்சமாக ஏறத் தாழ 3 - படிக்குக் குறையாமல் 7, 8 முறையாக விட்டுக் கிளறி, இரவி முகத்தில் வைத்துக்கொண்டு வரவும். ஒவ்வொரு முறையும் புதிதாகப் பிச்சி நீர் விடும்போது முன் விட்ட பிச்சிநீர் இரவியிற் காய்ந்து வறண்ட சமயமாக இருத்தல்வேண்டும். இங்ஙனம் முடிவு பெற்றதைச் சேதப் படாமல் கல்வத்தில் போட்டுப் போதியவளவு பிச்சிநீர் விட்டு மெழுகு பதத்தில் அரைத்து யானைக்குன்றிப் பிரமாணம் மாத்திரைகளாகத் திரட்டி இரவியிலுலர்த்திச் சீசாவிலிட்டு வைக்கவும்.

வெண்குட்டமுளார்: வேளைக்கு ஒன்றாகத் தினம் இருவேளை உண்ணவும், இதனால் வெண்குட்டம் நிவர்த்தியாகும். பத்தியம்: நல்லெண்ணெய், கடுகு, உளுந்து, மொச்சை, பூசனி, அகத்தி, மீன், கருவாடு, போகம், லாகிரி, வாழைப்பழம் முதலியவற்றை நீக்கி, மற்றவைகளை வேண்டியபடி ஆகாரமாகக் கொள்ளலாம். இதனைச் சாப்பிடும்போது 20 - நாளுக்கு மேல் 40 - நாளுக்குள் வெளுத்த விடங்களில் மயிர்க்கால்கள் தோறும் கருமையான புள்ளிகள் தோற்றும். இதுவே குணமடைவதற்கு ஏற்ற காலமென்று உணரவேண்டும். இது நாளடைவில் பரவி, சுபாவ நிறத்தை யுண்டாக்கும். இங்ஙனம் 40 - நாள் வரையிலும் உண்டு குணம் பெறுதற் குரிய குறிகள் காணாவிடின், மீண்டும் சாப்பிடுவது வியர்த்தமென்று அறிக. சிறிது குணமேற்படின், ரோகத்தின் வன்மை மென்மைக் கேற்ற படி 6 - மாதம் வரையிலும் உண்டு வாலாம். குணமடைவதில் யாதொரு சந்தேகமுமில்லை. இம் மருந்தை நீடித்தநாள் இடைவிடாது சாப்பிடுவது ஒவ்வொருவருக்கும் கஷ்டசாத்திய மாதலான், குறைந்தது 15 - நாள் வரையிலும் கிரமமாகச் சாப்பிட்டு, சிலநாள் மருந்தில்லாமல் விட்டு மீண்டும் ஆரம்பித்துச் சாப்பிடலாம். இப்படிப் பூரண குணம் அடையும் வரையில் இடைவிட்டு இடைவிட்டுச் சாப்பிட்டுக்கொண்டு வருக. இம் மருந்தில் அறியவேண்டிய விசேஷகுண மொன்றுண்டு; அது யாதெனின், வியாதி பரவிக்கொண்டிருக்கும் காலத்தில் இம்மருந்து தீவிரத்தில் குணமுண் டாக்க முயல்கின்றது. வியாதி சரீரத்தில் ஒரேயளவாக நின்றுவிடின் சிலருக்குத் தாமதமாகவும் குணமில்லாமலும் போகின்றது. அங்ஙனம் தவறிப்போகும் சுபாவத்தையுடைய தேகிகளுக்கு இந்நூலில் கூறப்பட்ட பறங்கிப்பட்டைச் சூரணம் குணஞ்செய்யும், ஸ்நானம், சௌளம், வீட்டு விலக்கம் முதலான காலங்களில் மாத்திரம் மருந்தில்லாது விட்டிருத்தல் நன்று; எ - ம். (1)

வங்கு நிவாரணி

151. இகத்திலே குறையுண்டாக ஈண்டிய வறுமையானே
முகத்திலே மங்குண்டாங்காண் மொழிந்தனர் முதியோர் முற்றுஞ்
சகத்திலே தீர்ப்பான்வேண்டிச் சாற்றிய மருந்துகேளாய்
மிகக்கரு சருக்கரைச்சீர் மேவிடு மாலம்பாலே.

152. பாலுடன் கரைவகைக்குப் பகரிரண் டரைப்பலஞ்சீர்
காலுடன் விராகனைந்து காட்டுச்சீ ரகமுஞ்சேரத்
தாலுடன் மெழுகதாக்கித் தக்கசுண் டக்காய்போலப்
பாலுடன் பருகத்தீரும் பத்திய மின்றிதற்கே.

(க-து) இரண்டரைப்பலம் கறுப்புச் சருக்கரையை ஒரு பீங்கானில் போட்டு அதனில் 5-விராகனெடை விஷச்சீரகம் என்னும் காட்டுச்சீரக சூரணத்தைப் போட்டுக் கலந்து ஏறத்தாழ மெழுகாகும்வரை ஆலம்பால் கறந்துவிட்டு இரவியில் வைத்துச் சுண்டினபின் கல்வத்திலிட்டு இடித்தேனும், அரைத்தேனும் மெழுகு பதத்தில் சுண்டக்காய்ப் பிரமாணம் மாத்திரைகளாகச் செய்து தினம் காலை மாலை ஒரு மண்டலம் உட்கொள்ள முகத்திலுண்டான வங்கு குணமாகும். பத்தியமில்லையாயினும், இச்சா பத்தியமாக இருத்தல் எவ்விதத்திலும் நன்மை பயக்கும். இம்மருந்து அடிக்கடி செய்துகொள்ளல் வேண்டும். செய்து நாட்பட வைப்பின் கிருமிகள் உண்டாகும்; எ-ம். (2)

கிராணிக் கபாட மாத்திரை

153. வாதனை மேகத் தானே வந்துறுங் கிராணி யென்னுந்
தீதினைத் தீர்க்கவேண்டிச் செப்புவே னபினி மாசிக்
காதனு டன்சா திக்காய் கருதுமா துளந்தோ லோடு
காதலா யிலவந் தன்னின் பிசினொடு காய்ச்சுக் கட்டி.

154. கட்டிடு புளியங் கொட்டை கான்றதோ லெழுச ரக்குந்
தட்டியே கலுவத் திட்டு மேதியின் தயிரே கொண்டு
அட்டிடு கண்டு மீட்டு மதன்படித் தயிர்விட் டாட்டிக்
கொட்டிடு காய்ச்சிக் காய்ச்சிக் கூறெழு முறையாம் பின்னர்.

155. பின்னரம் மருந்தை யாட்டிப் பேசுதூ துளங்காய் போலும்
இன்னநீர் குளிகை செய்திங் கெடுத்தொரு குளிகை தன்னை
முன்னரே லவுங்கப் பட்டை முடித்திடு கியாழத் தீய
நன்னராம் கிராணி யோட நலஞ்செயுங் கபாட மீதே.

(க - து) அபினி, மாசிக்காய், ஜாதிக்காய், மாதுளம்பழத்தோடு, இலவம்பிசினி, காய்ச்சுக்கட்டி, புளியங்கொட்டைத்தோல் இவ்வேழு சரக்குகளையும் வகைக்கு $\frac{1}{2}$ - பலமாகக் கல்வத்தில் போட்டு எருமைத் தயிர் விட்டு அரைத்து ஒரு புது ஓட்டில் வழித்து விட்டுச் சிறுதீயில் எரித்து லேகிய பதமாகிற வரையில் கிளறி மீண்டும் அதை வழித்துக் கல்வத்தில் போட்டு முன்போல் தயிர்விட்டரைத்து முன்போல் லேகிய பதம் காணக் கிளரவும். இங்ஙனம் $\frac{1}{2}$ - படி தயிரை 7 - முறையாக விட்டு அரைத்துக் கிளறி மெழுகு பதத்தில் தூதுளங்காய்ப் பிரமாணம் மாத்திரை செய்து கொள்க. கிராணி, பேதி, சீதபேதி, இரத்தபேதி முதலியவற்றிற்கு லவங்கப்பட்டை கியாழத்தில் தினம் மூன்றுவேளை கொடுக்கக் குணப்படுத்தும். பத்தியம் காரசாரமற்றதும் எளிதில் ஜீரணிக்கக் கூடியதுமாகிய ஆகாரங்களைக் கொள்ளல் வேண்டும். இன்னும், விரேசனத்திற்காக எதேனும் ஒரு அவிழ்தம் கொடுத்து அளவிற்குமிஞ்சிப் பேதியானதாகத் தோற்றின், அதையும் நிறுத்தும்பொருட்டு மணிநேரத்திற்கு ஒருமாத்திரையாகப் பேதி நிற்கும்வரையில் கொடுத்துவர 4, 5 - மாத்திரைப் பிரயோகத்திற்குள் பேதி நின்றுவிடும் ; எ - ம். (3)

### மேகவாய்வு குளிகை

156. செப்புரச கற்பூரம் சேரவன்னி கற்பமுமே
ஒப்பரிய முக்கழஞ்சி மொக்கவரைத்—தப்பாற்
கிடத்தியொரு மண்ணோட்டில் கிட்டவடுப் பேற்றி
நடத்த வினிப்பாகம் நாடு.

157. நாடுங் கொடிக்கள்ளி நற்கொள்ளுக் காய்வேளை
சாடுங் கரிப்பான் வெண்சாட்டரணை—தேடுந்
தனிச்சாற்றைக் கொண்டு சமனாய்க் கலந்தே
இனிய சுறுக்காக விட்டு.

158. இட்டே சுறுக்கு மிதமாஞ் சதுர்சாமம்
வட்டக் கலுவத்தே மாற்றியதைத்—திட்டமுடன்
முக்கழஞ்சி ஓமமிட்டு மூரி யரைத்துருட்டத்
தக்ககுன் றிப்போலாஞ் சாற்று.

159. சாற்றுங் குளிகை சதுரா யிருவேளை
போற்றநா ளேழுண்ணப் பொய்யல்ல—தேற்றுமே
காங்கைப் பிடிப்பும் கருதுங் குடைச்சலவர்
பாவில்லை யென்றேநீ பார்.

(க - அ) பூரம், இலிங்கம் வகைக்கு மூன்று கழஞ்சுவீதம் கல்வத்தில்போட்டு நன்ருய் அரைத்து ஒரு மண் ஓட்டில் போட்டு, சிறு தீயில் வைத்து எரித்துப் புகையாவண்ணம் கொடிக்கள்ளி, கரிசிலாங்கண்ணி, கொள்ளுக்காய் வேளை, வெள்ளைச் சாட்டரணை இவைகளின் தனிச் சாற்றைச் சமனுகக் கலந்து நான்குசாமம் சுறுக்குக் கொடுத்துப் பின்னர் கல்வத்தில் வழித்துப்போட்டு, அதனுடன் 3 - கழஞ்சு சுத்தி செய்த ஓமம் சேர்த்து, முன்கலந்து வைத்துள்ள காற்றில் மெழுகு பதங் காண அரைத்து, மாத்திரைகள் மிளகுப்பிரமாணம் செய்து நிழலில் உலர்த்தி, சீசாவில் அடைத்திடுக. இம்மாத்திரையி லொன்றைப் பனைவெல்லத்தில் வைத்து, தினம் இருவேளை 57 - நாள் கொள்ள, கைகால் பிடிப்பு, தீராத கைகால் குடைச்சல் முதலியவை நீங்கும். இதற்குப் புளிதள்ளி இச்சா பத்தியமாக இருத்தல்வேண்டும்; சில சரீரங்களுக்குப் புதிய அவிழ்தமாக இருக்கும்போது பல் ஈறில் நீர் சுரப்புக்காணும். உடனே அவிழ்தம் கொடுக்காமல் நிறுத்திவிடவும். இம் மாத்திரைகள் செய்து நாள்பட்டதாக இருப்பின் இந்த உபத்திரவமும் இராது. பல வைத்தியர்களால் கைவிடப்பட்ட போது இச்சிகிச்சை செய்தல் கீர்த்திக்கிடமாகும். இன்னும் வேறுவிதமாக முடித்தலுமுண்டு. அதாவது:—பூரம் இரசச்சிந்தூரம் இவை யிரண்டையும் சமனெடையாகக் கல்வத்தி லிட்டு அரைத்து வைத்துக்கொண்டு, இவைகள் சேர்ந்த மொத்த எடைக்கு 8 - பங்கு ஓமவரிசியை ஊறப்போட்டு நிழலில் துணியின்பேரில் பரப்பி, ஈரம் புலர்ந்தபின் காரமில்லாத அம்மியைச் சுத்தப்படுத்தி அதனில் இவ்வோமவரிசியை யிட்டுக் கையோயாமல் வலியாய் அரைக்க மெழுகுபோலாகும். அத்தருணம் முன் சித்தப்படுத்தியுள்ள சரக்கையிட்டு நன்ருய்க் கலக்க அரைத்து மெழுகுபதத்தில் திரட்டி வாய் அகண்ட கொம்பு சிமிழிலேனும் அல்லது பீங்கானிலேனுமிடுக. வேளைக்கு மிளகு பிரமாணம் அந்தி சந்தி பனைவெல்லத்தில் வைத்துச் சாப்பிடக் கைகால் பிடிப்பு, குடைச்சல், கிரந்தி, புண்புரை முதலியவைகள் குணமாகும். பத்தியம் முன்கூறியவாறே யாகும்; எ - ம்.

* குறிப்பு:—மேகவாயுவினுல் நேர்ந்த தீராக் குடைச்சலுக்கு இதனைவிடச் சிறந்த அவிழ்தம் கண்டிலேனுதலால் ஈண்டுக் கூறலாயினேன். இது மிக்க நன்மைதரத் தக்கதேனும் ஜாக்கிரதையின்றி உபயோகிப்பின் நோயாளிக்கு உபத்திரவத்தை யுண்டாக்கும். ஆதலால் தேகத்தின் தன்மையையும் நோயின் வன்மை மென்மையையும், கால நிலைமையினையும் நன்குணர்ந்து, இரண்டொரு

நாள் கொடுத்த அளவில் ஏதேனும் உபத்திரவம் செய்யின் மருந்தை நிறுத்தியும், அல்லது மீண்டும் கொடுத்தும், நோயாளியின்பால் அன்பு பாராட்டித் தினந்தினம் அடையும் குணங்களைச் செவ்வையாகக் கவனித்து வரும் மருத்துவன்: இம்மை, மறுமைப் பயனெய்துவா னென்பது காருண்ணியத்தை கொண்ட ஆன்றோர் வாக்கு. (4)

அயவீர மாத்திரை

160. கண்ட வயப்பொடியும் காதலித்த சவ்வீரம்
கொண்டுபல மாகக் குழிக்கல்லில்—பண்டுபெற
நீயிட்டி ணங்கன்றீ நீரா லரைப்பாட்டித்
தீயிட்டு நீவறுக்கச் சீர்.

161. சீராம் புகைநோக்கிச் சிந்தூரந் தன்னோடு
நேராந் திரிகடுகு நெல்லியுடன்—பேராய்க்
கடுக்காய் பெரும்வாற் கடிமிளகு நேரோ
டெடுக்க யிருவாள மெண்.

162. எண்ணுஞ் சரக்கிவற்றை யேற்றிக் கலுவத்தே
திண்ணும் பழச்சாற்றிற் சீராக—உண்ணியரைப்
பாட்டிமெழு காகும் பதங்குன்றி போற்றிரட்டி
வாட்டி யுலர்த்தியே வாங்கு.

163. வாங்கி யிருகுளிகை வண்சந்தி நேரமதில்
தேங்காது கொண்டிடவே தேற்றுங்கேள்—ஓங்காது
வாதபித்தம் சூழண்ட வாத முடன்முடக்கு
ஓதக் கபமொழியு மொப்பு.

164. ஒப்பச் சிறுநீரில் உய்யுங்கால் தன்னடைப்பும்
செப்புங் குடைச்சல் செருக்கொழியும்—தப்பாது
பத்தியமாய் நீகொடுக்கப் பண்டிதனே! கீர்த்திமிகும்
சத்தியமாய்ச் சொன்னமுறை தான்.

(க - து) சுத்தமாய் ராவிய அயப்பொடி பலம் - 1, வீரம் பலம் - 1, இவை யிரண்டையும் கல்வத்திலிட்டு, வெடியுப்புத் திராவகத்தால் மூன்று நாள் அரைத்து, காயவைத்து, புது சட்டியிலிட்டு, கருப்புப் புகை போக வறுக்கச் சிந்தூரமாகும். நல்ல நிறம் வரும்பதத்தில் சிந்தூரத்தை ஆற விட்டுக் கல்வத்தில் அரைத்துச் சீசாவில் இடுக. இங்ஙனம் முடிந்த சிந்தூரம் - 1, சுக்கு - 1, மிளகு - 1, திப்பிலி - 1, நெல்லி வற்றல்-1, கடுக்காய்-1,

வால்மிளகு - 1, வாளம்-2 எடையாகக் கல்வத்திலிட்டு எலுமிச்சம்பழச்சாறு நன்றாய்விட்டு இரண்டுமணிநேரம் அரைத்துக் குன்றிப்பிரமாணம் மாத்திரைகளாகச்செய்து நிழலில் உலர்த்திவைத்துக்கொள்க. இதனைக் காலைநேரத்தில் இரண்டு மாத்திரையைப் பொடித்துச் சர்க்கரையிலேனும் பனைவெல்லத்திலேனும் வைத்துக்கொடுக்க இரண்டொரு முறை மலம் போகும். இதனால் வாதபித்தச்சூலை, முடக்கு, அண்டவாதம், இரைப்பு, இருமல், கல்லடைப்பு, குடைச்சல் முதலிய ரோகங்கள் தீரும். இம் மருந்தை உட்கொண்ட ஒரு மணி நேரத்திற்குப் பின் ஏதேனும் ஆகாரம் செய்யவேண்டும். பத்தியம்:— புளியைத் தள்ளி இருத்தல் ஆவசியகம் ; எ - ம். (5)

## அபினி குளிகை

165. பேசும் பெருங்காயம் பின்னபினி நன்முருங்கை
வீசுமேற் பட்டையுடன் வீருகத்—தேசுலிங்கம்
மேற்பதங்கம் கொண்டுபலம் மேவவிரு சூடமிட்டுச்
சேர்த்து விரைந்தரைக்கச் செப்பு.

166. செப்பெருக்கன் பாலதனல் சேர்த்தரைத்துக் குன்றியத
னெப்பெடையை நீட்டிடவே ஓட்டமிடும்—அப்பப்பா
வாந்தி யுடன்பேதி வந்தவதி சாரவகை
சாந்தி யிதிலாகுஞ் சாற்று.

(க - று) பெருங்காயம், அபினி, பச்சை முருங்கப்பட்டை, மகாரசப் பதங்கம் வகைக்குப் பலம் - 1, கற்பூரம் பலம்-2, இவைகளைக் கல்வத்திலிட்டு, சிறிது எருக்கம்பால் கூட்டி மெழுகுபதத்தில் அரைத்துக் குன்றியளவு மாத்திரைகளாகத் திரட்டி நிழலில் உலர்த்தி சீசாவிலிடவும். வாந்திபேதி அஜீர்ணபேதி இவைகட்கு $\frac{1}{2}$, $\frac{3}{4}$ - மணி நேரத்திற்கு ஒன்றாகக் கொடுத்துவா நிவர்த்தியாகும்; பத்தியம் பார்லி கஞ்சியைத் தெளிவாகக் கொடுத்து வரவேண்டும். பேதி நின்றபின் வேண்டுமாயின் கஞ்சியைச் சிறிது குழம்பு பதமாகவும் கொடுக்கலாம் ; எ - ம்.

குறிப்பு :—மகா ரசப்பதங்கம் செய்முறை ; ஒரு பானையில் நான்கு படி உப்பை இடித்துப்போட்டு, நடுவில் பள்ளம் செய்து, 10 - பலம் இலிங்கத்தைப் பொடிசெய்து போட்டு மேல்சட்டி மூடிச் சீலை செய்து காய்ந்தபின்னர் அடுப்பேற்றி, 12 - சாமம் காடாக்கினியாக எரிக்க இரசமானது மேல் ஏறிப் பதங்கமாக இருக்கும். இதனையே இங்கு சேர்த்தல் நன்று,

(6)

கிராணி மாத்திரை

167. கண்டோமம் சாதிக்காய் கஞ்சா திரிகடுகு
குண்டேலம் நற்கிராம்பு கூட்டிபலம்—கொண்டுறவில்
காய்ச்சுத் துவர்கட்டி கற்கடக சிங்கிரெண்டு
பாய்ச்சபினி காற்பலமாம் பார்.

168. ரார்த்துக் கலுவத்தே பன்னுபழச் சாறோடு
சேர்த்துச் சருக்கரைகால் தேர்பலமே—கீர்த்திபெறக்
கொண்டரைத்துத் தூதுளங்காய் கூறளவு பேதிகட்கு
உண்ணபிணி யேதென்றே ஓது.

(க - து) ஓமம், சாதிக்காய், கஞ்சா, சுக்கு, மிளகு, திப்பிலி, ஏலம், கிராம்பு வகைக்குப் பலம் - 1, காய்ச்சுக்கட்டி, கற்கடகசிங்கி வகைக்குப் பலம் - 2, அபினி பலம் - $\frac{1}{4}$, இவைகளைக் கல்வத்திலிட்டு, அரைப்புக்குப் போதிய பழச்சாறுடன் $\frac{1}{4}$ - பலம் சர்க்கரை யிட்டரைத்துத் தூதுளங்காய்ப் பிரமாணம் மாத்திரை திரட்டி நிழலில் உலர்த்திச் சீசாவி லிடவும்.

இதனைத் தினம் இருவேளை கொடுக்க அஜீரணபேதி, பழைய கிராணி, அக்கினிமந்தம், ஊஷ்ணபேதி, வயிற்று உப்பிசம், வயிற்று இரைச்சல் முதலியவைகள் குணமாகும்; எ - ம்.

குறிப்பு:—கஞ்சாவை விதை முதலியன நீக்கி 7 - தடவை சலம் விட்டுக் கசக்கிக் கழுவி நிழலில் உலர்த்திப் பொன்வறலாக வறுத்தும், கற்கடக சிங்கியைப் பொன்மேனியாகச் சுட்டெடுத்தும், மற்றவைகளை இளம் வறுப்பாக வறுத்துச் சூரணித்தும் இப்பிரயோகத்தில் சேர்த்தல் வேண்டும். (7)

சித்தாந்த பைரவம்

169. சுக்குப் பொரிகாரம் சொல்நாபி காயமுடன்
சிக்க மிளகுலிங்கம் திப்பிலியோ—டொக்கசமன்
கோரிப் பழச்சாற்றில் கொண்டரைத்து மாத்திரையே
பாரில் மிளகளவே பண்.

170. பண்ணவிஞ் சிச்சுரசம் பாருள்ளித் தைலந்தேன்
எண்ணுந் தனப்பாலில் ஏந்திழையே—நண்ணிவற்றி
லொன்றில் பிணிக்கேற்ப உய்த்தால் சுரஞ்சந்நி
என்று மிருக்காதே யிங்கு.

(க - து) சுக்கு, பொரித்த வெங்காரம், நாபி, பெருங்காயம், மிளகு, இலிங்கம், திப்பிலி இவற்றைச் சமனெடையாகக் கல்வத்திலிட்டுப் பழஞ் சாற்றால் இரண்டு சாமம் கையோயாமல் அரைத்து மெழுகு பதத்தில் மிளகு பிரமாணம் மாத்திரைகளாகத் திரட்டி, நிழலில் உலர்த்திச் சீசாவிலிடவும். குழந்தைப் பருவமுதல் பெரியோர்கள் வரையிலும் பருவத்திற் கேற்றவாறு $\frac{1}{2}$, 1, 2 மாத்திரைகளாக நோயின் தன்மை யினிதுணர்ந்து இஞ்சிச்சுரசம், வெள்ளுள்ளித் தைலம், தேன், முலைப்பால் முதலியவற்றி லொன்றில் தினம் இருவேளை 3 - நாள் கொடுக்க சந்நி, சுரம், தோஷசுரம், முதலியவை கள் நிவர்த்தியாகும். பத்தியம்: புளிதள்ளல் வேண்டும்; பாலுண்ணும் குழந்தைகட்குக் கொடுக்கும்போது தாய் இப்பத்தியப்படி நடப்பது சாலச் சிறந்தது; எ - ம். (8)

---

# லேகிய வகை

## இடியாவரை லேகியம்

171. பொடித்தபடி யெள்ளுடனே போற்றுவா ரைத்தூள்
இடித்த கடலைமா விட்டுப்—பிடியரையே
தங்கவொரு வீசை சருக்கரைதேன் காற்படிசேர்த்
திங்கொன்றே யாக விடி.

172. இடித்தே யிருகழஞ் சிங்குநீ யுண்ண
வடித்தே வருநீரும் வாதாய்க்—குடித்தேங்கித்
தாகந்தீ ராதே தவிக்கு மழலையின்
வேகந் தணிந்து விடும்.

(க - து) நன்றாய்க் கழுவித் தேய்த்துப் பொட்டுப்போகப் புடைத்து இடித்தெடுத்த எள் படியொன்று, ஆவாரை வேர்ப்பட்டைச் சூரணம் வறுத்த கடலைமாவு வகைக்குப் படி - $\frac{1}{2}$, இவைகளுடன் ஒரு வீசை நாட்டுச் சர்க்கரையும், $\frac{1}{4}$ - படி நல்ல தேனையுங் கூட்டிக் கொஞ்சங் கொஞ்சமாகச் சேர்த்திடித்து லேகிய பதமாகச் செய்துகொள்க. வேளைக்கு நெல்லிக்காய் பிரமாணம் அந்தி சந்தி இருவேளை யுண்ண: தாகம், அழலை, அதிநீர் முத லிய குணங்களையுடைய மதுமேகம் தீரும். பத்தியம்; ஸ்திரீ சங்கமும் இனிப்புப் பதார்த்தங்களும் ஆகா; எ - ம். (1)

LB G9

### கருவணக்கிழங்கு லேகியம்

173. காட்டுக் கருணைசுக்குக் காராக் கருணையுடன்
நாட்டுப் புளியரணை நற்பிரண்டை—தேட்டக்
குமரி மருள்கிழங்கு கோரைதன் மூலம்
விமரிசையா யின்னும்நீ வேண்டு.

174. வேண்டுங் கடுக்காய் விரற்கருணை தன்னுடனே
தூண்டுமாங் கொட்டை கொடிவேலி—ஈண்டுற்ற
கொன்றைப் புளியோடு கொள்ளத் தவருதே
நன்மைக்காற் சேரளவாய் நாடு.

175. நாடுஞ் சரக்கனைத்தும் நன்ருகச் சூரணித்துத்
தேடும் பனைவெல்லம் சேர்மூன் று—நாடுமனற்
பாகமதி லேகியந்தான் பண்ணிக் கழற்சிக்கா
யாகமதித் தேநீ யருந்து.

176. அருந்தவுள் மூலமொடு ஆனவெளி மூலம்
இருத்துஞ்சீழ் மூல மிரத்தஞ்—சொரிந்திடவே
வந்தநோ யெல்லாம் வகைகெட் டொழியுமெனச்
செந்தா மரைமுகத்தாய் செப்பு.

(க - து) காட்டுக்கருணை, சுக்கு, காராக்கருணை, புளியரணை, பிரண்டை, குமரிவேர், மருள்கிழங்கு, கோரைக்கிழங்கு, கடுக்காய், விரல் கருணை, மாங்கொட்டைப்பருப்பு, சித்திரமூலம், கொன்றைப்புளி இவை தம்மைத் தனித்தனி நன்குலர்த்தி இடித்துச் சூரணம் செய்து வகைக்குக் கால் சேராகக்கொண்டு பின்னர் மூன் றுசேர் பனைவெல்லத்தில் சலம் விட்டுக் கரைத்து வடித்துத் தந்து பதம் வரச் சிறு தீயால் எரித்து ஷை சூரணத்தைக் கொட்டிக் கிளறி லேகியம் செய்து வேளைக்குக் கழற்சிக் காய்ப் பிரமாணம் அந்தி சந்தி கொள்ள நவமூலம் குணமாகும்; எ - ம். (2)

### பஞ்சதீபாக்கினி லேகியம்

177. ஏலமொரு காலோடு ஏற்றகிராம் போரரையும்
கோலசிறு நாகப்பூ கொள்முக்கால்—ஞாலமதில்
திப்பிலியொன் ருமிளகு சீர்தூக்க வொன்றேகால்
ஒப்ப விடித்திடவே ஓது.

178. ஓதப் பனங்கட்டி ஓங்குபல நான்கதனில்
சேதமுருக் கோவின்பால் சேர்த்திங்கே—காதலுடன்
பாகெடுத்துச் சூரணத்தைப் பாகமுற லேகியமாய்
வேகெடுத்துக் கிண்டிடவே விட்டு.

179. விட்டப் பதந்தன்னில் வீறுதேன் நெய்கூட்டப்
பட்டமுறும் பஞ்சதீ பாக்கினியாம்—இட்டளவில்
வாதபித்த சேட்டுமத்தை வம்புசெய்யா தோட்டிவிடும்
ஓதபசி மேலிடுமா மோம்பு.

(க-து) ஏலம் பலம் கால், கிராம்பு பலம் அரை, சிறுநாகப்பூ பலம் முக்கால், திப்பிலி பலம் ஒன்று, மிளகு பலம் ஒன்றேகால் இவை களைச் சூரணமாக இடித்து வைத்துக்கொள்க. பின்னர் நான்கு பலம் பனை வெல்லத்தைக் கால்படி பசுவின் பால் விட்டுக் கரைத்து வடிகட்டித்தந்து பதம்வரப் பாகு எடுத்து அதனில் முன் சித்தப்படுத்திய சூரணத் தைப் போட்டு லேகிய பதமாகக் கிளறி இறக்கிப் பின்னர் நெய் பலம்- 2 தேன் பலம்-1, விட்டுப் பிசைந்து வைத்துக்கொண்டு வேளைக்குக் கழற்சிக் காய்ப் பிரமாணம் தினம் இருவேளை உட்கொள்ள வாதபித்த கப பிரகோபங்களை யடக்கி, பசி தீபனத்தை அதிகப்படுத்தும்; எ-ம். (3)

### கதலிக்கனி லேகியம்

180. கண்டுளுத்த மாவுக்குக் காணுவின் பாலோடு
விண்டதொரு செவ்விளநீர் விட்டுபடி—கொண்டுறவில்
அத்திப் பிரயன் அரச மரப்பாலும்
நத்திடவே யாழாக்கு நன்று.

181. நன்றுஞ் சருக்கரை நான்கு பலமோடு
குன்றுகச் சிறுகன்னிக் கோழியதன்—முன்கருவு
பத்தாகும் வாழைப் பழம்பத்துச் சேர்பாக
வித்தகத்தைச் சொல்வேன் விரும்பு.

182. விரும்பச் சலமளவு வேண்டியரை சேர்கொண்
டிரும்புவா ணுவி லெரிக்கத்—தரும்பொங்கில்
விண்டப் பசுவின்பால் விட்டு முறையாகக்
கொண்டசரக் கொவ்வொன்றுங் கொட்டு.

183. கொட்டிக் கிளறியே கொண்டுவரக் கொஞ்சுமொழி
விட்ட சரக்கெல்லாம் வெந்தனலில்—திட்டமதாய்ப்

பார்லே கியத்தின் பதமானல் கிழிறக்கிச்
சேர்தேனும் நெய்யுறவு செய்.

184. செய்துசிறு புன்னைக்காய் சேரளவு உட்கொள்ள
பொய்யல்ல என்மொழிதான் போகும்நோய்—வையகத்தில்
பேயாம் பெரும்பாடு பெண்களறை யேதள்ளல்
தாயாம் மடவார்க்கே தான்.

185. தானே தளர்ந்தவுடல் தங்கம்போ ருனிறுகும்
மானே புருஷாள் மகிழ்ந்துண்ணின்—நானேதான்
சொல்வ தழகல்ல சோதிக்க விந்திறுகும்
எல்லாம் வியப்படைய வென்று:

(க - து) உளுத்தமாவு உழக்கு-1, பசுவின்பால் படி-1, செவ்விள நீர் படி-1, அத்திப்பால் - பிராயன்பால் - அரசம்பால் வகைக்கு ஆழாக்கு-1, சர்க்கரை பலம்-4, கன்னிக்கோழி முட்டையின் கருவு-10, உரித்த வாழைப் பழம்-10.

முதலில் ஒரு இரும்பு வாணலை வெள்ளிபோல் துப்பில்லாமல் தேய்த்து அலம்பி அதனில் அரைபடி சுத்தசலம் விட்டு அடுப்பிலேற்றி எரித்துப் பொங்கிவரும் தருணம் முன் சித்தப்படுத்தியுள்ள பசுவின் பாலை விட்டு காய்ச்சவும். அது அரைபாகம் சுண்ட இளநீரை விடவும். அதுவும் முன்போல் சுண்ட அத்திப்பால், பிராயன் பால், அரசன்பால் இவைகளை ஒன்றன்பின் ஒன்ருய்விட்டு கிளறிக்கொண்டு வந்து குழம்பு பதமான செவ்வி நோக்கி சர்க்கரையும், கன்னிக்கோழி முட்டைக் கருவையும், உரித்து வைத்துள்ள வாழைப்பழத்தை நன்ருய்ப் பிசைந்துவிட்டு லேகிய பதமாகக் கிளறி இறக்கிப் போதிய நெய் தேன்கூட்டி பிசைந்து ஆறவிட்டு சாடியில் பத்திரப்படுத்துக. வேளைக்குப் புன்னைக்காயளவு தினம் இரு வேளை 10, 15 - நாள் சாப்பிட ஸ்திரீகளுக்குண்டாகும் பெரும்பாடு நிவிர்த்தியாகும். இன்னும் பெண்களறை வெளிதள்ளப் பட்டிருப்பினும் உட்சுருங்கும்; தளர்ந்த சரீரம் பலப்படும். இந்த லேகியத்தைப் புருஷர்கள் சாப்பிட வியப்புண்டாகும்படி தாது பலப்படுவதுடன் சந்தானசித்தி கைவல்யமாகும்; எ - ம். (4)

போஜனசஞ்சீவி லேகியம்

186. திப்பலிகஞ் சாமிளகு சீர்வெடி யுப்போமம்
செப்பத் தொடியிந்து சேருங்கல்—லுப்போடு
சோற்றுப்பு வெங்காரம் சொல்நவாச் சாரமுடன்
ஏற்ற சவுக்கார மெண்.

187. எண்ணும் பெருங்காயம் ஏற்ககி ராம்போடு
உண்ணுங்கோஷ் டஞ்சுக் குயர்மோடி—நண்ணிபலம்
நையப் பொடித்து நறும்பூண்டில் தோலுரித்து
உய்யபல மோரைந்தா வோது.

188. ஓதப் பனங்கட்டி ஒக்க நறுந்தேனும்
வீதம் பலமைந்து விட்டரைத்துச்—சேதமிலாச்
சுண்டக்காய் போலளவு சொல்ல விருநேரம்
கொண்ட பயன்றுனே கூறு.

189. கூறும் மடவாரின் கோரில்லங் தூரத்தில்
சீறும் வலியோடு சேர்வாயு—வீறும்
வலிகுன்மம் பித்த மதிகரித்த வாய்வாம்
நலியோடு மென்றதனை நாடு.

(க - து) திப்பிலி, கஞ்சா, மிளகு, வெடியுப்பு, ஓமம், வளையலுப்பு, இந்துப்பு, கல்லுப்பு, சோற்றுப்பு, வெங்காரம், நவாச்சாரம், உழமண், பெருங்காயம், கிராம்பு, கோஷ்டம், சுக்கு, மோடி வகைக்குப் பலம் 1, உரித்த பூண்டு பலம் 5, பனைவெல்லம் பலம் 5, தேன் பலம் 5, இவைகளைக் கல்வத்திலிட்டு லேகியபதமாக அரைத்து வைத்துக்கொண்டு வேளைக்குச் சிறு சுண்டக்காய்ப் பிரமாணம் தினம் இருவேளை உட்கொள்ள ஸ்திரீகளுக்கு மாதவிலக்கத்தில் வரும் சூதகவாய்வின்வலி, குன்மவபிற்றுவலி பித்தவாயு, மந்தம், அஜீரணம் முதலியவைகள் போம்; எ - ம். (5)

குக்கில் வல்லாதி லேகியம்

190. சீர்கெந்தி குக்கில் சிறக்கப் பலமெட்டுக்
கார்நந்திச் சத்துக் கனசீந்தில்—பேரெள்ளுங்
கொண்டு பலநான்கு கூறுங் கொடிவேலி
எண்ணீர் பலமாகு மிங்கு.

191. இங்குத் திரிகடு கேற்றவிரு சீரகமும்
தங்குந் திரிபலையுந் தக்கோலம்—பொங்குமல்லி
கோட்டம் மதுரம் குரோசாணி வாலுழுவை
கூட்ட யிருவரத்தை கொண்டு.

192. கொண்டு கிராம்பு குணமாஞ் சிறுதேக்குத்
தண்ணென் சிறுபட்டை சாதிக்காய்—குண்டேலம்
வெப்பாலே வாய்விளங்கம் வெய்ய வமுக்கரா
ஒப்பப் பறங்கியுட னேது.

193. ஓதமுப் பத்திரியும் ஒப்பச் செவியமும்
காத லிளங்கடுக்காய் கர்க்கட—மோதுசிங்கி
கண்டு பறங்கியுடன் காலிவித்துக் கூகைநீர்
விண்ட வதிவிடயம் வேண்டு.

194. வேண்டுங்கோ ரைக்கிழங்கு வித்தாகும் வால்மிளகு
கண்டானைத் திப்பிலியும் காண்பூவின்—தண்பனையும்
சாரப் பருப்போடு சார்சூத மோர்பலமாய்ச்
சேரத் துகளாகச் செய்.

195, செய்தே நிறைகொண்டு செப்ப சமன்வெல்லம்
தொய்ய விடித்ததனைத் தோகையரே—மெய்யாகச்
சுண்டக்காய் போலளவு சொல்ல விருவேளை
கொண்ட தனிற்பயனுங் கூறு.

196. கூறுந் திமிர்குட்டம் குய்யக் குழிரணங்கள்
வீறுஞ் சொரிசிரங்கு வேதனையாய்—ஊறுறவே
கண்டத் துறுமாலை காண்புற் றரையாப்பு
உண்ட வுடனோடு மோது.

(க - து) கந்தகம், குக்கில், வகைக்குப் பலம்-8; சேங்கொட்டை, சீந்தில் சர்க்கரை, எள் வகைக்குப் பலம்-4; கொடுவேலி பலம்-2; சுக்கு, மிளகு, திப்பிலி, நற்சீரகம், கருஞ்சீரகம், கடுக்காய், நெல்லிவற்றல், தான்றிக்காய், தக்கோலம், தனியா, கோஷ்டம், அதிமதுரம், குரோசாணி ஓமம், வாலுழுவை, சிற்றரத்தை, பேரரத்தை, கிராம்பு, சிறுதேக்கு, சன்னலவங்கப்பட்டை, சாதிக்காய், ஏலக்காய் வித்து, வெப்பாலையரிசி, வாய்விளங்கம், அமுக்கரா கிழங்கு, பறங்கிச்சக்கை, தாளிசப்பத்திரி, ஜாபத்திரி, லவங்கப்பத்திரி, செவ்வியம், பிஞ்சிக்கடுக்காய், கடுக்காய்ப்பூ, கண்டு பறங்கி, பூனைக்காலிவித்து, கூகைநீர், அதிவிடயம், கோரைக்கிழங்கு, வால்மிளகு, ஆனைத்திப்பிலி, நிலப்பனை, சாரப்பருப்பு, வாலேரசம் வகைக்குப் பலம் 1.

செய்பாகம்: சேங்கொட்டை, கந்தகம் இவைகளைச் சுத்திசெய்து சூதத்தைக் கந்தகத்துடன் உறவாகும்படி நன்றாய் அரைத்துப் பின்னர்

மற்றவைகளை நன்றாய் இடித்துச் சூரணம் செய்து, சிறு கண்களையுடைய சல்லடையால் அரித்து ஷை கந்தகத்துடன் கூட்டிக் கல்வத்திலிட்டு இரண்டொருநாள் கலக்கும்படியாக நன்றாய் அரைத்துச் சமனெடை பனைவெல்லம் கூட்டி 2, 3-சாமத்திற்குக் குறையாமல் எல்லாச் சரக்குகளும் உறவாகும்படி நன்றாய்ப் புரட்டிப் புரட்டி இடிக்கவும்; பின்னர் சேதப்படாமல் சாடியில் பத்திரப்படுத்துக. இதை வேளைக்குச் சுண்டக்காய்ப் பிரமாணம் தினம் இருவேளை அரை அல்லது ஒரு மண்டலம் உட்கொள்ள திமிர், குட்டம், குழிரணங்கள், சொறி, சிரங்கு, கண்டமாலை, புத்து, அரையாப்பு முதலிய மேக சம்பந்தமான ரோகங்கள் யாவும் நீங்கும்; எ - ம். (6)

### வஜ்ஜிரகண்டி லேகியம்

197. காட்டாத்திச் சுக்குக் கசகசா வெள்ளேலந்
தேட்டகி ராம்பபினி சேர்விடயம்—கூட்டதிரு
நீற்று வனமூலி நேர்வித்துக் காமப்பூ
தோற்றமுறும் வாலுழுவை சொல்.

198. சொல்சாதிக் காயோடு சூரணித்தே யோர்பலமாய்
நல்லபன வெல்லம் நவில்பலமே—சொல்பத்தா
யிட்டுபத லேகியமா யேற்கச்செய் துண்டிடவே
கட்டுறுமே விந்தெவர்க்குங் காண்.

(க - து) காட்டத்திப்பூ, சுக்கு, கசகசா, ஏலம், கிராம்பு, அபினி, அதிவிடயம், திருநீற்றுப்பத்திரி விரை (சப்ஜாவிரை) மதனப்பூ, வாலுழுவை, ஜாதிக்காய் இவற்றை இடித்து வஸ்திரகாயம் செய்து வைத்துக்கொள்க. பத்து பலம் பனை வெல்லத்தில் சலம் விட்டுக் கரைத்து வடிகட்டி இரும்பு வாணலிலிட்டுத் தந்து பழம்வரக் காய்ச்சி அதனில் முற்கூறப்பட்ட சூரணத்தைக் கொட்டிக் கிளரி லேகியம் பதமாக எடுக்கவும். சுண்டக்காய்ப் பிரமாணம் அந்திசந்தி சாப்பிட்டுவர தாது கட்டும்; போகத்திலும் இன்பத்தை யுண்டாக்கும்; இன்னும் அதிசாரபேதி இரத்தபேதி முதலியவைகளும் நிவர்த்தியாகும்; எ - ம். (7)

### மகா பூரணாதி லேகியம்

199. பத்திரீர் முள்ளிவிரை பார்முருங்கை நற்கடுக்காய்
அத்தி யரசாலன் ஆகுமல்லி—வித்துடனே

வெள்ளரி காமப்பூ வித்துப்பூ ணேக்காலி
கள்ள மறுசாதிக் காய்.

200. காயுடன் சீரகம் காணிலப்ப னங்கிழங்கு
ஆயவவ் வாகைவிரை ஆனபல—மாயதற்பின்
சீர்கசக சாமுந் திரிவாது மைச்சாரை
சேர்கா லெனத்தூக்கச் செப்பு.

201. செப்ப வதிமதுரம் சிராஞ்சோம் புக்கோஷ்டம்
கப்புநன் னரியுடன் கார்சுக்கு—மொப்பிடவே
வேர்விலா மிச்சமுடன் வெட்டிவேர் வால்மிளகு
சீர்சடா மாஞ்சிதனேச் சேர்.

202. சேரேசா பத்திரியும் தேட்டகி ராம்போடு
பாரே விருலவங்கப் பட்டையுடன்—நேரேதான்
சிற்றரத்தை திப்பிலியும் சீர்தாளி சப்பத்ரி
வற்கம் பலமறையே வாங்கு.

203. வாங்கிச் சரக்குதனே வன்மை யுறப்பொடித்துத்
தாங்கிரண் டரைப்பலமே சார்கஞ்சா—வீங்கிடவே
பாலிலிட்டு நெய்கொண்டு பற்றிமுச் சேர்கண்டு
ஏலவிட்டு லேகியமே எண்.

204. எண்ணச்செய் லேகியத்தி லேற்கத் திராட்சையது
பண்ணப் பலமஞ்சி நன்குறவே—மண்ணி
இயலத்தேன் விட்டே இதமாக்கி நோயின்
மயல்தீர உண்டிங்கே வாழ்.

205. வாழ்விப் பூர்ணாதி மாலேகி யந்தன்னேச்
சூழவொரு மண்டலமே சோர்வுற்ற—பீழையற
மன்னு மிருவேளே மங்கையே உட்கொண்டால்
என்ன பிணியு மிலே.

(க - து) *நீர்முள்ளி விரை, முருங்கை விரை, கடுக்காய், அத்தி விரை, அரசம்விரை, ஆலம்விரை, தனியா, வெள்ளரி விரை, மதனப்பூ, பூனேக்காலிவிரை, சாதிக்காய், சீரகம், நிலப்பனங்கிழங்கு, காட்டு வாகை வித்து வகைக்குப் பலம் - 1, கசகசா, முந்திரிப் பருப்பு, வாதுமைப் பருப்பு, சாரைப்பருப்பு வகைக்குப் பலம் - 2.*

அதிமதுரம், சோம்பு, கோஷ்டம், நன்னாரிவேர், சுக்கு, விலாமிச்சம் வேர், வெட்டிவேர், வால்மிளகு, சடாமாஞ்சில், ஜாப்பத்ரி, கிராம்பு, சன்ன லவங்கப்பட்டை, பெரிய லவங்கப்பட்டை, சிற்றரத்தை, திப்பிலி, தாளிசப் பத்திரி வகைக்குப் பலம் - ½.

பருப்பு இனங்களைத்தவிர மற்றவற்றை இரவியில் நன்குலர்த்தி இடித்து வஸ்திரகாயஞ் செய்து வைத்துக்கொள்க. 2½ - பலம் கஞ்சாவை சலம் விட்டு 7 - தடவை கசக்கிப் பிழிந்து பின்னர் தளர்ச்சியாக ஓர் சீலையில் முடிந்து 2 - படி பாலில் போட்டுக் காய்ச்சிப் புரைகுத்தி, மறுநாள் கடைந்து வெண்ணெய் எடுத்து நெய் காய்ச்சி, முன் சித்தப் படுத்தியுள்ள சூரணத்தில் கொஞ்சங் கொஞ்சமாக விட்டுப் பிசரி வைத்துக்கொள்க.

பருப்பு இனங்களைப் பாலும் சலமுமாக விட்டரைத்துப் பால் பிழிந்து எடுத்து அதனில் 24 - பலம் சீனாகற்கண்டை யிட்டுப் பாகுபதம் வரக் காய்ச்சி நெய்யோடு உறவாக்கி வைத்துள்ள சூரணத்தைக் கொஞ்சங் கொஞ்சமாகப் போட்டுக் கிளரி இறக்கியபின், சுத்தமாக ஆய்ந்தெடுத்த 5 - பலம் விரையில்லாத திராட்சப்பழமும், போதிய அளவு உயர்தரமான தேனும்விட்டுப் பிசைந்து சாடியில் பத்திரப் படுத்துக.

வேளைக்குச் சிறு சுண்டக்காய்ப் பிரமாணம் தினம் இருவேளை உட் கொண்டு பின் பசுவின்பாலைச் சாப்பிடவும். இப்படி மண்டலம் சாப்பிட விந்திறுகும்; போகசக்தியை அதிகப் படுத்துவதுடன் குன்மம், இருமல், வாதரோகங்கள் பலவும் குணமாகும்; பெண்கள் உண்ண தேகம் கட்டுப் படும்; மக்கட்பேறு உண்டாகும், பத்தியம் நல்ல ஆகாரங்களைக் கொள்ள வேண்டும்; எ - ம். (8)

ஜாதிக்காய் லேகியம்

206. மாசிக்காய் ஜாதிக்காய் மன்னுங் கசகசா
தேசுற்ற கர்க்கடக சிங்கியுடன்—வீசும்
புளிக்கொட்டைத் தோலோடு போதவகை யொன்றும்
இளிவில்ப லந்தா னெடு.

207. எடுத்தே யாவி னினியபால் விட்டே
அடுக்கவரைத் தவ்வளவே யான—தொடும்பனையின்
கண்டது கூட்டிக் கழறுமுயர் லேகியமே
அண்டிடச்செய் வாய்பதத்தி லாம்.

208. ஆமே கழற்சிக்கா யவ்விடையே உட்கொள்ளப்
போமேரத் தஞ்சிதம் புண்பேதி—வேமேதான்
மூலகி ராணியுடன் மூலவகைக் கேயமனுய்
ஏல உரைத்தே னிது.

(க - து) மாசிக்காய், ஜாதிக்காய், கசகசா, சுட்டெடுத்த கர்க்கடக சிங்கி, புளியங்கொட்டைத் தோல் ஆகிய இவற்றை வகைக்கு ஒவ்வொரு பலங்கொண்டு, பசுவின்பால் விட்டரைத்து, அவ்வெடைக்குச் சரியாகப் பனங்கற்கண்டு சேர்த்து லேகியத்தைக் கிளரிப் பதனம் செய்யவும். ரத்தபேதி, சீதபேதி, ரத்தமூலம், மூலகிராணி முதலிய வியாதிகட்கு இம்மருந்தில் கழற்சிக்காய் அளவு தினம் காலை மாலை இருவேளை உண்ண இரண்டொரு தினங்களில் பூரணகுணம் தெரிய வரும்; எ - ம். (9)

---

## தைல வகை

மெழுகு தைலம்

209. தேருங் கடலுப்பும் தேன்மெழுகு வீசையரை
நேருங் கருப்புப்பு நேயமுறச்—சேருபலம்
பத்தோடு மஞ்சள் பகர்வா லுழுவையுடன்
சத்தான தூபமிடச் சாற்று.

210. சாற்றக் கருவாய் சரிந்த வதன்பட்டை
போற்றவெண் குந்திருக்கும் போட்டபின்—ஏற்றதொரு
சாதிக்காய் தன்னேடு சாரு மதன்மலரும்
போதிக்க முக்கழஞ்சாய் போட்டு.

211. போட்டு முறைப்படியே பூரிக்கத் தீயிட்டு
மூட்டும் புகைத்தயிலம் முற்பூச—நீட்டாப்
பிடிப்பு முடக்கோடு பேசுபக்க வாதம்
கடிந்தோடு மென்றே கருது.

(க-து) கடலுப்பு பலம் - 20, தேன் மெழுகு பலம் - 20, கருப்புப்பு பலம் - 10, மஞ்சள், வாலுழுவையரிசி, சாம்பிராணி, சன்னலவங்கப் பட்டை, குங்கிலியம், சாதிக்காய், சாதிபத்திரி வகைக்கு மூன்று கழஞ்சு, இவைகளில் தேன் மெழுகைச் சிறு துண்டுகளாக அரிந்தும், உப்பு வகைகளை அரைக்கும் இயந்திரத்திலேனும் உரலிலேனும் இட்டுப் பாவு போல் செய்தும், மற்றவற்றை இடித்துத் தூளாகச் செய்து, பின் பக்கத்தில் குறிப்பிட்டுள்ள சித்திரத்திற் கிசைந்தவண்ணம், 4 - 5 - படி கொள்ளத்தக்க கழுத்து நீண்ட பெருங்கடத்திலிட்டு, அதன் வாய்க்குப் பொருத்தமான வாயுள்ளதும், அடிகடத்திற்கு நான்கி லொருபங்கு அள வுள்ளதுமான மற்றொரு சிறு கடத்தைக் கவிழ்த்து, பொருத்து வாய்க்குச் சந்தில்லாமல் மண்பூசி மெல்லிய கயிற்றினால் இரண்டு கடங்களின் வாயைச் சேரக்கட்டி அதன்மேல் ஏழுசீலை செய்து, இவ்விரண்டு கடங்களின் நடு இடங்களில், பெரிய கடத்திற்கு மேற்புறத்தில் சுண்டுவிரல் நுழையத் தக்க துவாரமும், சிறிய கடத்திற்குக் கீழ்ப்புறம் ஒரு பெரும் உழுந்து நுழையத்தக்க மூன்று துவாரங்களும் நெருங்கச்செய்து, மேல் துவா ரத்தில் (பெருங்கடத்தில் செய்த துவாரம்) புகை வெளிப்படாதிருக்க, ஒரு சிறு ஓட்டினால் மூடி, அதன்மேல் பசுவின் சாணத்தை அப்பி, அவ்விடம் மேற்புறமாகவும், சிறு கடத்திலிட்ட துவாரம் கீழ்ப்புறமாகவும் இருக்கப் பெருங்கடத்தை ஒருக்கணித்து, புகை அடுப்பின்மேல் வைத்து, அடுப்பிற்கும் கடத்திற்கும் உள்ள இடைவெளிக்கு மண்ணறைந்து பூசிச் சிறு கடத்தின்கீழ் முகத்துவாரத்தின் வழியாகப் பீங்கான் பாத்திரத்தை வைத்து, 1 - $1\frac{1}{2}$ - சாமம் சாதாரணமான தீயாகவும், பின்னர் காடாக்கினி யாகவும் எரிக்கப் புகையோடு தைல மிறங்கும். இப்படி தைலங் காணும் வரையில் எரிப்பதுடன் எரிக்கும் தீய்க்கும் தைலத்தோடு வெளிவரும் புகைக்கும் சம்பந்தப்பட்டால் கவனித்து வருதல் வேண்டும். தவறிற் சில சந்தர்ப்பம் புகை தீப்பற்றிக் கடத்திற்குள் சென்று கடம் வெடித்து நஷ்டமாக்குவதுடன், செய்பவர்களுக்கும் தீங்கை விளைவிக்கும். தைல மிறங்குவதற்கு முன் மெழுகு உருகி வருமாயின் சற்றுப் பெருங் கடத்தைச் சிறிது நிமிரவைத்து எரித்தல் வேண்டும். மெழுகும் உடன் சேர்ந்த சாக்குகளும் நன்றாய்த் தீய்ந்த பதத்திற்றானே உயர்தரமான தைல மிறங்கும். இதனைப் பாரிசவாதம், பிடிப்பு, வெட்டுக் காயங்கள், அண்டவீக்கம், குடைச்சல் முதலியவற்றிற்குப் பூச இரண்டொரு நாளில் குணம் செய்யும்; எ - ம்.

(1)

## மெழுகுத்தைல பாண்ட விவரம்




### சித்திர விளக்கம்

1. கழுத்து நீண்ட பெருங் கடம்
2. சிறு கடம்
3. பெரிய கடத்தின் மேற்பாகத்தின் துவாரம்
4. சிறிய கடத்தின் அடிப்புறத்தில் நெருங்க இட்ட 3-துவாரம்
5. சாணம் அப்பிய இடம்
6. சிறு கடத்தினின்று சொரியும் தைலத்தைச் சேகரிக்க வைத்த பீங்கான் பாத்திரம்.

வேறு

212. கொஞ்சங் கருப்பூரம் கொள்ளும் நறுந்தூபம்
மிஞ்சுவெண் குங்கிலிய மீருமல்—அஞ்சுபலம்
கார்க்கும் மிளகோடு கான்றேனின் தன்மெழுகு
பார்க்கப் பலந்தானே பத்து.

213. பத்தாஞ் சரக்கென்னப் பார்சொல் கறிமஞ்ச
ளித்துடனே மாஞ்சி விரண்டரையே—நத்துபலம்

வேலையுப் போடுமணல் வேண்டிபடி காலரையாய்
வாலையிலே தைலந்தான் வாங்கு.

214. வாங்கும் புகைத்தைலம் வாளாம் பிடிப்புக்கும்
ஏங்குங் குடைச்ச லெரிவீக்கம்—ஓங்காதே
ஏய்க்கும் முகவாதம் ஏற்றவெட்டுக் காயத்தும்
தேய்க்கப் பரிகாரந் தேர்.

(க-து) கற்பூரம், சாம்பிராணி, வெள்ளைக் குங்கிலியம் வகைக்குப் பலம் 5, மிளகு, தேன் மெழுகு வகைக்குப் பலம் 10, கறி மஞ்சள், சடா மஞ்சில் வகைக்குப் பலம் $2\frac{1}{2}$, கறியுப்பு கால்படி, மணல் அரைப்படி.

முதலில் மெழுகைச் சிறு துண்டுகளாக நறுக்கியும், மற்றவற்றை வெவ்வேருக இடித்தும் வைத்துக்கொண்டு பின்னர் தைலம் இறக்குவதற்காகச் சித்தம் செய்துள்ள பாண்டத்தில் முன்னே மெழுகு துண்டுகளைப் போட்டு அதற்குமேல் மணலைப் பரப்பி, மீண்டும் சாம்பிராணி, வெள்ளைக் குங்கிலியம், மிளகு, மஞ்சள், கற்பூரம், உப்பு, சடா மாஞ்சில் முதலியவைகளின் சூரணங்களை முறையே ஒன்றன்பின் ஒன்ருகப் போட்டுப் பரப்பி, மேல் சட்டி மூடிச் சீலை செய்து, முன் கூறப்பட்டுள்ள விதிப்படி தைலம் வாங்கவும். இதனை மேல் தேய்ப்பதினுல் பாரிச வாதம், குடைச்சல், வீக்கம், கைகால் பிடிப்பு, ஆண் குறி சோர்வு, ஸ்தன தளர்ச்சி, வெட்டுக் காயங்கள் யாவும் குணமாகும்; எ-ம்.

இத் தகைய மெழுகு தைலத்தை வேறு விதமாகச் செய்வதுண்டு. அதன் விவரம் வருமாறு :—

கழுத்துக்குறுகிய ஒரு மட் கடத்தில் மெழுகு கலத்திற்காகப் பாகங்களில் கூறப்பட்டுள்ள சரக்குகளைப் போட்டு, வாயை ஒரு அகலால் மூடி மண் சீலை எழு செய்து, உலா வைத்துக் கழுத்தின் கண் ஒரு துவாரம் உண்டாக்குக. பின்னர் மூன்று முழம் நீளமுள்ள ஒரு பித்தளைக் குழை, ஒரு முனை கையின் பெரு விரல் நுழையும் அளவிற்கும், மற்ருேர் முனை சுண்டு விரல் நுழையும் அளவிற்கும் செய்வித்து, அதன்மேல் எழு சீலைமண் செய்துலர்த்திப் பருமனுன முனையைக் கழுத்தினிடமாகச் செய்யப்பட்டுள்ள துவாரத்தில் உட்செலுத்திக் கழுத்தின் மையத்தி லமர விட்டுச் சந்துக்கு மண் பூசிக் கடத்தின் கழுத்திலிட்ட குழை ஆடாமலிருக்கும் பொருட்டுக் கயிற்ருல் வரிந்து கட்டி, அதன்மேல் நன்ருய்ச் சீலை செய்து காய வைத்துப் புகை அடுப்பின்மேல் வைத்து, கடத்திற்கும் அடுப்பின் வாய்க்கும் உண்டான பொருத்தத்திற்கு மண்ணறைந்துப் பூசுக. இப்பால் களிமண் நான்கு

பங்கும், பசுவின் சாணம் ஒரு பங்குமாக நன்ருய்ப் பிசைந்து, கழுத்தி னின்று அடுப்பின் மேலோரம்வரை கடத்தைச் சுற்றி அப்பி, ஓரிரவு ஆற விட்டு மறுநாள் எரிக்கக் குழையின் வாயிலாகத் தைலம் சொட்டும். அதனை வசதியான பாத்திரத்தில் சேகரித்துக்கொள்க. (2)

## வேறுவிதக் கருவி




### சித்திர விளக்கம்

1. கழுத்துக் குறுகிய மட்கடம்
2. அகலால் வாய்மூடிச் சீலை செய்தது
3. கழுத்திலிட்ட துவாரம்
4. மண் சீலையிட்ட குழை
5. அடுப்பிற்கும் கடத்திற்கும் உண்டான பொருத்துவாய்க்கு மண்ணறைந்தது
6. கடத்தைமூடி மண்ணும் சாணமும் அப்பியது
7. தைலம் சொட்டும் வாய்

### காதுநோய்க்குச் சிகிச்சை

215. ஊமத்தஞ் சாற்றி னுடனளவாம் நல்லெண்ணெய்
சேமித்து நன்கெரித்துச் சேகரிப்பா—யாமிதனற்
காதுவலி சீழ்வருதல் காணும் பெருங்குத்தல்
தீதுவலி யேகுந் தெளி.

(க - து) ஊமத்தையிலைச் சாறும், நல்லெண்ணெயும், சமவளவாகக் கொண்டு பதமுறக் காய்ச்சி வடித்து ஆறினபின் சீசாவில் இட்டுவைக்க

வும். இதனைக் காதுநோய், காதில் ரணம், காதில் சீழ்வருதல் முதலியவை கட்குத் தினம் இருநேரம் ஒன்றல்லது இரண்டு துளிவீதம் காதில் விட்டு உட்சென்ற பின் சிறிதுநேரம் அசையாமலிருந்து பின்னர் பஞ்சினல் அடைத்து வைக்கவும். இங்ஙனம் செய்யின் மூன்று வேளையில் குணமாகும்; எ - ம். (3)

### வேறு

216. பூநாகஞ் சூடன் பொருந்து சுருள்பட்டை
தானுநல் லெண்ணெய் தனிற்பெய்து—கோனும்
இரவிமுகத் தேழுநா ளிட்டெடுப்பா யின்றே
திரமாப்போங் காதுவலி தேர்.

(க - து) பூநாகம், கற்பூரம், சுருள்பட்டை இம்மூன்றையும் சம வளவாகக் கொண்டு நான்குபங்கு எடையுள்ள நல்லெண்ணெயில் போட்டுக் கலக்கி இரவியில் வைத்துப் பூநாகத்தி லுண்டான ஈரம் வற்றினபின் வடித்துச் சீசாவில் விட்டு வைக்கவும். இதனை முன்முறையில் கூறப்பட்ட செவி நோய்களுக்கு உபயோகிக்கக் குணமாகும்; எ - ம். (4)

### கரப்பான் சிகிச்சை

217. கேளு மருந்து கெடுதியா மேகத்தான்
மூளுஞ் சிறுமக்கள் மொய்கரப்பான்—மாள
அரிகெந்தி கால்பலமே யத்தாழைப் பாலால்
எரித்துமேற் பூசிடவே யெண்.

(க - து) தாளகம், பருப்புக்கெந்தகம் வகைக்குப்பலம் கால், கல்வத்திலிட்டு நன்ருய் அரைத்துப் பின்னர் ஒரு தேங்காயினின் றெடுத்தப் பாலில் சிறிதுபாகம் விட்டு நன்ருய் அரைத்து மிகுதியுள்ள பாலையும் விட்டுக் கலக்கி ஒரு அயச்சட்டியிலேனும், மண்பாண்டத்திலேனும் இட்டு எண் ணெய் பிரியும் வரையில் பதமாகக் காய்ச்சி வடித்து வைத்துக்கொண்டு, கரப்பான் பெருஞ்சிரங்கு ரணம் முதலியவைகட்குப் பூசிவர அதிசீக்கிரத் தில் குணமாகும்; எ - ம். (5)

### ஸ்நான தைலம்

218. கிள்ளுந் துளிர்நொச்சி கேட்கப்பூ நாகமும்
விள்ளப் பலமொன்று வீருகக்—கொள்மிளகு
தானரையா மாவின்பால் தந்தாட்டி யாழாக்குக்
கானவெண்ணெய் விட்டுறவாய்க் காய்ச்சு.

219. காய்ச்சுந் தயிலங் கருதி யிருவாரம்
தேய்த்துத் தலைமுழுகத் தேரக்கேள்—பாய்ச்சி
வருஞ்சீதத் தான்பிடரி வம்புத் தலைநோ
யிருக்காம லோடிடுமே இங்கு.

(க - து) நொச்சிலைக்கொழுந்து, பூநாகம் வகைக்கு ஒரு பலமாகவும், மிளகு அரைப்பலமாகவும் பசுவின் பால்விட்டு அரைத்து ஆழாக்குச் சுத்தமான நல்லெண்ணெய் சேர்த்துக் கலக்கி மெழுகுபதமாகக் காய்ச்சி ஸ்நானம் செய்ய இரண்டு மூன்று ஸ்நானத்தில் தலைபிடி, கழுத்துவலி முதலியவைகளை நிவர்த்தி செய்யும். அன்று ஆகாரம் செய்வதில் புளிதள்ளியும்; பகல் நித்திரை, அலைச்சல், திரிச்சல் முதலியவற்றை நீக்கியுமிருத்தல் வேண்டும்; எ - ம். (6)

### கந்தகத் தைலம்

220. கந்திபல மைந்து கருதினங்க ளோர்பலமே
சந்தவீ ரஞ்சாரம் சாற்றிருகா—சுந்திடையோ
டாகுமால் தேவிகா சாவினெய் கொண்டரைத்துப்
பாகு பதமொக்கப் பார்.

221. பார்த்தக் குழம்பதனைப் பண்புமுழச் சீலைதனில்
சேர்த்துத் திரித்துமே சேற்கண்ணுப்—கீர்த்திபெற
தீத்தைலம் வாங்கியபின் சீனியிலே ழெண்டுளிகள்
கோத்துக் கூசாமல் கொடு.

222. கொடுக்கக் கிராணிதிமிர் குட்டமுடன் குன்மம்
தொடுத்த படைமேகம் சூலை—கடுக்கும்புண்
சொல்புரைகள் புத்தோடு சூழ்கண்ட மாலையுமே
அல்லல்பட் டோடு மறி.

(க - து) கந்தகம் பலம் 5, வெடியுப்புப் பலம் 1, வீரம், சாரம் வகைக்கு விராகனெடை 2, தாளகம் விராகனெடை 1, இவற்றைக் கல்வத்தில்போட்டுப் பசுவின் நெய்கொண்டு குழம்பு பதமாவதற்குப் போதிய அளவு சிறிது சிறிதாகவிட்டு நன்றாய் நான்குசாமம் எல்லாச் சரக்குகளும் ஒருமிக்க உறவாகும்படி அரைத்துச் சுத்தமான ஒரு முழம் வெள்ளைத் துணியில் தடவித் திரிபோல் அதைத் திரட்டி வளையமாகச் சுற்றியாவது, அல்லது குட்டையாக மடித்து ஒருங்குசேரக் கட்டியாவது சித்திரத்தில் குறிப்பித்தவண்ணம் இருப்புக் குறட்டினாலேனும், அல்லது சலாக்கினாலேனும் குற்றி, இடது கையில் பிடித்துக்கொண்டு தீயிட்டு எரியச்செய்து அதனடியில் ஒரு கோப்பையை வைத்துச் சொட்டும் தைலத்தைச் சேகரப்

படுத்தவும். தீயின் சுடர் குன்றும்போது வேண்டுமாயின் வலது கையினால் ஒரு சிறு இருப்புக் கரண்டியால் முன்சொட்டிய தைலத்தில் சிறிது முகந்து, அத்திரியின்மீது விட்டு எரியச்செய்து அதிலுள்ள தைலமெல்லாம் சொட்டும்படியாக வாங்கவும், பின்னர் இதனை மெல்லிய சீலையில் வடித்துச் சீசாவில் பத்திரப் படுத்துக. வேளைக்கு 7, 8 - துளி வரையில் ஒரு விராகனெடை வெள்ளைச் சருக்கரையில் மத்தித்துத் தினம் இருவேளை தேக திடத்திற்கு ஏற்றவாறு கால், அரை மண்டலம் உட்கொள்ளவும்; எ - ம்.

இதனால் கிராணி, திமிர், குட்டம், குன்மம், செம்படை, கரும்படை, ஊறல் படை, சூலை, புண்புரைகள், புத்து, கண்டமாலை, முதலிய பல ரோகங்கள் நிவர்த்தியாகும். இதற்குப் பத்தியமில்லை. இஷ்டம்போல் எல்லாவற்றையும் புசிக்கலாம். மாதர் சங்கல்பம் மாத்திரம் கூடாது, தவறின் தேகத்தைக் கெடுத்து தேஜஸை முற்றிலும் அழிக்கும். இத்தைலத்தை ஒருமுறை 10-நாள் வரையிலும் உட்கொண்டு பின்னர் ஒரு வாரம் மருந்தில்லாமல் விட்டுக் குணம் தெரியாவிடின் மீண்டும் ஒருமுறை ஆரம்பிக்கவும். இப்படியே ஒரு மண்டலம் சாப்பிட மேற்கூறப்பட்ட வியாதிகள் தீருவதுடன் நல்ல தேஜசும் சுந்தர வடிவமும் உண்டாகும். (7)

## சுடர்தைல பாகம்




### சித்திர விளக்கம்

1. சரக்கு அல்லது திரி
2. சலாக்கு
3. சுடர்
4. கோப்பை
5. சுடர் கொண்டெரிய சிறிது நெய் விடல்

## கெந்தகத் தைலம்

223. பாற்சாம் பிராணியுடன் பாரி லுறுங்கெந்தி
காற்பல மேகொண்டு கல்வத்தில்—சேர்த்தவுடன்
ஆற வரைத்தே யடைத்தநெய் சீலையெரி
ஏறச் சுடர்தைல மிங்கு.

224. இங்குச் சுடர்தைலம் ஏந்திழையே நீபூச
பொங்குஞ் சொரிசிரங்கு புற்றெழியும்—தங்குலகில்
பண்புடனே செய்து பலர்குணமே பெற்றதனல்
அன்புடனே சொன்னேன் அறி.

(க - து) பால் சாம்பிராணி பலம் கால், கெந்தகம் பலம் கால் இவற்றைக் கல்வத்திலிட்டு நன்றாய்ப் பொடிசெய்து ஒரு சுத்தமான சீலையில் நெய்யைத் தடவி அதன்மீது தூவித் திரிபோல் திரட்டி ஒரு இரும்புக் கம்பியின் முனையில் கட்டி முற் கூறப்பட்ட சுடர்தைல விதிப்படி கொளுத்தித் தைலம் வாங்கவும். இதனைப் புண் சொரி சிரங்குப் புற்று முதலியவைகளின்மீது தடவிவர அதிக சீக்கிரத்தில் ஆறும். இன்னும், சொரி சிரங்குகளைத் தினம் ஒருவேளை நன்றாய்த்தேய்த்து அலம்பி ஈரமில்லாமல் வஸ்திரத்தால் துடைத்து இத் தைலத்தைத் தடவிவருதல் சாலச் சிறந்தது; எ - ம். (8)

## மூல முவளக்குத் தைலம்

225. வட்டவிதை நல்முருக்கன் வாங்கிப் பலமிரண்டு
திட்டக் கலுவத்தே சீராக—இட்டரைத்து
வீரமுக் காசோடு வேண்டுங்கோ ரோசனையுங்
கூறவொரு காசெடையே கொள்.

226. கொள்ளு மிவைதம்மைக் கோருஞ்சிற் றண்டத்தின்
விள்ளுமஞ் சட்கருவை விட்டாட்டி—உள்ளகரிக்
குண்டுமணி போற்றிரட்டிக் குப்பியிட்டுத் தீமூட்டிக்
கொண்டிறங்குந் தைலத்தைக் கூட்டு.

227. கூட்டியென் சொற்படிக்கே கூர்மூலத் தம்முளையில்
ஊட்டிமேற் பூசிடவே ஒன்பதுநாள்—ஓட்டமிடும்
போக்கு மிகுரத்தம் பொல்லா வதன்கடுப்பு
நீக்கக் குருவாம் நினை.

(க - து) இரண்டு பலம் பலாசுவிதை (முருக்கன் விதை)யைக் கல்வத்திலிட்டு நன்றாய் அரைத்தேனும் அல்லது, கல்லுரலில் போட்டு

மசிய இடித்துச் சலித்து மெல்லிய தூளாகச் செய்தேனும் கல்வத்தி விட்டு 3 - விராகனெடை வீரமும், ஒரு விராகனெடை கோரோசனையும் போட்டு, பத்துச் சிற்றண்டத்தின் மஞ்சட் கருவுக்குக் குறையாமல் விட்டு 2 - மணி நேரம் அரைத்து மெழுகு பதத்தில் ஆனை குன்றிப் பிரமாணம் உருண்டைகளாகச் செய்து 1 - மணி காலம் நிழலில் உலர்த்தி யுடனே எழு சீலை செய்த கறுப்புக் குப்பியிலிட்டு வாய்க்குக் கம்பி செருகிக் குப்பிப் புடத் தைல பாகப்படி தைலம் வாங்கி மூல முளைக்குத் தினம் இராக் காலங்களில் தடவிவர ஒன்பதுநாள் அல்லது ஒரு பட்சத்தில் முளையின் பாதை நீங்கும் ; எ - ம்.

## குப்பிடக் கருவி




சித்திர விளக்கம்

1. புட்டி
2. புட்டியின் கழுத்தும், சிக்குண்ணுமாறு செருகிய கம்பியும்
3. சால்
4. சாலின் அடிப்பாகத்தி விட்ட துவாரம்
5. இரும்படுப்பு

6. புட்டி சூழ எருவடுக்கியது

7. பீங்கான் பாத்திரம்

தைல மிறக்குவதற்காகக் கூறப்பட்ட சரக்குகளை எழுசீலை செய்த ஒரு புட்டியினுட் செலுத்தி, வாயினின்று கழுத்துவரை பிராந்தி புட்டி மேல் கட்டப்பட்டிருக்கும் கம்பியைச் சிக்காக்கி உட்செலுத்தி உள்ளிட்ட சரக்கு வெளிவராதடைத்து வைத்துக்கொள்க. ஒரு சாலின் அடிப் புறத்தின் மத்தியில் புட்டியின் கழுத்து நுழையும் வண்ணம் துவாரம் செய்து அதனை ஒரு இரும்பு அடுப்பின்மேல் வைத்துச் சரக்கிட்ட புட்டியின் வாயைத் துவாரத்தின் வழியாகச் செருகிச் சந்திற்கு மண் பூசிப் புட்டியைச்சுற்றி அரையடி கனமிருக்க எருவடுக்கிப் புடமிடச் சரக்குகள் தீய்ந்து புட்டியின் வாய்வழியாகத் துளி துளியாகத் தைல மிறங்கும். அதனை ஒரு தூய்மையான பீங்கானில் வாங்குக; எ-ம். (9)

சிவனார்வேம்பு குழித்தைலம்

228. சங்கம்வேர் பூவரசன் சாற்றச் சிவன்வேம்பு
பொங்கமுடன் வாலுழுவை போட்டுசமன்—இங்குக்
குழித்தைல மாவிறக்கிக் கொள்ளரைக் காசு
அழிமேகப் புற்றெழியு மாம்.

(க-து) சங்கம்வேர், பூவரசம்பட்டை, சிவனார்வேம்பு, வாலுழுவை இவைகளைச் சிறு துண்டுகளாக நறுக்கி, அடியில் வரைந்துள்ள சித்திரத்தின்படி ஒரு குடுவையின் அடியில் மூன்று சிறு துவாரங்களை யிட்டு அதனில் போட்டு வாய்க்கு ஓடு மூடிச் சீலைசெய்துலர்த்தி வைத்துக் கொள்க. பின்னர், பூமியில் சிறு பள்ளந் தோண்டிப் பீங்கான் பாத்திர மொன்றை வைத்து முன் சித்தப்படுத்திய குடுவையின் துளையிட்ட பாகம் பீங்கானுக்கு நடுவிலிருக்கும்படிப் பொருந்த வைத்துச் சந்தில்லாமல் பீங்கானுக்கும் குடுவைக்கும் இரண்டொரு சீலைசெய்து, பீங்கானைச் சுற்றி மண்போட்டழுத்திக் குடுவை மறைய அரையடி கனத்திற்குச் சூழ எருவடுக்கித் தீயிடவும். புடம் ஆறினபின்னர் சர்வ ஜாக்கிரதையாகக் குடுவையை நீக்கிப் பார்க்கப் பீங்கானில் தைலம் நிரம்பி இருக்கும். இதனில் அரைக்காசெடை சருக்கரையில் விட்டு மத்தித்துத் தினம் இருவேளை அரை-கால் மண்டலங்கொள்ள மேகரணம், மேகத்தடிப்பு, மேகசொரி, புண்புரைகள் யாவும் குணமாகும்; எ-ம். (10)

## குழித்தைலக் கருவி




### சித்திர விளக்கம்

1. குடுவை
2. துவாரமிட்டிருப்பது
3. குழி தோண்டிப் பீங்கானை யிட்டது
4. குடுவை சூழ எருவடுக்கிப் புடமிட்டது

இத்தகைய செய்பாகங் கொண்டே ஆயுர்வேத நூல்களில் கூறப்பட்ட வித்து, வேர், பட்டை இன்னும் தைலப் பசையுள்ள ஒவ்வொன்றிலு மிருந்து தைல மிறக்கிக் கொள்ளலாம்.

### பாஷாண வண்டத்தைலம்

229. எண்ணெய்வேம் பெண்ணே யியம்ப ஒருபடியும்
நண்ணிலுப்பை புங்கம்நெய் நல்லரையே—கொண்டாறு
காதந்தோற் கானீக்கிக் காணவிட்டே பாண்டத்
தூகமுடன் நீயெரிக்க உன்.

230. உன்னச் சிவந்த வுறும்பதத்தே நீக்கியவை
துன்னுரசம் லிங்கமுடன் சொல்தாரம்—மன்னுவெள்ளை
யோடமினி நாற்பலத்தோ டோமங் கடுகுள்ளி
கூடப் பலமஞ்சே கூறு.

231. கூறேபாற் சாம்பிராணி கூட்டிப் பலமொன்று
நேரே யரைத்திதனை நேர்த்திபெறப்—பாரேநீ
எண்ணெய் சுடும்பதத்தே யேலவிட வைத்ததற்பின்
கண்ணுற விட்டிடவே காண்.

232\. காண வதனோடு கட்டிருபத் தைந்தண்டம்
பூணவரு தைலத்தைப் போட்டிணைத்து—நாணமறப்
பாய்ச்சப் பிடிப்போடு பாரிச வாதமிவை
ஓய்ச்ச லுறவோடு மோர்.

(க - து) நல்லெண்ணெய் படி 1, வேப்பெண்ணெய் படி 1, இலுப் பெண்ணெய் படி $\frac{1}{2}$, புங்கம் எண்ணெய் படி $\frac{1}{2}$ இவைகளை ஒரு பழகின மட்பாண்டத்தில் விட்டு அதனில் ஆறு காகத்தை தோல், குடல், கால் முத லியவைகளை நீக்கிப்போட்டு அடுப்பிலேற்றி எறித்துக் காகங் கருகி மிதக் குந் தருவாயில் நீக்கி அவ்வெண்ணெயில் சூதம், லிங்கம், தாளகம், வெள் ளைப் பாஷாணம், அபினி வகைக்குப் பலம் $\frac{1}{4}$, ஓமம், கடுகு, வெள்ளைப் பூண்டு வகைக்குப் பலம் 5, பால்சாம்பிராணி பலம் 1, முறையே ஒன்றன்பி னொன்றாகக் கல்வத்தி லிட்டரைத்துக் கலக்கி அடுப்பில் சிறிதுநேரம் காந்தா மல் எரித்து வடித்து 25 கோழிமுட்டையின் மஞ்சட் கருவினுடைய தைலத்தைக் கூட்டிக் கலக்கிச் சீசாவில் பத்திரப்படுத்துக. பாரிசவாதம், பிடிப்பு, குடைச்சல் முதலியவைகட்குத் தினம் இருவேளை தேய்க்க அதிக சீக்கிரத்தில் குணமாகும்; பாரிசவாதத்திற்கு இது இன்றியமையாத திவ் விய அவிழ்தமாகும்; எ - ம். (11)

## மாந்த எண்ணெய்

233\. சிற்று மணக்கின் சிறுமுத்து நெய்யோடு
பெற்றீயத் தண்டின் பிழிசாற்றைப்—பற்றிடவே
ஒன்றிரண் டாகபடி ஒக்கக் கலந்தெரித்து
நன்றி தருங்கொதியை நாடு.

234\. நாடி வருங்கொதியில் நாட்டுகருஞ் சீரகத்தைத்
தேடித் துகளாக்கிச் சேர்பலமாய்க்—கோடித்தே
சொல்லும் பதமெழுகில் சுத்த முடனிறுத்து
நல்லகோ ரோசனையை நத்து.

235\. நத்தி விராகனெடை நையப் பொடித்திட்டே
ஒத்த வுறவதனில் ஓர்கரண்டி—குத்திடவே
மாந்தங் கபசுரமும் மக்கட் பிணிபலவும்
சாந்தப் படுமென்றே சாற்று.

(க - து) சிற்றாமணக் கெண்ணெய் படி 1, ஈயத்தண்டின்சாறு படி 2 இவைகளை ஒரு பழகின மட்பாண்டத்தில் விட்டு அடுப்பேற்றிச்

சிறுக எரித்துக் கொதிக்கும் சமயம் ஒரு பலம் கருஞ்சீரகத்தைப் பொடி செய்து போட்டு வண்டல் மெழுகுபதம் வருந்தருவாயில் சுத்தமான சீலையில் வடித்து, அதனில் ஒரு விராகனெடை கோரோசனையை அரைத்துக் கலக்கிச் சீசாவிலிடவும். குழந்தைகட்குப் பருவத்திற் கேற்றபடி $\frac{1}{2}$ - 1 உச்சிக்கரண்டி வீதம் கொடுக்க மாந்தம், கபசுரம் முதலியவைகள் குணமாகும். இவ்வெண்ணெய் உட்கொண்ட குழந்தைக்கு 4 - 5 தடவை மலம்போதல் வேண்டும். அதிகமாயின் எண்ணெயைக் குறைத்தும், மலப்போக்குச் சரிவர இல்லையாயின் சிறிது எண்ணெயை அதிகப்படுத்தலும் கடமையாம். இதற்குப் பத்தியம் புளி தள்ளல் வேண்டும். பாலுண்ணும் குழந்தைகட்குக் கொடுக்கும்போது தாய் இப்பத்தியப்படி நடத்தல் கிரமம்; எ - ம். (12)

## பூவரசன்பட்டை யெண்ணெய்

236. கோவை யிலைச்சங்கன் குப்பியத்தி பூவரசன்
மேவு முயர்பட்டை மேன்மையுறப்—பூவையே
சாறுவகை காற்படியே சாரச்சிற் றாமணக்கின்
ஏறுநெய் யிரண்டுபடி எண்.

237. எண்ணவச் சாறுகளை எண்ணெயில் விட்டெரித்தே
நண்ணலவங் கப்பட்டை நன்மிளகு—உண்கடக
ரோகணி திப்பலியு மோர்வாய்வி ளங்கங்காற்
போகவரி சிப்பலமே போடு.

238. போடசு வக்கந்தி போற்றிரண்ட ரைப்பலமே
தேடபரங் கிச்சக்கை தேர்மூன்றே—நாடவிவை
சொல்லிய சாறென்றில் தோயவரைத் துக்கலக்கி
மெல்லெரித் தேவடிக்க வேண்டு.

239. வேண்டப் பலங்காலே வீறான பூரமரைத்
தாண்டளவி வேளைக் கரைபலமே—மாண்புபெற
உண்ணப் படைகுட்ட முட்சொறிகள் மேகரணம்
எண்ணவைந் தேநாளி லேது.

(க - து) கோவையிலைச்சாறு, மீச்சங்கன் இலைச்சாறு, அத்திப்பட்டைச்சாறு, பூவரசம்பட்டைச்சாறு வகைக்குப் படி $\frac{1}{4}$, சிற்றாமணக்கெண்ணெய் படி 2, இவைகளை ஒரு பழகின மட்பாண்டத்தில் சேர்த்து எரித்துக் கொதிக்குந் தருவாயில், லவங்கப்பட்டை, மிளகு, கடகரோகணி, திப்பிலி, வாய்விளங்கம், கார்போக அரிசி, வகைக்குப் பலம் 1,

அசுவகெந்தி பலம் - $2\frac{1}{2}$, பறங்கிச்சக்கை பலம் - 3, இவைகளை யெல்லாம் முற்கூறப்பட்ட எதேனுமொரு சாற்றினல் அரைத்துக் கலக்கி வண்டல் மெழுகுபதம் வருஞ்செவ்வியில் வடித்துக் கொள்க. பின்னர், கால்பலம் சுத்திசெய்த பூரத்தைக் கல்வத்திலிட்டு, முன்முடித்த எண்ணெயிற் சிறிது விட் டரைத்துப் பின்னர் மொத்த எண்ணெயுடன் கூட்டிக் கலக்கி உபயோகப் படுத்தவும்.

தினம் காலை நேரத்தில் அரைப்பலம் வீதம் ஐந்துநாள் கொள்ள 4, 5 - தடவை விரேசனமாகும். இதனல் மேகப்படை, சொரிசிரங்கு, குட்டம், மேகரணம் நிவர்த்தியாகும் புளி தள்ளி இச்சாபத்தியமாக இருத்தல் ஆவசியகம். இப்படியே மறுபத்தியமு மிருந்து முக்கூட் டெண்ணெய் தேய்த்து ஸ்நானம் செய்து எல்லாம் சேர்த்துக்கொள்க. ஸ்திரீ சங்கல்ப மாத்திரம் 3 - மாதம் வரையில் கூடாது ; எ - ம். (13)

### பூவரசங்காய் எண்ணெய்

240. பூவரச னீர்படியும் புங்கன் விழுதியிலை
ஆவலுறச் சங்கனுஞ ஆர்வில்வம்—மேவிடவே
வெங்காயம் நம்பிரமி வேம்புமணித் தக்காளி
சிங்காப் பொடுதலையுந் தேடு.

241. தேடவுடன் வல்லாரைச் சேருழ லாற்றியுடன்
நாடவிவை சாறு நவில்காலே—கூடிடநீ
முத்துவிதை தன்தைலம் மூன்றுபடி தான்பெய்து
நத்திடவே பின்சரக்கு நாடு.

242. நாடுமஞ் சள்கோஷ்டம் நன்மதுரஞ் சாதிக்காய்
கூடுபத்ரி தான்றிக்காய் கூறேலம்—நாடுகிராம்
போடு சிறுநாகப் பூகசக சாதன்னே
டுடலறத் திப்பலியு முன்.

243. உன்னச் செருப்படை யோர்சிலந்தி நாயகம்
துன்னும் புளியாரை சொல்கையாந்—துன்கருஞ்
சீரகம றைத்தொடியே செப்பியவோர் சாற்றிலரைத்
தேருறவே எண்ணெய்க் கிடு

244. உட்டெரித் தேயிறக்கி ஏற்றபூ ரங்கெந்தி
மட்டரைப்ப லந்துளாய் வன்மையுற—விட்டுமே
உட்கொள்ள மேகரணம் ஓங்குசொறி புற்றிவைகள்
விட்டொழியு மென்றே விளம்பு.

(க - து) பூவரசங்காய் சாறு படி - 2, முற்றின புங்கன்வேர், விழுதி யிலை, சங்கன்குப்பியிலை, நுணாவிலை, வில்வம், வெங்காயம், பிரமியிலை, வேப்பம்பட்டை, மணித்தக்காளி, பொடுதலை, வல்லாரை, ஊழலாற்றிப் பட்டை இவைகளின் சாறு வகைக்குக் கால்படி ஆக மூன்றுபடி சிற்றாமணக் கெண்ணெயில் கூட்டி; அதனில் மஞ்சள், கோஷ்டம், அதிமதுரம், சாதிக் காய், பத்திரி, தான்றிக்காய், ஏலம், கிராம்பு, சிறுநாகப்பூ, கசகசா, திப்பிலி, செருப்படை, சிலந்தி நாயகம், புளியாரை, கரிசாலை, கருஞ்சீரகம் வகைக் குப் பலம் அரையாக முற்கூறப்பட்டுள்ள ஏதேனுமொரு சாற்றா லரைத்துக் கலக்கிப் பதமுறக் காய்ச்சி வடித்து, மீண்டு மதனில் அரைப்பலம் கெந்தகம், அரைப்பலம் பூரம் இவை யிரண்டையும் நன்றாய் அரைத்துக் கலக்கிச் சீசாவிலிடவும். தினம் ஒருவேளை காலை நேரத்தில் அரைப்பலம் உட்கொள்ள 2, 3 - தடவை விரேசனமாகும். இப்படி 3 - அல்லது 5 - நாள் உட்கொள்ள முன் முறையில் கூறப்பட்டுள்ள ரோகங்கள் எல்லாம் தீரும்; எ - டி. (14)

### கழற்சிக்காய் எண்ணெய்

245. பூவரசன் பட்டை புகல்கழற்சி வெங்காயம்
ஆவலுட னேசாற ரைப்படியே—மேவியிட
சித்தா மணக்கெண்ணெய் சேர்படியொன் றிற்பெய்தே
புத்தான காயமிந்துப் பு.

246. புகலும் கழற்சிவேர் பூண்டுடன் சொல்ல
மிருங்கடுக ரோகணியும் மேலா—யுகப்புறுத்தும்
பிஞ்சிக் கடுக்காயும் பேசசுத்தி சேர்வாளம்
எஞ்சவகை காற்பலமே எண்.

247. எண்ண விவைதம்மை ஏற்கவோர் சாற்றிலரைத்
தெண்ணெய் தனிற்பெய் தெரித்தெடுத்தே—உண்ண
அரைப்பலமே பீஜத் தடுவாத நீக்கி
விரைவில் சுகமளிக்கு மே.

(க - து) பூவரசன் பட்டை, கழற்சியிலை, வெங்காயம் இவை களின் சாறு வகைக்குப்படி அரை, சிற்றாமணக்கு எண்ணெய் படி - 1, இவைகளை ஒருமிக்கக் கலந்து ஒரு பழகின மட்பாண்டத்திலிட்டு பெருங்காயம், இந்துப்பு, கழற்சிவேர், பூண்டு, கடுகரோகணி, பிஞ்சிக் கடுக்காய், சுத்திசெய்த நேர்வாளம் வகைக்குப் பலம் கால் ஆக முற் கூறப்பட்ட ஏதேனும் ஒரு சாற்றினு லரைத்துக் கலக்கிப் பதமுற

எரித்து வடித்துச் சீசாவி லிடவும். வேளைக்கு அரைப்பலம் வீதம் காலை நேரத்தில் 3 - நாள் உட்கொள்ள 5, 6 - முறை விரேசனமாகும். அண்டவாதம், மேகவாயு சம்பந்தத்தினு லுண்டான பல ரோகங்களும் தீரும். பத்தியம்: புளி தள்ளி இச்சாபத்தியமாக இருப்பது ஆவசியகம்; எ - ம். (15)

---



## பற்ப வகை

### படிகாரப் பற்பம்

248. சொல்லுபடி காரமுடன் ரேகையே கல்மதமும்
புல்லுகும ரிச்சாறு போட்டரைத்து—நல்லபுட
மிட்டுளபற் பத்தால் இழிநீர்ச் சுருக்கெரிச்சல்
கட்டுவகை பேதியிலை காண்.

(க - து) படிகாரம், கல்மதம் வகைக்குப் பலம் ஐந்தாகக் கல்வத்தி விட்டுக் குமரிச்சாற்ருல் நான்கு சாமம் அரைத்து வில்லைசெய்து, காய்ந்த பின் அகலில் வைத்து, மேல் அகல்மூடிச் சீலைசெய்து இரவியிலுலர்த்தி, 35 - வறட்டியில் புடமிட நல்ல பற்பமாகும். இதனை நெய், வெண்ணெய் முதலிய அனுபானங்களில் தினம் இருபொழுது உண்ண நீர்ச்சுருக்கு, எரிச்சல், சீதபேதி, இரத்தபேதி முதலியவைகள் குணமாகும். பத்தியம்: காரமில்லாமல் இச்சாபத்தியமாக ஆகாரம் உட்கொள்ளல் சாலவும் நலம் பயக்கும்; எ - ம். (1)

### வங்கரச பற்பம்

249. சூதம் வெண்காரிச் சுணங்கா தரைப்பலமே
ஓத உருக்கி யுறவாக்கிக்—காதலித்தே
மால்தாங்கிக் கல்லும் மறுவப் பலமிட்டுச்
சேல்கண்ணுய் ஆட்டிடவே செப்பு.

250. செப்பத் தருஞ்சுன்னஞ் சேர்சலமே விட்டுறவி
லொப்ப வரைத்தே ஒருவில்லை—அப்பியகல்
ஐயாறு நல்லெருவி லாகப் புடமிடவே
பைய வதுநீரும் பார்.

251. பாரதனில் குன்றியெடை பற்றிவெண் ணெய்யதனில்
சேரக் குழைத்துண்ணச் சேதிகேள்—நீரதனில்
காட்டுஞ் சுறுக்குக் கடுத்துவரும் வெள்ளை
ஓட்ட மிதைக்கண்டா லொப்பு.

252. ஒப்பச் சயரோகம் ஓத வதனழலை
வெப்புநீர் தன்சுரப்பு விட்டகலும்—செப்பிடவே
அற்பமென் றெண்ணாதே ஆர்கலிசூ ழம்புவியிற்
கற்ப மிதற்கிணையோ காண்.

(க - து) வெள்வங்கம் பலம் - $\frac{1}{4}$, சூதம் பலம் - $\frac{1}{2}$, இவைகளை முறைப்படி உருக்கித் தொந்தித்துக் கல்வத்திலிட்டு, அதனுடன் ஒரு பலம் பால் கருடக்கல் சேர்த்துச் சுன்னநீர் விட்டு 8 - சாமத்திற்குக் குறையாமல் நன்றாய் அரைத்து வில்லை தட்டி ரவியில் உலர்த்தி அகலில் இட்டுச் சீலை செய்து காய்ந்தபின் 25, 30 - வறட்டியில் புடமிடப் பற்பமாகும். இதனில் குன்றியெடை நெய், வெண்ணெய் முதலியவைகளில் தினம் இருவேளை உண்ண வெள்ளை, நீர்ச்சுருக்கு, மேக அழலை வயிற்றிலிருந்து மேல் நோக்கும் வெப்புநீர் முதலிய ரோகங்கள் நிவர்த்தியாகும்; எ - ம். (2)

### கருவங்கச் சுண்ணம்

253. கருவங்கங் கொண்டுருக்கிக் காளுடு திண்ணு
வொருபாளை தன்னு லொடுங்க—வறுத்தே
யதனளவு நல்மிளகை யாசரித்திட் டாட்டிப்
பதமாய்ப் புடமிட்டுப் பார்.

254. பார்க்குங் கருவங்கம் பற்றுங் குணம்பகரில்
ஏற்கும் பிரமேகம் என்னுகும்—பாரதனில்
ஏழ்கடலுக் கப்புறமே ஏக்கமுறச் சென்றங்கே
தாழ்மை பெறவழியுந் தான்.

(க - து) இலுப்பை நெய்யில் 7 - முறை சுத்திசெய்த 2 - பலம் கருவங்கத்தை ஒரு இரும்பு பாணுவில் போட்டு உருக்கி ஆடு தின்னுப் பாளையைச் சிறிது சிறிதாகப் போட்டு இரும்பு கரண்டியால் லோகசத்தில்லாயல் 12 - சாமம் வறுத்து அதனுடன் சமஅளவு கெட்டி மிளகைக் கூட்டி ஷை மூலிகைச் சாறுவிட்டு அரைத்து வில்லை செய்து நன்றாய்க் காய்ந்தபின் அகலில் அடக்கிச் சீலைசெய்து உலர வைத்து 50 - எருவில் புடமிடச் சுண்ணமாகும். இதனில் வேளைக்கு அரைக்

குன்றிப் பிரமாணம் அந்திசந்தி ஒருமுறை 7 - நாள் நெய், தேன் முதலிய அனுபானங்களில் கொடுத்துவர மேகவாயு, பிரமேகம், நீரடைப்பு முதலிய வைகள் நிவர்த்தியாகும். தவிர மேகக்கட்டி மேகரணங்கள் ஆறும். பத்தியம்: புளி, மிளகாய், புகையிலை முதலியவைகளை நீக்கவும்; எ - ம். (3)

கருவங்க பற்பம்

255. காரிபல மொன்று கடல்நுரை யரையாய்த்
தாரிக் கலுவத்தே தந்தாட்டி—நேரியசீர்
மாந்தர் சிறுநீரால் மட்டுரு தாட்டிவில்லை
காந்தி ரவிமுகத்திற் காட்டு.

256. காட்டு மருந்தைக் கருதி மறைத்தெருவு
பூட்டிப் புடமிட்டுப் பொன்றுது—நாட்டி
மறுத்திவ் வகைபுடமே மாண்புடனே யேழு
திறத்தி விடப்பற்பந் தேர்.

257. தேரும் மருந்தைத் தினந்தோறுங் குன்றிநிறை
வீறும் பசுநெய்யில் விட்டுண்ணச்—சாருங்
கருமேகம் தித்திப்புக் காண்மேகம் வெட்டை
தருமேக ரோகமில்லை தான்.

258. தானும் படைரணமும் தங்குஞ் சலபவுத்ர
மூனும் பலமேக மோடுமே—கோனுகும்
பத்தியமொன் றில்லை பகரும் புளிதள்ளி
நித்தியத்தை நெஞ்சே நினை.

(க - து) ஒரு பலம் சுத்திசெய்த கருவங்கத்தை ஈசல் இறகு போல் தகடு அடித்து, சிறு துண்டுகளாக நறுக்கிக் கல்வத்திலிட்டு, அதனுடன் அரைப்பலம் கடல் நுரையைச் சேர்த்துக் குழந்தைகளின் சிறுநீரால் எழுநாள் அரைத்து வில்லைசெய்து இரவியில் உலர்த்தி அகலில் வைத்து மேல் அகல் மூடிச் சீலைசெய்து காயவைத்து, 30 - எருவில் புடமிடவும் புடமானது சாங்க சீதளமானபின் மீண்டும் வில்லையை முன்போல் சிறுநீரால் அரைத்து எழு புடமிட மேகவர்ணத்தை யொத்த பற்பமாகும். இதுவே கையாடுவதற் குரித்தானது. இதனில் தினம் இருவேளை குன்றியளவு 7 - நாள் சாப்பிடவும். தேவையாயின் 15 - நாள் மருந்தில்லாமல் விட்டு மீண்டும் ஒருமுறை 7 - நாள் சாப்பிடவும். இதனால் கருமேகம், மதுமேகம், வெள்ளை, படையிரணம்,

சலபவுத்திரம் முதலியவை குணமாகும். இச்சாபத்திய விதியை அனு சரித்துப் புளியை நீக்கிச் சாப்பிடுதல் வேண்டும்; எ - ம். (4)

### வீரரசப் பதங்கம்

259. துள்ளு ரசமும் துணைவீர மோரெடையாய்த்
தள்ளிக் கலுவத்தே தானட்டி—விள்ளக்கேள்!
மட்கலத்தி லிட்டே மடக்கொன்றுன் மேல்மூடி
வட்டமாய்ச் சீலே வரி.

260. வரிந்த குடுவையில் வாய்க்கப் பதங்கம்
எரித்தலா மேரண்ட வெண்ணெய்த்—திரியினல்
சாமத்திற் கொன்ருகச் சாருந்தீ நாலாக
நேமத் திருப்பதுவே நேர்.

261. நேராய்ச் சிறுமுத்து நெய்யாம் பலமொன்றில்
சீராப் பதங்கஞ் சிறுகுன்றி—சாரத்தான்
மூன்றுநா ளுண்ண முதிர்மேகம் வாதநோய்
தோன்றி லொழிந்தோடுஞ் சொல்.

(க - து) ஒரு பலம் சூதம்; ஒரு பலம் வீரம் இவ்விரண்டையும் கல்வத்தில் போட்டு நன்ருய் அரைத்து ஒரு சிறு குடுவையில் போட்டு, வாய்க்கு ஓடு மூடிச் சீலேசெய்து காய்ந்தபின் மூன்று செங்கல்களே அடுப்புப்போ லமைத்து அதன்பேரில் குடுவையை வைத்து அடியில் ஒரு அகன்ற அகலில் நிறைய விளக்கெண்ணெய் விட்டு அதில் 25 - இழையுள்ள பருத்திநூல் திரியிட்டு ஒரு சாமம் எரிக்கவும். பின்னர், இரண்டாவது சாமத்தில் அதைப்போன்ற மற்ருெரு திரியையிட்டு எரிக்கவும். இங்ஙனம் சாமத்திற்கு ஒரு திரியாக நான்கு சாமத்திற்கும் நான்கு திரியாகச் சேர்த்து எரித்து ஆறவிட்டு எடுக்கப் பதங்கமாக விருக்கும்.

இதனைக் கல்வத்திலிட்டு நன்கு அரைத்து, சீசாவில் பத்திரப் படுத்துக. தேக வன்மை மென்மைக் கேற்றவாறு ஒரு பலம் சிற்ருமணக்கு எண்ணெயில் குன்றியளவு பதங்கத்தை நன்ருய் உறவாகும்படி கலக்கி, காலேயில் சாப்பிட 4, 5 - தடவை பேதியாகும். இப்படி மூன்று நாள் அடுத்துக் காலேநோத்தில் சாப்பிட்டுவர கிரந்தி, கொறுக்கு, மேகவாயு, பிடிப்பு, மேகவிரணம் முதலியவைகள் குணமாகும். பத்தியம்: புளி நீக்கி இச்சாபத்தியமாக இருக்கவேண்டும். இம்மருந்தின் வீறு ஒரு மாதம் வரையில் இருக்கும் ஆதலான், பசி தீபனம் அதிகப்படும்.

ஸ்ரீராம ... வாசக சாலை.

ஆகவே நல்ல ஆகாரங்களை உட்கொள்ளல் வேண்டும். அவசரநிமித்தம் வேறு அவிழ்தங்களையும் கொள்ளக்கூடாது. மீண்டும் இம் மருந்தைக் கொள்ளவேண்டுமாயின் ஒரு மாதங் கழிந்த பின்னரே கொள்ளல்வேண்டும்; எ - ம். (5)

குறிப்பு:—முற் கூறப்பட்ட பதங்கம் வராகனெடை - 4, வரகரிசி மாவு பலம் - $\frac{1}{2}$, பனைவெல்லம் பலம் - $\frac{1}{2}$, இவைகளை அரைத்து மெழுகாகச் செய்து மிளகு பிரமாணம் வாழைப்பழத்தில் வைத்துத் தினம் இருவேளை 3, 5 - நாள் கொடுக்க, புண் கிரந்தி, அரையாப்பு, தொடைவாழை முதலியவைகள் குணமாகும். இப்பிரயோகத்தில் வாய் நீரூறல் உண்டாகு மாதலால், கவனித்து மருந்தை உடனே நிறுத்தல் வேண்டும்.

## இலவண பற்பம்

262. போனகவுப் பொன்றைப் புகலத் தசபலமே
ஆனதும் மட்டிச்சா ருவலித்து—மானகலு
வத்திட் டரைத்துச்செய் வாய்நீ பலவில்லை
பொத்திட் டகலில் புரி.

263. புரிய வறட்டியது பூட்டியிரு பத்தா
யெரியப் புடமிட் டெடுத்துப்—பிரியப்
பலியாட்டிப் போடுபுடம் பாரேழிற் பற்பம்
கடிநோ யிலைகாணுங் கால்.

264. காலந் தனைக்கண்டு காட்ட மருந்தாகும்
ஞாலத் துறுநோய்க்கே நன்கியச்—சால
மலச்சிக்கல் நீர்க்கோவை மாதருது கட்டித்
தலங்குத்தல் வாய்வறுமே தான்.

(க - து) தீட்சை செய்த பத்துப் பலம் கறியுப்பைக் கல்வத்தில் போட்டு, தோல் விதை முதலியவற்றை நீக்கிப் பிழிந்த தும்மட்டிக்காய்ச் சாறு விட்டு மூன்று நாள் அரைத்து வில்லை செய்து நன்ருய்க் காய்ந்தபின், அகலில் வைத்து மேல் அகல்மூடிச் சீலைசெய்து உலர்ந்தபின் 20 - வறட்டியில் புடமிடவும். இங்ஙனம் ஒவ்வொரு முறையும் தும்மட்டிக்காய்ச் சாறு விட்டு மூன்று நாள் அரைத்து வில்லை செய்து முன்போல் அகலில் அடக்கஞ் செய்து சீலைசெய்து ஏழு புடமிட இலவண பற்பமாகும். இதனைக் குன்றி யளவு ரோகத்திற்குத் தக்க அனுபானங்களில் கொடுக்க மலச்சிக்கல், நீர்க் கோவை, சூதகக்கட்டி, சூதகவாயு முதலியவைகள் குணப்படும். கறியுப்

பைத் தீட்சை செய்யும் விதி :—ஒரு படி கறியுப்பை இரண்டு பங்காக்கி ஒரு பங்கைச் சுத்த ஜலம் விட்டுக் கரைத்து வடிகட்டி மறுபங்கை ஒரு இரும்புச் சட்டியில் போட்டுச் சிறிது சிறிதாகச் சுருக்குக் கொடுத்து முடிவில் வறுத்து எடுத்துக்கொள்க. மீண்டும் அந்த உப்பை இரண்டு பங்காக்கி ஒரு பங்கைச் சுத்த ஜலத்தில் கரைத்து மறுபங்கிற்குச் சுறுக்கிடவும். இவ்வண்ணம் எழு தீட்சைசெய்து கொள்ளல் வேண்டும்; இத்தகைய உப்பே நற்பயனைத் தரத்தக்க அவிழ்தமாக முடியும்.

முற் கூறப்பட்ட இலவண பற்பத்தைச் சுரக்கட்டி சூதகக்கட்டி முதலியவற்றிற்குக் கொடுப்பதற்கு அனுபானம்.

முதல் எழு நாள் குன்றியளவு தேனிலும், இரண்டாவது எழு நாள் தேன், இஞ்சிரசம் இவ்விரண்டும் கலந்ததிலும், மூன்றாவது எழு நாள் தேன், இஞ்சிரசம், பப்ளிக்காய் ரசம் முதலியவை கலந்ததிலும், நான்காவது எழு நாள் தேன், இஞ்சிரசம், பப்ளிக்காய் ரசம், தாழைவிழுது ரசம் கலந்ததிலும் சாப்பிடவேண்டும். ஒவ்வொரு முறையும் எழு நாளாகக்கொண்டு அத்தனை நாள் மருந்தில்லாமல் இடைவிட்டு மீண்டும் ஆரம்பிக்க வேண்டும்; எ-ம். (6)

## வெள்ளி பற்பம்

265. வெய்யகூ தஞ்சாரம் வெள்ளைக் கழஞ்சோடு
துய்யனேழ் கொள்கழஞ்சி சொன்னன்கைப்—பெய்திங்கே
நாகமல்லிச் சாற்றாலே நன்று யரைப்பாட்டி
வேக புடமே விரும்பு

266. விரும்பத் தரும்பற்பம் வேதனைக ளூற்றே
வரும்வெள்ளைத் தந்தியுடன் வாதாய்ச்—சிறுநீரில்
காட்டுஞ் சுறுக்கும் களிக்கக் குணமாகும்
நீட்டக்கால் குன்றி நிறுத்து.

(க - து) இரசம், சாரம், வெள்ளைப் பாஷாணம் வகைக்கு கழஞ்சு ஒன்றாகவும், வெள்ளி அரப்பொடி கழஞ்சு எழாகவும் கல்வத்திலிட்டு நாக மல்லி யிலைச்சாற்றால் நான்கு சாமம் இடையறாது நன்றாய் அரைத்துப் பில்லைசெய்து இரவி முகத்தில் காயவைத்து, பின்னர் அகலில் வைத்து மேல் அகல் மூடிச் சீலைசெய்து 30 - எருவில் புடமிடப் பற்பமாகும். ஒருகால் வெள்ளியின் சத்து இருப்பதாகத் தெரியினும் நிறம் கறுத் திருப்பினும் முன் அரைத்த மூலிச்சாற்றால் மீண்டும் நாலு சாமம்

அரைத்து வில்லைசெய்து முன்போல் புடமிட நல்ல பற்பமாகும். இதனில், கால் குன்றிப் பிரமாணம் தினம் இருவேளை தேக வன்மை மென்மைக் கேற்றவாறு 5 - முதல் 7 - நாள் நெய், வெண்ணெய் முதலியவைகளில் கொடுக்க வெள்ளை, தந்திமேகம், நீரடைப்பு முதலியன குணமாகும்; வாத சம்பந்தமான ரோகங்களும் ஒழியும்; எ - ம். (7)

காசகுடோரி பற்பம்

267. காயுருவிச் சருகருந்தும் பெரியார் மாட்டுக்
காற்பிடித்துப் பணிபுரிந்து கண்டபாகம்
நாயுருவிச் சாம்பல்படி யொன்று னங்காய்
நந்துமே விலைச்சாம்பற் படியொன்றுகும்
சேயுருவி பொழிசலமே படியா மைந்திற்
சேர்த்தொருநாட் கலக்கினபின் தெளிவைக் கொண்ட
தாயுருவ விருபாதி யாப்பங் கிட்டுத்
தனவிற்பாண் டம்பெய்து சாற்றப் பாரே.

268. பாரேதா னொருபாதி நீரை யெல்லாம்
பதமோடு சிறுகரண்டி யான்முகந்து
வாரேதா னுப்பிட்டுப் பூக்குந் தன்னை
வழித்தொருமண் ணகலிட்டுத் தணலில்வைத்துச்
சீரேதான் முற்பாதி சலத்தை மேலே
சிறிதளவிற் சுறுக்கிடவே பற்பமாகும்
நீரேதான் அரைத்திட்டுக் குன்றி யாக
நெடியதேன் றனிலூட்டக் காசம் போமே.

(க - து) நாயுருவி சமூலச் சாம்பல் படி ஒன்று, * ஆனங்காய் மேவிலைச் சாம்பல் படியொன்று இவ்விரண்டையும் 5 - படி ஜலம் விட்டுக் கரைத்து மறுநாள் தெளிந்துள்ள நீரைக் கலங்காமல் வடித்து அதனை இரண்டு பாகமாகப் பங்கிட்டு, ஒரு பாகத்தை அடுப்பின்மீது ஒரு புது மண்ணோட்டை வைத்துச் சிறிது சிறிதாகக் கரண்டியால் முகந்து விட்டுக் கொண்டு வரவேண்டும். ஒருமுறை விட்ட ஜலம் உறைந்த பின்னரே மறுமுறை விடுதல் வேண்டும். இங்ஙனம் எல்லா நீரும் சுண்டினபின்

* ஆனங்காய் என்பது ஆண் பனைமரத்தில் விடும் புஷ்பம். இதிலிருந்து காயுண்டாகாது. இதுவே முற்றிக் காயைப்போலாகும். இது விடுவதற்கு முன் இரண்டு சிறு இலைகளுண்டாகும். அவ்விலைச் சாம்பலையே இங்குக் கூறியது.

அவ்வோட்டில் பூத்திருக்கும் உப்பை யெல்லாம் சேதப்படாமல் சுரண்டி யெடுத்து மற்றோர் ஓட்டில் போட்டு முன் நிறுத்தி வைத்திருந்த மிகுதி ஜலத்தைக் கொஞ்சங் கொஞ்சமாகச் சுறுக்குக் கொடுக்கவும்; இப்படி எல்லா ஜலமும் சுண்டினபின் உப்பை வறுத்துக் கல்வத்திலிட்டு அரைத்து, கல் கார்க்குச் சீசாவில் பத்திரப்படுத்தவும். இரண்டு அரிசிப் பிரமாணம் நெய், தேன் முதலிய அனுபானங்களில் தினம் இருவேளை கொடுத்துக் கொண்டு வரச் சுவாசகாசம், குன்மம் முதலிய ரோகங்கள் குணப்படும். இச்சா பத்தியம்; எ-ம். (8)

விஷபேதி சஞ்சீவி

269. வீசைபுளி யம்பட்டை வெட்டிக் குவித்திடையே
ஆசையுடன் கற்பூர மாகபலம்—காசையறும்
வீரங்காற் றூவியபின் வேகத்தீ மூட்டிவிடின்
கோரநீ ராகுமெனக் கொள்.

270. கொள்ளமருந் திற்குன்றி கோதில்லா நற்றேனில்
விள்ளவிஷப் பேதி விரைந்தோடும்—உள்ள
விதன்சீதம் பொல்லா இழுப்புவலி சோகம்
அதமாகு மென்று றறி.

(க-து) ஒரு வீசை புளியம்பட்டையைப் புறணி நீக்கிச் சிறு துண்டுகளாக நறுக்கி ஓரிடத்தில் குவித்து, இடையில் ஒரு பலம் கற்பூரத்தையும், கால் பலம் வீரத்தையும் நன்றாய்ப் பொடித்துத் தூவித் தீமூட்டி விடின் எல்லாம் வெந்து நீறாகும். இதனைக் கல்வத்திலிட்டு நன்றாய் அரைத்து, சீசாவில் பத்திரப்படுத்துக. வாந்திபேதி கண்டவர்களுக்கு ஒன்று அல்லது இரண்டு குன்றிப் பிரமாணம் சந்தர்ப்பத்திற்கு ஏற்றவாறு தேனில் மத்தித்துக் கொடுக்கவும். ஒருகால் வாந்தியாய்விடின் மீண்டும் முன்போல் கொடுக்கவும். இப்படி நீரிறங்கும் வரையில் 2, 3-மணி நேரத்திற்கோர் முறையாகக் கொடுக்க நோய் குணமாவதோடு அவ்வியாதிக்குச் சுபாவமாக உள்ள அதிசீதளம், வலியிழுப்பு, நீர்க்கட்டு, ஆயாசம், வாந்தி, பேதி யாவும் திருவருளால் குணமாகும் என்பது எக்காலத்தும் உண்மை; எ-ம். (9)

நாக பற்பம்

271. விள்ளுநாகந் தன்னை வேண்டி நிலப்பாய்ச்சில்
உள்ளிட் டுலையிலே யூதிடவே—நள்ள

உருகியதன் மேலா முறுமா சொழிந்து
வருங்கட் டெனவேநீ வாங்கு.

272. வாங்குநா கக்கட்டை வன்னிதனி லேயுருக்கித்
தாங்குங்கீழ்க் காய்நெல்லி தன்மூலி—பாங்குடனே
போட்டு வறுத்திடவே பூத்துச் சொரியுமதை
நீட்ட வரைக்குன்றி நேர்.

273. நேரே யிருவேளை நேயமுற வெண்ணெயினிற்
கூரே யரைபட்சம் கொண்டிடவே—பாரேநீ
வெள்ளை யுடன்மூலம் மேகப் புரைபுண்கள்
சள்ளை யிலையென்றே சாற்று.

(க - து) சிறுகண் நாகத்தை முறைப்படி சுத்திசெய்து வில்லையாக வார்த்து அதன்பேரில் நிலப்பாய்ச்சி (நிலத்துத்தி) யைச் சமூலம் அரைத்துச் சுமார் சிறு தேங்காய்ப் பிரமாணம் கவசம் செய்து ஒட்டி விட்டு, உலையில் வைத்து ஊதவும். மூலிகை கருகக்கருகப் புரட்டிக் கொடுத்துக்கொண்டு முற்றிலும் ஈரம் வறண்டபின் நாகம் உருகிவிடும். அப்போது அங்குள்ள மூலிகைச் சாம்பலை யெல்லாம் ஒரு புறமாக ஒதுக்கி நாகத்தை மாத்திரம் ஆறவிட்டு வில்லையாக எடுத்து ஒரு அயச்சட்டியி லிட்டு மீண்டுங் கன்னுலையில் வைத்து உருக்கி, கீழ்க்காய்நெல்லி சமூலத்தைத் துண்டுகளாக நறுக்கிக் கொஞ்சங் கொஞ்சமாகப் போட்டு வறுத்து, பின்னர் அயச்சட்டிப் பழுக்க ஊதப் பூத்துத் தாவள்ளியமான பற்பமாகும். இதனில் நாகசத்து இல்லாமல் வஸ்திரத்தால் அரித்து வைத்துக்கொண்டு வேளைக்கு அரைகுன்றிப் பிரமாணம் தினம் இருவேளை 7 - நாள் வெண்ணெயில் கொள்ள வெள்ளை, இரத்தமூலம், மேகாணம், புண் புரை, பவுத்திரம் முதலிய ரோகங்கள் நிவர்த்தியாவதுடன் தாது விருத்தியும் உண்டாகும்; எ - ம். (10)

## கல்நார் பற்பம்

274. சுண்ணங் கரைத்திட்டுச் சொன்னுட்டுக் கல்நாரை
நண்ண விருமூன்று நாளுற—வெண்ணி
யெடுத்துமேற் சுண்ண மியல்பிரமி சேர்த்துக்
கொடுத்தங் கிடப்புடமாங் கூறு.

275. கூறுங்கல் நாரை குறைகூரு வெற்றிலையின்
தேறுங்காய்ச் சாறூட்டிச் சேர்த்தரைத்து—வீறின்

தொடங்கிவிலே தானுலரச் சுட்டகலி விட்டுப்
புடமூன் றிடவே புகல்.

276. புகலுமிதிற் குன்றி புசிக்க விருவேளை
அகலுநீர் வெப்பு மடங்கா—திகலு
மதிகாங்கை தேகத் தடருநரம் பீனம்
குதித்தோடு மென்றேநீ கூறு.

(க - து) ஐந்து பலம் நாட்டுக் கல்நாரை, கல்விலாவது கரைத்த சுண்ணும்பில் ஆறுநாள் ஊறப்போட்டு எடுத்து அதற்குச் சுண்ணும்பும், பிரமியிலையும் சமனெடையாக அரைத்துக் கனமாகக் கவசம் செய்து உலர்த்திப் பின்னர் மண்சீலை செய்து 100 - எருவில் புடமிடவும்; மீண்டும் உள்ளிட்ட கல்நாரை எடுத்துக் கல்வத்திலிட்டு வெற்றிலைக்காய்ச் சாறுவிட்டு நன்ருய் அரைத்து வில்லைசெய்து அகலிலிட்டு உலர்த்தி மேல் அகல் மூடிச் சீலைசெய்து 25 - எருவில் புடமிடவும். இப்படி 3 - புடமிட நல்ல பற்பமாகும். வேளைக்குக் குன்றிப் பிரமாணம் நெய், வெண்ணெய் முதலிய அனுபானங்களில் தினம் இருவேளை கொள்ளின் நீர்எரிச்சல், மேககாங்கை, நரம்பு பலவீனம் முதலிய ரோகங்கள் நிவர்த்தியாகும்; தேகத்தில் விந்தூறும். மாதர்கட்குச் சிறப்பவயங்கள் இறுகி நாம்புக்கூடுகள் பெரிதும் வலுப்படும்; எ - ம். (11)

வெள்ளி பற்பம்

கலி விருத்தம்

277. ஒக்க தாளக மோதுஞ் செருப்படை
புக்க சாற்றினல் போத வரைத்துநீ
தக்க மாத்திரை தாவுறச் செய்துமே
விக்க வெள்ளியை வெட்டைய தாக்குவாய்.

278. வெட்டை யுடன்சமம் வேண்டிப் பவளமே
கொட்டிமுன் சாற்றினுற் கூறுநாற் சாமமே
தட்டிமுப் பானெரு தாக்க முப்புடம்
மட்டில் பற்பமா மாநிலந் தன்னிலே.

279. தன்னிற் குன்றிநேர் சாரிரு வேளையும்
மன்னி யுணசயம் மாறுங் காசமும்
முன்னு துன்பங்கண் முற்று மொழிந்திடும்
பன்னு ரவியின்முன் பனிய தாகவே.

(க - து) ஒரு பலம் சுத்தி செய்த தாளகத்தைக் கல்வத்திலிட்டு செருப்படைச் சாறு விட்டு நான்கு ஜாமம் அரைத்து மாத்திரைகளாகச் செய்து நிழலில் உலர்த்திப் பொடித்து, ஒரு பலம் சொக்க வெள்ளியை, பெரிய மூசையிலிட்டு உருக்கி, கண்விட் டாடும்போது கொஞ்சங் கொஞ்சமாகக் கிராசமிட வெள்ளி வெட்டையாகும். இதனுடன் சமனெடை சுத்திசெய்த பவளத்தைச் சேர்த்து, செருப்படைச் சாறுவிட்டு, நான்கு ஜாமம் அரைத்து வில்லை செய்து, காயவைத்து அகலிலடக்கிச் சீலைசெய்து காய்ந்தபின் 30 - வறட்டியில் புடமிடவும் இவ்வண்ணம் மூன்று முறை அரைத்து அரைத்து வில்லைசெய்து, அகலிலிட்டுப் புடமிடப் பற்பமாகும். இதனில் கால் குன்றிப் பிரமாணம் தினம் இருவேளை நெய், தேன் முதலிய அனுபானங்களில் கொடுத்துவர க்ஷயம், இரத்த காசம், இருதயம், நுரையீரல் முதலியவைகளின் பலஹீனம் யாவும் குணமாகும். பத்தியம்: ரோகத்தின் வன்மை மென்மைக் கேற்றவாறு ஆகாரங்களைக் கொடுத்து வருக ; எ - ம். (12)

குறிப்பு:—இம் முறையில் கூறப்பட்டவண்ணம் வெள்ளியை நீக்கி அதற்குப் பதிலாக வெள்வங்கத்தை யுருக்கி முன்போல் தாளகத்தைக் கிராசம் கொடுத்துப் பின்னர்ப் பவளம் சேர்த்து அரைத்துப் புடம் போடுதலு முண்டு. இதுவும் கபரோகங்களை நிவர்த்தி செய்வதில் சிரேஷ்டமானதென்று அனுபவத்திலும் தெரிந் தெடுக்கப்பட்டது.

## பவள பற்பம்

280. உருக்குத் தாளக மோடுயர் பவளமும்
தருக்கில் வருஞ்சிலா சத்துட னல்லவெள்
ளெருக்கன் பாலினு லேயரைத் தேயடை
பெருக்க வகலில் பின்னிடு மூடியே.

281. மூடி மணலிலே மூளெரி வைப்பதால்
கூடிப் பற்பமாங் கொள்ளனு பானத்தில்
ஓடி யொளியுமே யுற்றசு வாசமோ
டாடி வரும்பிணி யானவக் காசமே.

(க - து) சிவந்துருகின தாளகம், பவளம், சிலாசத்து சமனெடையாகக் கல்வத்திலிட்டு வெள்ளெருக்கன் பாலால் நான்கு ஜாமம் அரைத்து வில்லைசெய்து காயவைத்து அகலிலடக்கிச் சீலைசெய்து ஒரு சட்டியினுள் மணலிட்டு நடுவே வைத்து மேல் சட்டி மூடிச் சீலைசெய்து

உலர்ந்தபின் அடுப்பின்மீது ஏற்றி நான்கு ஜாமம் சிறு தீயாக எரிக்க பஸ்பமாகும். இதனை $\frac{1}{4}$-குன்றிப் பிரமாணம் தினம் இருவேளை தகுந்த அனுபானங்களில் உட்கொள்ளச் சுவாசகாச நீங்கும். இன்னும் கப சம்பந்தமான பல ரோகங்களையும் நிவர்த்தி செய்யும். பத்தியம் ரோகத்திற்கு ஏற்றவாறும் காலத்தை யனுசரித்தும் தக்கபடி உணவுகளைக் கூட்டவும்; எ - ம். (13)

### வெடியுப்புச் சுண்ணம்

282. ஓதுங்கூர் மத்தின்மே லோட்டைத் துகளாக்கிப்
போதுமதி லைந்துபலம் போட்டகலில்—மோதும்
வெடியுப்பிட் டோர்பலமே வேண்டிபுரி சீலை
படியக்கோ ழிப்புடமாம் பார்.

பார்க்கவே சுண்ணம் படியி னிறைகுன்றி
கூர்த்தவிள நீரதனில் கொண்டுண்ண—ஆர்த்தியுடன்
கல்லடைப்பும் நீர்க்கட்டுங் காணு மெரிச்சலதுஞ்
சொல்லவிலை யாகுஞ் சுகம்.

(க - து) ஐந்து பலம் ஆமையின் ஓட்டைத் தூள் செய்து, ஒரு அகலில் பாதித் தூளைப்பரப்பி அதனில் ஒரு பலம் நிறையுள்ள 3, 4 - வெடியுப்புக் கம்பிகளைப் பரப்பி மேலே மிகுதியுள்ள தூளைப் போட்டு மேல் அகல் மூடிச் சீலைசெய்து காய்ந்த பின் 15 - வறட்டியில் புட மிடவும். ஆறின பின்னர்ப் பார்க்க அக் கம்பிகள் உருகி வெளுத்து இருக்கும். இதனைக் கல்வத்திலிட்டு அரைத்துக் கல்கார்க்குச் சீசாவில் அடைத்திடுக. வேண்டும்போது குன்றி நிறை இளநீரில் கலந்து உட்கொள்ள நீரடைப்பு, கல்லடைப்பு, எரிச்சல் முதலியவை இரண்டொரு வேளையிலே குணமாகும்; எ - ம். (14)

### அப்பிரக லவணம்

283. பத்துபல மப்பிரகம் பாலதனில் மாசறுத்து
சத்துப் பனங்கள்ளால் சார்சுறுக்குங்—குத்தி
வறுத்தே யுடனிணங்கன் வாங்கிசமன் கூட்டி
இறுத்தி யரைக்கவாம் இங்கு.

284. இங்குப் பனங்கள்ளில் ஈயரைப்பு நாற்சாமம்
தங்குஞ் சரக்குதனைத் தட்டிவிலை—பொங்கமுடன்
போட்டய வட்டிலிலே பூட்டிமேல் மூடியிட்டு
நீட்டுக் கஜபுடத்தில் நீ.

285. நீறுஞ் சரக்கோடு நீள்கார மேறிடவே
ஊறும் வெடியுப்பு ஊட்டிசமன்—சீருடனே
முன்போல வேற்கபுடம் மூன்று முறையாக
நன்றே மடியுறநீ நாடு.

286. நாடும் மருந்தோடு நான்மடங்கு உப்பதனைத்
தேடுமா வின்பாலில் தேர்சுத்தி—பீடுபெறத்
தந்தே யுறவாக்கித் தாளில் எரித்துபுடம்
வெந்தே எடுக்கவாம் விட்டு.

287. விட்டெடுத்த பற்பம் விரும்பிசமன் குங்கில்யம்
சட்ட முடனரைத்துச் சட்டிதனிற்—கொட்டி
மேல்மூடிச் சீலையிட்டு மேவெரிப்புப் பின்புடத்திற்
சேல்கண்ணாய்! பற்பமாஞ் செப்பு.

288. செப்பும் மருந்தில் சிறக்கப் பணவெடையே
ஒப்பக் குடிமோரில் உட்கொள்ள—அப்பாகேள்!
போக்கு வதிநீரும் பொல்லா ததனினிப்பு
நீக்கு மிதுவுண்மை நேர்.

(க - து) பத்துப் பலம் கிருஷ்ண அப்பிரகத்தைப் பழுக்கக் காய்ச்சிக் காய்ச்சிப் பத்துமுறை பசுவின் பாலில் தோய்த்துக் கல்லுரலில் போட்டுக் கடப்பாரையால் இடித்துச் சூரணம்செய்து ஒரு அகண்ட சட்டியில் போட்டுப் பனங்கள் சிறிது சிறிதாக விட்டு எட்டு சாமம் சுறுக்குக் கொடுத்து வறுத்துச் சமனெடை வெடியுப்புச் சேர்த்துக் கல்வத்திலிட்டுப் பனங்கள் விட்டு நான்கு சாமம் அரைத்து இவை கொள்ளும்படியான ஒரு அடி கனத்த குடைவான இரும்புச் சட்டியில் போட்டு வாய்க்குப் பொருத்த மான இரும்புத் தகட்டால் மூடிச் சீலைசெய்து காய்ந்தபின் 300 - வறட்டி யில் புடமிடவும். சாங்க சீதளமாய் ஆறினபின் சட்டியினுள் இட்ட மருந் தைச் சேதப்படாமல் எடுத்து மீண்டும் சமனெடை வெடியுப்புக் கூட்டி முன்போ லரைத்து இருப்புச் சட்டியிலிட்டுச் சீலைசெய்து புடமிடவும். இப்படி மூன்று புடமிடவும்; அப்பிரகத்திற்கு உரிய தளுக்கு மாறிவிடும். அங்ஙனம் ஆகாவிடின் வெடியுப்புச் சேர்க்காமல் பனங்கள்ளினால் அரைத்து முன்போல் இரண்டொரு புடம் போட்டுக்கொள்ள வேண்டியது ஆவசியக மாகும். இவ்வண்ணம் முடிவுபெற்ற பற்பத்தோடு, நான்கு எடை பாலில் கரைத்துக் காய்ச்சி எடுத்து சோற்றுப்புச் சேர்த்து அரைத்து ஆப்பச் சட்டி

யைப்போன்ற தொன்றில் செலுத்திப் பொருத்தமான மேல்மூடி யொன்றால் மூடிச் சீலைசெய்து காயவைத்து, இரண்டு சாமம் எரித்து அடி சட்டி மேலாகவும் மேல் சட்டி கீழாகவும் திருப்பி வைத்து இரண்டு சாமம் எரித்து ஆறவிட்டு மருந்தை யெடுத்து வைத்துக்கொள்க. இதனில் வேண்டும்போது, 5 - பலம் மருந்துக்குக் குறையாமல் எடுத்துக்கொண்டு அதனுடன் சமனெடை வெள்ளைக் குங்கிலியம் சேர்த்து அரைத்து முன்போல் சட்டியில் போட்டு மேல்சட்டி மூடிச் சீலைசெய்து காய்ந்தபின் மூன்று சாமம் சிறுதீயில் எரித்துப் பின்னர் அப்படியே 30 - வறட்டியில் புடமிடவும். பற்பமானது எத்தகைய நிறமுடைத்தாயிருப்பினும் சரி; குணம் செய்வதில் சந்தேகமில்லை. வேளைக்குப் பணவெடை பற்பம் புளித்த மோரில் போட்டுக் கலக்கித் தினம் இருவேளை கொள்ள நீரிழிவு, தாகம், அழலை, பலக் குறைவு முதலிய குணங்களையுடைய மதுமேகம் நிவர்த்தியாகும். இன்னும் நீரைப் பரிட்சித்துப் பார்க்க இனிப்பு நீங்கி உப்பும் ஏற்படும்; எ - ம். (15)

பவள பற்பம்

289. நல்லபடி பூநீரும் நான்கொடையாந் தன்னீரும்
சொல்லக் கரைத்திட்டுச் சோதித்தே—சொல்லகற்றிக்
கொள்ளும் வடிநீரில் கூறுங்கா ரச்சாரம்
விள்ளகு டம்பலமே விட்டு.

290. விட்ட வுறவுதனில் வேண்டும்பே ரண்டத்தின்
சுட்டச்சுன் னங்கழஞ்சி சூதில்லா—திட்டபின்
கொட்டி யிடச்சுறுக்குக் கொண்டே யரிதாரம்
கட்டி வெளுக்கவே காண்.

291. காணு மரிதாரம் காசிடையே மூன்றுகும்
வேணுஞ் சிலாசத்து வெண்சங்கு—பூணுங்கல்
நாருங் கலைகொம்பு நாருத கல்மதமும்
கோரும் பலமுக்கால் கொண்டு.

292. கொண்ட விதனோடு குற்றமிலா நற்பவளம்
அண்டிப் பலமூன் றதையெடுத்துப்—பண்டுபெற
கல்வத்தே யிட்டரை கட்டித் தயிர்நீரால்
வில்லைத்தட் டிப்புடமே விள்.

293. விள்ளச் சயகாசம் வீறிட்ட கக்கிருமல்
உள்ள படியேது உண்டிடவே—கொள்ளச்செங்
குன்றி யளவுநெயிற் கூறு மிருநேரம்
நன்றி தருமெனவே நாடு.

(க-து) ஒரு படி சுத்தமான பூநீரை ஒரு மட்பாண்டத்திலிட்டு நான்கு எடைச் சிறுநீர் விட்டுக் கரைத்து மறுநாள் வண்டலில்லாமல் வடித்து எடுத்த தெளிவு நீரில் வெங்காரம், சாரம், கர்ப்பூரம் வகைக்குப் பலம் வீதமாகவும், பேரண்டச்சுன்னம் ஒரு கழஞ்சாவாகவும் கல்வத்திலிட்டு அரைத்து நன்றாய்ப் பொடியானபின் சேர்த்துக் கலக்கி ரவியில் 3-நாள் வைக்கவும். இங்ஙனம் முடிக்கப்பட்ட ஜெயநீரில் தாளகத்தை நான்கு ஜாமம் அல்லது ஆறு ஜாமம் சுருக்குக் கொடுக்க ஒருவிதமாகக் கட்டி வெளுக்கும். இதனில் மூன்று வராகனெடை சிலாசத்து பற்பம், வெண் சங்கு பற்பம், கல்நார் பற்பம், மான்கொம்பு பற்பம், கல்மத பற்பம் வகைக்குப் பலம் முக்கால், நற்பவள பற்பம் பலம் மூன்று ஆக இவைகளைக் கல்வத்திலிட்டு, தயிரைச் சீலையில் முடித்து அதனின்று வடிந்த தெளிவு நீரால் ஒரு சாமம் அரைத்து வில்லைசெய்து காயவைத்து அகலில் அடக்கிச் சீலைசெய்து காய்ந்தபின் 15-20-வறட்டியில் புடமிட நல்ல பற்பமாகும். இதனில் அரை அல்லது ஒரு குன்றிப் பிரமாணம் தினம் இருவேளை நெய்யிற் கொள்ள க்ஷய சம்பந்தமான சுரம், காச இருமல் முதலியவைகள் குணமாகும். பத்தியம்: ரோகத்திற்குத் தக்கபடி சரீரம் இளைக்காதபடி நல்ல போஜனத்தைக் கொடுத்துவர வேண்டும்; எ-ம். (16)

## சூத பற்பம்

294. கட்டாக வின்னங் கழறுகிறேன் சூதத்தை
விட்டுப் புகைநீரால் வீறடக்க—கட்டுடனே
பூத்துப்புட் டாகும் புகல வதைக்கொண்டு
நீத்துவிட மார்க்கம் நினை.

295. நினைத்தசிற் றண்டத்தை நேரே துளைத்து
அனைத்தக் கருப்போக்கி யப்பால்—புனைத்திடவாம்
சூதம் விராகனெடை சொல்பறபஞ் செய்சீலை
ஆதரவில் நற்புடமே யாம்.

296. ஆன புடமதனில் அங்கிதள்ளி யோட்டோடே
மானமிகக் கல்வத்தில் மாட்சிபெறத்—தானரைத்துக்
காற்குன்றி போலளவிற் கட்டிவெல்லம் சேர்த்துண்ணச்
சேற்கண்ணாய் என்றுருஞ் செப்பு.

297. செப்பக் குழிரணங்கள் சேயிழையால் வந்ததொரு
வெப்புப் பிடிப்போடு வேதனைசெய்—தப்பெல்லாம்
ஈரஞ்சி வேளையிலே யின்ன லொழிந்தோடும்
பேரறிவிற் ருமறியப் பேசு.

(க - து) ஒரு கோப்பையில் சூதத்தை விட்டு அதனெடை புகைநீர் என்று கூறப்பட்ட வெடியுப்புத் திராவகத்தைவிட்டு ரவியில் வைக்க ஒரு விதமாகச் சிறிது கட்டுப்பட்டுப் பூத்துப் புட்டுபோலாகும், இதனை நன் குலர்த்திப் பொடித்து வைத்துக்கொள்க. ஒரு சிற்றண்டத்திற் சிறு துளை யிட்டு அதன்மூலமாக ஒரு துடைப்பச் சுப்பலை விட்டுவிட்டு இழுக்க உள் ளிருக்கும் கருவெல்லாம் வெளியாகும். பின்னர் ரவியில் ஈரமில்லாது காய வைத்து அதனில் முட்டை ஒன்றுக்கு ஒரு விராகனெடையாக முன் சித்தப் படுத்திய சூத பற்பத்தைச் செலுத்தி, வாய்க்கு ஒரு முட்டை ஓட்டின் துண்டால் உழுந்தின் பசை தடவி மூடிச் சீலைசெய்து நன்ருய்க் காய்ந்த பின் 12 - வறட்டியில் புடம் போடவும். ஆறினபின் கவசம் நீக்கி அண்டத் தின் ஓட்டையும் உள்ளிட்ட ரசபற்பத்தையும் சேதப்படாமல் கல்வத்தி விட்டு அரைத்து வைத்துக்கொண்டு இரண்டு மூன்று அரிசிப் பிரமாணம் கருப்புட்டியில் தினம் இருவேளை 5 - நாள் கொடுக்க முழங்காலுக்குக் கீழே வரும் குழியிரணங்களும், மேக வாயுவால் வரும் பிடிப்புகளும், கிரந்தி கொறுக்கு முதலியவைகளும் தீரும். பத்தியம்: இச்சா பத்தியமாகவும், பசுவின் மோர், நெய் முதலியவைகளைத் தேகம் சூடாகாமல் சேர்க்கவும்; எ - ம். (17)

அப்பிரக பற்பம்

298. வேதமுறும் பூவுலகில் மேவுமது நீரொழியச்
சாதகமா யோர்மருந்து சாற்றுகிறேன்—தீதகலக்
கண்ணடி யப்பிரகம் கண்டுபல மோரிரண்டு
சுண்ணம்பு நீரதனிற் ருேய்.

299. தோய்வுறவே மூன்றுநாள் சுண்ணநீ றிற்பெய்தே
தேய்த்தலம்பி யைந்துபலம் சேரெண்ணெய்—வாய்த்தவெங்
காரப் பொடியிடையிற் கட்டுறவே யிட்டபின்
சாரப் பெரும்புடத்தே சாற்று.

300. சாற்றவப் ரேகம் தளுக்கற்று மாண்டுருகும்
போற்றுங் கனிச்சாற்றில் பொற்புறவே—ஏற்றபடி

சொல்மூன்று நாளரைத்து சொப்பதனி லிட்டடைத்து
நல்லெருவு நாற்பதிலே நாட்டு.

301. நாட்டப் புடமூன்றில் நன்றே மலர்ந்திடின்கேள்
நீட்டப் பணவெடையாம் நித்தமுமே—வாட்டமுறும்
தியமது மேகமுடன் சீர்குரைத்த மாச்சயமும்
காயமிலை யென்றேடுங் கண்டு.

(க - து) இரண்டு பலம் கண்ணாடி வெள்ளை யப்பிரகத்தைச் சிறு துண்டுகளாக நறுக்கி ஒரு குடுவையில் போட்டுச் சுண்ணாம்பும் சிறு நீரும் விட்டு அதனில் மூன்றுநாள் ஊறப்போட்டு எடுக்கவும். பின்னர் சுத்த ஜலம் விட்டலம்பி ஐந்து பலம் எண்ணெய் வெங்காரத்தைப் பொடிசெய்து ஒரு குடுவையில் படிப்படியாய் வெங்காரப் பொடியையும் அப்பிரகத்தையும் போட்டழுத்தி உள் இடை வெளியிருக்க மூடிச் சீலைசெய்து காயவைத்து 200 - வறட்டியில் புடமிடவும். புட மாறினபின் குடுவையிலிட்ட அப்பிரகமானது கறுப்பாக உருகி நிற்கும். இதனைப் பழச்சாறு விட்டு மூன்றுநாளரைத்து வில்லை தட்டிக் காயவைத்து ஒட்டி லடக்கிச் சீலைசெய்து 40 - வறட்டியில் புடமிடவும். இப்படி 3 - புடமிட வெள்ளை நிறமான பற்பமாகும். இதனில் பணவெடை நெய், வெண்ணெய் முதலியவைகளில் தினம் இருவேளை கொடுக்க மதுமேகம், பகுமூத்திரம், க்ஷயசுரம் முதலியவைகள் குணமாகும்; எ - ம். (18)

## க்ஷயகுலாந்தக பற்பம்

302. சொற்பமென் றெண்ணாதே சோதித்த பாகமிதில்
உற்ற சயரோக மோட்டமிடும்—கற்றுணர்வாய்
முக்கழஞ்சி வெள்ளி முழுகெம்பு கூட்டிசமன்
தொக்கப் பவளமிடச் சொல்.

303. சொல்லக் கலுவத்தே சூரத்துப் பன்னீரால்
வெல்லும் படியாட்டி வில்லைசெய்து—நல்லபடி
பொங்கு ரவிகாட்டிப் புத்தோட்டிற் சீலையுற
இங்குக் கரிப்புடத்தே இட்டு.

304. இட்ட குருவோடு ஈன்றபற்ப மப்ரேகம்
திட்ட மரையாகச் சேர்தூக்கி—நட்டமுரு
கக்கரந்தைச் சாற்றாலே சாத்தொருநா ளாட்டிப்பின்
தக்க சிறுபுடத்தே தாக்கு.

305. தாக்கி யெடுத்தாறத் தானைய் மலர்பற்பம்
போக்குஞ் சயமிருமல் பொய்யல்ல—நோக்கச்
சயகுலத்துக் கந்தகனைச் சாருதலா லிங்கே
முயலப் பரிகாரி முன்.

(க - து) வெள்ளி அரப்பொடி 3 கழஞ்சு, கெம்புதளம் 3 கழஞ்சு, நற்பவளம் 6 கழஞ்சு இவைகளைத் தேயாத சுத்தமான கல்வத்திலிட்டு, உயர்தரமான சூரத்து காஸ்மீர் முதலான பிரதேசங்களிலிருந்து வருகின்ற பன்னீரினால் எழுநாள் அரைத்து வில்லைசெய்து காயவைத்து ஒட்டிலடக்கிச் சீலைசெய்து காய்ந்தபின் ஒரு ராத்தல் காட்டுக்கரியில் புடமிடப் பற்பமாகும். ஒருகால் சரிவர ஆகாவிடின் முன்போல் ஒருபுட மிடவும். இப்படி எடுத்த மருந்தானது க்ஷய குலாந்தக குருவென்பர். இம் மருந்தினெடையில் பாதி முன் முடித்த அப்பிரகபற்பம் கூட்டி கக்கரந்தைச் சாற்றால் அரைத்து வில்லைசெய்து காயவைத்து ஒட்டிலடைத்துச் சீலைசெய்து 7, 8 - வறட்டியில் புடமிடவும். இப்படி 3 - புடமிடப் பற்பமாகும். இதனில் வேளைக்கு குன்றியெடை தினம் இருவேளை கொடுக்க க்ஷயசுரமும், இருமலும் குணமாகும்; நுரை ஈரலைத் தின்றுகொண்டுபோன இரணங்களும் ஆறும். ஒருகால் மேற்படி விரணங்களால் நுரை ஈரலானது அளவுக்கு மிஞ்சிக் கெடுதியடைந்திருப்பின் சிறிது காலமளவு ரோகத்தைச் சாந்தப்படுத்திவைக்கும்; எ - ம். (19)

சிங்கி பற்பம்

306. வெடியுப்போ டோமம் வினவதுலா மொன்றைக்
குடிநீரிட் டம்மிதனிற் கூழாம்—படியாட்டிச்
சிங்கிதுலா மொன்றின்மேல் சீரங்கி பூட்டிகரி
பங்கமிலா மற்புடமே பாய்ச்சு.

307. பாய்ச்சி மலர்ந்திட்ட பற்பந் தனையெடுத்துக்
காய்ச்சல் கபகோழை கட்டிய—நோய்ச்சலுடன்
வாட்டுநுரை யீரலிலே வாய்த்தகபம் மேல்மூச்சு
ஓட்டுமிதை கொண்டளவில் ஓது.

(க - து) ஒரு தோலா வெடி யுப்பையும், ஒரு தோலா ஓமத்தையும் சுத்த ஜலம் விட்டரைத்து, மெழுகுபதத்தில் ஒரு தோலா மான்கொம்பின்மேல் கவசித்துக் காய்ந்தபின் சீலைசெய்து ஒருமுறம் காட்டுக்கரியின் இடையில் வைத்து நெருப்பிட்டு விசிறி ஆறினபின் பார்க்க;

மான்கொம்பானது நீறி பற்பமாக இருக்கும். இதனில் 5 - பணவெடை தேனில் மத்தித்துக் கொடுக்க நுரைஈரலில் சிக்கப்பட்டுள்ள கபங்களைக் கரைத்து கஷ்டசுவாசமிருப்பினும் குணப்படுத்தும்; சீதாங்குச சுரத்திற்காக அவிழ்தம் கொடுக்கும்போது இதனைச்சிறந்த அனுபானமாகக் கொள்ளல் சிறந்தது ; எ - ம். (20)

காலாந்த கௌரிபதங்கம்

308. வெள்ளைதுரு சுக்காந்தம் வீரமுட னிலிங்கம்
விள்ளவரி தாரம் விளம்பிடவே—கொள்கௌரி
கந்திபூ ரஞ்சிலை காற்பலமே யாகவிவை
தொந்தமுடன் நீயரைக்கச் சொல்.

309. சொல்லெருக்கன் பாலண்டம் தோயவருங் காரநீர்
மெல்லவிட் டேயரைத்து மேன்மையுறச்—சில்லிபெறு
மூடியுடன் மூசை முடித்தோ ரிரண்டுபலம்
நாடிரசம் வைத்தல் நலம்.

310. நலமான வாய்மூடி நற்சிலை பூட்டிப்
பலமான பாண்டத்தைப் பார்த்து—நிலமாரும்
உப்புநிரைத் தூள்வைத்தே ஒப்பநடு மூசையிட்டுத்
தப்பிலா மேல்மூடித் தாக்கு.

311. தாக்கிமண் சீலையிட்டுச் சாமமீ ரைந்தெரிக்க
நோக்கப் பதங்கமாம் நுண்மையுற—வாக்கியபின்
காத்திடு வாயீதே காலாந்த கௌரியென
மூத்தோர்க ளோத்து முறை.

312. முறையான் பற்பத்தை முன்னவன்ரு ளெண்ணி
நிறையாங் கடுகளவு நீட்டக்—குறையேது
குட்டமுடன் சூலை கூன்முடக்கு வாதநோய்
இட்டளவி லேதென்றே எண்.

313. எண்ணக் கருவுயிர்த்த ஏந்திழைக்குச் சேரமூக்கால்
நண்ணும் பெருஞ்சந்நி நாடிடினும்—உண்ணகலும்
பத்தியம் நாண்மூன்று பாலன்னம் வேருகாச்
சித்த ருரைத்தபடிச் செப்பு.

(க - து) வெள்ளை பாஷாணம், துருசு, காந்தம், வீரம், இலிங்கம், தாளகம், கௌரி, கந்தகம், பூரம், மனோசிலை ஆக இச் சரக்குகளை வகைக்குப்

பலம் காலாகக் கல்வத்தி விட்டு, * சிற்றண்ட வெண்கரு ஜெயநீரால் நன்ருய் அரைத்து அதனில் ஒரு மூசையையும், 5, 6 - துவாரங்களுடன் பொருந்திய மேல்மூடி ஒன்றையும் செய்து வெடிக்காமல் நிழலில் உலர்த்தி வைத்துக்கொண்டு அதனில் இரண்டு பலம் வாலே ரசத்தை விட்டுச் சிறு துவாரங்களிட்டு மூடித்துள்ள மூடியைக்கொண்டு வாய் மூடி, சந்திற்கு உளுத்தமாவைச் சிறிது ஜலம் விட்டுப் பிசைந்து பூசி இரண்டொரு சீலே செய்து வைத்துக்கொள்க. பின்னர், நான்கு படி உப்பை இடித்தேனும் அல்லது இயந்திரத்திலிட்டு அரைத்தேனும் ஒரு வலுவான மட்பாண்டத்தில் போட்டமுத்தி இடையில் பள்ளம் செய்து முன் சித்தப்படுத்தியுள்ள மூசையை இட்டு வாய் மட்டத்திற்கு உப்பிருக்க வழுத்தி, கரிசலாங்கண்ணி, இலேச்சாற்றை உட்புறமாகப் பூசி உலர வைத்தெடுத்த பொருத்தமான ஒரு மட்பாண்டத்தை மேல் மூடி எழ் சீலே செய்து காய்ந்தபின் அடுப்பேற்றி முத்தீயாக 10-ஜாமம் எரித்து ஆறவிட்டுப் பார்க்க, மேல்சட்டியில் பதங்கம் ஏறி நிற்கும். இதனேச் சேதப்படாமல் சுரண்டி எடுத்துக் கல்வத்திலிட்டு அரைத்துச் சீசாவிலிடவும். இதனில் வேளேக்குக் கடுகு பிரமாணம் பனே வெல்லத்தில் வைத்துத் தினம் இருவேளே மூன்று நாள் கொடுக்கக் குட்டம், சூலே, கூன், முடக்கு, வாதநோய் சம்பந்தமான மகா ரோகங்கள், பிரசவித்த ஸ்திரீகளுக்கு அழுக்குத்தங்கி யுண்டாகும் சந்நி முதலியவைகள் யாவும் குணமாகும். சீதள சம்பந்தத்தினுல் கபம் மீறிப் பிழைப்பதரிதாகத் தோற்றுங் காலத்தில் மருந்தின் அளவைக் கவனியாது சமயோசிதமாய் அதிகப்படுத்திக் கொடுக்க நெருங்கி நின்ற காலனேயும் கசக்கி ஓட்டிவிடும். பத்தியம் பால் கஞ்சி அல்லது பாலன்னம்; எ - ம். (21)

திரிலோக பூபதி

கலி விருத்தம்

314. உள்ளபி ரஞ்சி யுயர்பொடி முத்துடன்
கொள்ள வகைக்கிரு குன்றிநே ரெடையெனக்
கள்ளமி லாமதி காண்ரவி யத்துடன்
விள்ளச் சரக்கினி வேண்டிடு சொல்வதே.

* சிற்றண்ட வெண்கருவோடு எருக்கம்பால் விட்டு ரவியில் வைத்து முறித்தது.

315. தேசத் துயர்ந்திடு சீமைகல் நாருடன்
மாசில் பவளமே மானுமுக் குன்றிதான்
நேச மாய்க்கொள நேர்ந்து பழரசத்
தோசை பெறவரைத் துலர்த்தபில் லைசொலே.

316. சொல்லுகற் ருழைதன் சோற்றை யோட்டினில்
மெல்லவைத் தேபினர் வில்லையை வைத்துமேல்
புல்லவச் சோற்றினைப் போட்டுமேல் மூடியே
நல்லைந் தெருவில் நவில்புட மூன்றதே.

317. மூன்று புடத்தினில் மொழியப் பற்பமே
ஆன்ற வரிசிநே ரவ்வெடை யுட்கொள
ஏன்ற சிங்க மெனப்பல மோங்கிட
ஊன்று மேகத் துறுபகை யோடுமே.

(க - து) தங்கம், அரப்பொடி, கெட்டிமுத்து வகைக்கு இரண்டு குன்றி எடை, வெள்ளி யரப்பொடி, தாம்பிர அரப்பொடி, சீமைக் கல்நாரு, பவளம் வகைக்கு மூன்று குன்றி யெடையாகக் கல்வத்திலிட்டு, பழச் சாற்றினல் நான்கு ஜாமம் அரைத்து வில்லை செய்து காயவைத்து ஒரு அகலில் மெல்லியதாகச் சீவிய கற்றாழையின் சோற்றை வைத்து அதன்மீது வில்லையை வைத்து மேலும் முன்போல் மெல்லியதாகச் சீவிய சோற்றை யிட்டு மேல் அகல்மூடிச் சீலைசெய்து 7, 8 - வறட்டியில் புடமிடவும். இப்படி அரைத்து அரைத்து 4, 5 - புடமிடப் பற்பமாகும். இது அதிக வெளுப் பாக விராது. மேகவர்ணத்திலும் உயர்தரமாக வெளுத்தே காட்டும். இதனில் அரிசிப் பிரமாணம் தினம் இருவேளை 7, 9 - நல்ல லேகி யங்களில் வைத்துண்ண நல்ல பலமுண்டாகும். நாம்புகள் பலப்பட்டுத் தாது வலுக்கும். இன்னும் மேக சம்பந்தமான பல ரோகங்களும், குன்மம் வாத ரோகங்களும் தீரும். நல்ல ஆகாரம் உட்கொள்ளவேண்டும்; எ - ம். (22)

### நாக பற்பம்

318. சேர்க்கவெடி யுப்புடனே சீனம் பழத்தோலும்
ஆர்க்கப் பலமொன் றரைத்தபின்—தீர்க்கமுடன்
கண்டுவில்லை தட்டி கதிக்க வனல்காட்டிக்
கொண்ட திதுகுருவாங் கூறு.

319. கூறுமுயர் நாகத்தைக் கொண்டிருப்பை நெய்யதனில்
வீறுகெட ஏழுமுறை விட்டுருக்கிப்—பேறுபெறும்

நாகந் தனையுருக்கி நாயகமே தூவகுரு
பாக மிதில்நீறும் பார்.

320. பாரதனைக் கல்வத்திற் பக்குவமா யிட்டதனில்
சேரச்சிற் றுமணக்கின் சீர்சாற்றைச்—சோரவிட்டுச்
செப்பச் சதுர்சாமம் சிக்கறவே நீயாட்டி
ஒப்பவில்லைச் செய்திடவே ஓது.

321. ஓத வகற்றினிலே ஒத்திருக்க மேல்மூடி
சேதம்வ ராச்சீலை செய்திங்கே—காதலுடன்
நீட்ட முழப்புடத்தில் நீறுகு மிப்படியே
போட்டெடுக்க மூன்றும் புகல்,

322. புகலப் பணவெடையே போற்றிநெய் யிற்கொள்ள
சகல முளைமூலம் சார்புண்—ணகலுமே
வெள்ளை யுடன்மேகம் வெப்புநீர் போக்கதிகம்
உள்ளபடி விட்டகலும் உன்.

(க - து) வெடியுப்பு, படிகாரம், எலுமிச்சம்பழத் தோல் இவைகளை வகைக்கு ஒரு பலமாகக் கல்வத்திலிட்டு நன்றாய் அரைக்க மெழுகுபோலாகும். இதனை வில்லையாகத் தட்டி நெருப்பனலின்மீது ஒரு புது மண்ஞோட்டை வைத்து அதனிலிட்டு நீர் சுண்டப் புரட்டிப் புரட்டிக்கொடுத்து எடுத்துக்கொள்க. இதனை ஒரு விதமான குருவெனக் கூறுவர்.

இலுப்பை எண்ணெயில் ஏழு முறை உருக்கிச் சாய்த்து சுத்தி செய்தெடுத்த ஒரு பலம் நாகத்தை இருப்பு வாணலியிலிட்டு கன்னுலையில் வைத்து உருக்கி முன் சித்தப்படுத்தி வைத்துள்ள குருவைப் பொடித்துச் சிறிது சிறிதாகப்போட்டு ஆயக் கரண்டியால் துழாவி, விசையாக உலையை ஊத, நாகமானது பற்றி எரிந்து பூத்து நிற்கும். இதனைச் சேதப்படாமல் சுரண்டிக் கல்வத்திலிட்டு ஆமணக்கின் இலைச்சாற்றால் நான்கு ஜாமம் அரைத்து வில்லை தட்டிக் காயவைத்து ஓட்டிலிட்டு மேல் அகல் மூடிச் சீலை செய்து முழப்புடம் போடவும். இப்படி மூன்று புடமிட உயர்தரமான பற்பமாகும். இதனில் குன்றியெடை நெய், வெண்ணெய் முதலிய அனுபானங்களில் தினம் இருபொழுது உட்கொள்ள இரத்தமூலம், சீழ் மூலம், புரையோடும் பவுத்திரம், மேகாணம், வெள்ளை, நீர் எரிச்சல் முதலியவை நிவர்த்தியாகும். இன்னும் இம் மருந்தால் தாது வலுக்கும்; எ - ம். (23)

### பவள பற்பம்

323. கார்கண்டங் கத்திரியின் காயதனை நன்கிடித்து
சீர்கொண் டகலிலே செம்மியதில்—ஏர்கொண்ட
வேர்ப்பவள மிட்டிடையில் மேல்மூடிச் சீலையிட்டு
ஏற்க முழப்புடமே எண்.

324. எண்ணப் பவளமே ஏற்கும் நிறம்வெள்ளை
நண்ணி யரைத்தே நலமாக்கி—விண்ணில்
சிறுகுன்றி போலளவு சீராவின் நெய்யில்
இருவேளை யுண்ணிடவே யிங்கு.

325. இங்குக் கபமீளை யின்னுஞ் சயகாசம்
பொங்கும் வெதுப்பு போரிருமல்—சங்கையறப்
போக்கு மெனப்புவியில் போதித்த வாக்கதனை
ஊக்க முடனுரைத்தே னெப்பு.

(க-து) நீலவர்ணமாகப் பூப்பூக்கும்படியான கண்டங்கத்திரிக் காய்களைக் கொண்டுவந்து இடித்து ஓர் அகலில் பரப்பி அதனில் சுத்தி செய்த வேர்ப் பவளத்தை வைத்து மீண்டும் இடித்த காய்களைப் போட்டமுத்தி மேல் அகல்மூடிச் சீலைசெய்து காயவைத்து முழப்புடத்தி விடவும். பவளமானது வெந்து வெளுத்து நீற்றிருக்கும்; இவைகளைச் சேதப்படாமல் எடுத்துக் கல்வத்திலிட்டு அரைத்துச் சீசாவில் பத்திரப் படுத்துக.

இதனில் குன்றியளவு பசுவின் நெய்யில் தினம் இருவேளையாக உட்கொள்ள ஈளை, இருமல், காசம், க்ஷயம் முதலிய ரோகங்கள் நிவர்த்தியாகும்; எ-ம். (24)

### பஞ்சபான பற்பம்

326. பாருஞ் சிலாசத்தும் பால்கருடக் கல்லுடனே
சேருங்கல் நார்பவளம் சீர்காரம்—நேருறவே
பெற்றுசமன் கல்வத்தில் பீழையற வாட்டிடவே
கற்றாழைச் சாறூட்டக் கண்டு.

327. கண்டரைத்தே தட்டிவில்லை கண்ணே புடமிட்டு
கொண்டினிய மேனிதன்னாற் கூறரைத்துப்—பண்டு
பெறப்புடமே போட்டுப் பெரிதென்றே கொள்ள
சிறப்புத் தருமென்றே செப்பு.

328. செப்ப வொருகுன்றி சீராவின் நெய்யதனில்
ஒப்ப வுறவாக்கி யுண்டிடவே—இப்புவியில்
வெள்ளை யுடனெழுக்கு வெப்புநீர் விட்டெரிச்சல்
விள்ள விரைந்தோடும் விட்டு.

(க - து) கற்பூரச் சிலாசத்து, பால் கருடக்கல், கல்நார், பவளம், வெங்காரம் வகைக்குப் பலமாகக் கல்வத்திலிட்டு குமரிச் சாற்றால் நான்கு ஜாமம் அரைத்து வில்லைதட்டிக் காயவைத்து அகலிலிட்டு, மேல் அகல் மூடிச் சீலைசெய்து காய்ந்த பின்னர் 20 - வறட்டியில் புடமிடவும்.

சாங்கசீதளமாகப் புடம் ஆறினபின்னர் மருந்தை எடுத்துக் கல் வத்திலிட்டு மீண்டும் குப்பைமேனிச் சாற்றில் நான்குசாமம் அரைத்து வில்லைதட்டி முன்போல் அகலிலடக்கிச் சீலைசெய்து இருபது வறட்டி யில் புடமிடவும். இஃது உயர்தரமான பற்பமாகும். பொடித்துச் சீசாவி லிடவும். வேளைக்கு ஒரு குன்றிப் பிரமாணம் தினம் இருவேளை நெய், வெண்ணெய் முதலிய அனுபானங்களில் ஒருவாரம் உண்ண வெள்ளை, நீர்சுருக்கு, நீர் எரிச்சல் முதலியவைகள் நிவர்த்தியாகும். பத்தியம்: காரசாரமில்லாத ஆகாரமாக உட்கொள்ளல் சாலச் சிறந்தது; எ - ம். (25)

பஞ்சலவண பற்பம்

329. கேளுமஞ் சுப்புக் கிளரப் பலம்வீதம்
மீளுங் கலுவத்தில் மேவரைத்துத்—தூளுபதம்
கற்றாழை நொச்சிக் கணுப்பிரண்டை நல்முருங்கை
வற்றாத் தழைமேனி வாங்கு.

330. வாங்கி யதன்சாற்றால் வன்மையுட னுவலித்தே
ஓங்கத் தனித்தனியே ஓர்சாமம்—வீங்கரைத்து
வில்லைப் புரிந்தகலில் வேண்டிமேற் சீலையிட்டு
நல்ல சிறுபுடமே நாடு.

331. நாடும் பொடியதனில் நத்தப் பணவெடையே
கூடும் பெரும்வாயு குன்மமுடன்—ஓடுவயிர்
கட்டுச் செரியாமை காணின் சிதறிடவே
விட்டேகிப் போகும் வெருண்டு.

(க - து) இந்துப்பு, வளையலுப்பு, சோற்றுப்பு, வெடியுப்பு, கல் லுப்பு இவைகளை வகைக்குப் பலமாகக் கல்வத்திலிட்டு அரைத்துத்

ஸீதாராம தபேர்வினி



தாளாக்கி; குமரி, நொச்சி, பிரண்டை, முருங்கப்பட்டை, குப்பைமேனி இவைகளின் சாற்ருல் தனித்தனி ஒரு சாமம் அரைத்து பில்லைதட்டிக் காய்ந்தபின் அகலில் வைத்து மேல் அகல்மூடிச் சீலைசெய்து 20-வறட்டியில் புடமிடப் பற்பமாகும். இதனைப் புளிப்பு மோரிலேனும், நீராகாரத்திலேனும் பணவெடை வீதம் உட்கொள்ள வாதக்குடைச்சல், குன்மம், வயிற்றுக்கடுப்பு, அண்டவாயு, கிராணி, செரியாமை, மகோதரம் இவை தீரும்; எ-ம். (26)

குறிப்பு:—இப் பற்பத்துடன் நாலிலொன்று சுத்தமான பெருங்காயம் கூட்டித் தேன்விட்டு மெழுகுபதமாக அரைத்து வைத்துக்கொண்டு $\frac{1}{2}$, $\frac{3}{4}$-கழஞ்சு வீதம் கொடுப்பதுமுண்டு. இது, அதிக குணங் கொடுக்கக்கூடியதென் றுணர்க.

### தாளக பற்பம்

332. தொக்க வரிதாரம் தோலா எடைநான்கு
புக்கக் கலுவத்தில் பொற்புறவே—கக்கரந்தை
சொல்மூலிச் சாறிட்டுத் தோலாஎண் பத்தாக
மெல்லியலே நீயரைக்க வேண்டு.

333. வேண்டி விலைசெய்து வெய்யரவி யிட்டுலர
மீண்டுமம் மூலி மிகவிடித்துத்—தூண்டிடவே
மேலங்கி யேபூட்டி மேற்சீலை சுற்றியேழ்
பாலரவி யிற்காயப் பார்.

334. பார்த்தே யிருவீசை பன்னுமெரு நற்புடத்தில்
பூத்தே யெடைநிற்கும் பொய்யாகா—தீர்த்திடுமே
காய்ச்சல் சயகாசம் காண்மேகப் புண்புரைகள்
பாய்ச்சு லெடுத்தோடும் பார்.

(க-து) நான்கு தோலா எடையுள்ள சுத்திசெய்த தாளகத்தைக் கல்வத்திலிட்டு, எண்பது தோலா நிறையுள்ள கக்கரந்தைச் சாற்றைச் சிறிது சிறிதாகவிட்டு நன்ருய் அரைத்து மெழுகுபதம் வருந்தறுவாயில் வில்லைசெய்து இரவியில் காயவைத்து அதன்மேல் கக்கரந்தை சமூலத்தை நன்ருய் அரைத்துச் சுமார் சிறுதேங்காய்ப் பிரமாணம் கவசித்து ஏழ்சீலை செய்து சாம்பலில் புரட்டிச் சிறிது காயவைத்து 80-பலம் நிறையுள்ள எருவில் புடமிட வில்லையானது தாவள்ளியமாகப் பற்பித்து இருக்கும். இதனில் இரண்டு மூன்று அரிசி எடை தேன், நெய் முதலிய அனுபானங்

களில் தினம் இருவேளை கொள்ள க்ஷயம், காசம், ஈளை, சுரம், மேகரணம், புண் புரைகள் எல்லாம் குணமாகும். பத்தியம்: புளி நீக்கி இச்சாபத்திய மாக இருப்பது சாலச் சிறந்தது ; எ - ம். (27)

குறிப்பு :—கக்கரந்தை என்னும் மூலியானது கரந்தை இனத்திலொன்று. இலையடர்ந்ததும், சாமந்தி யிலையைப்போல் வரம்புகளில் அரும்புள்ள தும், வாசனை, மெல்லிய சுனையுடையதும், சகாதேவி புஷ்பத்தைப் போல் வெண்ணிறமான புஷ்பத்தை யுடையது; இதனை மகமதியர் கக்குருதா செடியெனக் கூறுவர்.

வெள்ளி பற்பம்

335. ஆலம் விழுதுப்போ டவ்வளவே துய்யனுறக்
கோலக் கலுவத்தே கொண்டாலி—னேலரசம்
விட்டரைத்து முப்புடத்தில் வீறடக்கி நீற்றியுணக்
கட்டறுமே விந்தெவர்க்குங் காண்.

(க - து) ஆலம் விழுதின் நுனிகளைக் கொய்துலர்த்திச் சுட்டுச் சாம்பலாக்கியது பலம் 1, வெள்ளி அரப்பொடி அல்லது சுத்தப்படுத்திய வெள்ளிச் சரிகை பலம் 1, இவை யிரண்டையும் கல்வத்திலிட்டு ஆலம் விழுதின் நுனிகளை இடித்துப் பிழிந்தெடுத்த சாறுவிட்டு மூன்று சாமம் அரைத்து வில்லை தட்டி அகலிலிட்டுச் சீலைசெய்து முழப்புடமிடவும். இப்படி 3 - முறையிட்டெடுத்த பற்பத்தில் குன்றி எடை தினம் இருவேளை நெய்யிற்கொள்ள தாது வலுக்கும், வெட்டை அற நீங்கும்; எ - ம். (28)

---

# சிந்தூர வகை

அயவடைச் சிந்தூரம்

கலி வெண்பா

336. கார்வண்ண மேனிக் கடவு ளடிதொழுது
பார்வண்ண மாந்தர் பவமாறச்—சீர்வண்ண
மாகு மயவடைச் செந்தூர மாநிலத்தே
பாகமொடு செய்யுங்கைப் பாகத்தை—யூகமொடு
சாற்று நயப்பதத்தைத் தான்காய்ச்சி யேகுறட்டால்
தேற்றப் பிடித்துகந் தித்தூளைத்—தூற்றி

வரும்போ தயமடிந்து வார்புனலா மன்ன
தருமே தசபலமாந் தன்னைப்—பருகுபழச்
சாற்று லரைநான்கு சாமந் தனிக்கருவின்
நீற்று லரைநான்கு சாமவிலைப்—பாற்றி
பெருஞ்சட் டிதனில் பிசகா தமரச்
செருகிமேற் சட்டியேழ் சீலை—வரிந்திட்டு
நாற்சாமப் போது நனியெரித்து மீண்டுமொரு
நாற்சாம மேதணலை நாட்டியே—ஏற்பாகக்
காணவயச் செந்தூரம் காலஞ் சுறுக்காமல்
மாணகரிப் பான்சாறும் மற்றுஞ்சீர்—பூணும்
பருத்திக் கதலிப் பழச்சாறு தன்னைச்
சொரிந்தரைத்து வில்லைதட்டித் தோன்ற—எரிச்சட்டி
வைத்துத் தகவெரித்து வத்துநிலை காணுங்கால்
சித்தி பெருந்திவ்ய செந்தூரம்—புத்துத்தேன்
குன்றி யளவுண்ணக் கோதாரும் பாண்டுரத்தங்
குன்றி வருநோய்கள் குத்தலொடு—நன்றில்
பலவாத ரோகம் பரிகரிக்குந் தாது
நிலவப் பெருகியே நின்று—பலமாகித்
தேக நரம்பாதி திண்ணமுறு மேபத்ய
பாகம் புளிகாரம் பாராதே—ஏகன்
திருவடியே போற்றித் தினமுங் குளித்துக்
குருவடியே நெஞ்சத்துட் கொள்.

(க - து) நயப்பு இரும்புத் துண்டுகளைக் கன்னுனுலையில் பழுக்கக் காய்ச்சி ஒன்றன்பின் ஒன்றாய்க் குறட்டினல் பிடித்துக்கொண்டு அதன் மீது அமரிசிலை கெந்தகத்தை மற்றொரு குறட்டினல் பிடித்துத் தேய்க்க அயம் கெந்தகத்துடன் சம்பந்தப்பட்டு உருகிக் கீழே சிட்டங்களாக விழும். அல்லது பழுக்கக் காய்ச்சிய இரும்பைக் குறட்டினல் பிடித்துக்கொண்டு கெந்தகப் பொடியை அதன்மீது தூவ முன்போல் உருகிக் கீழே விழும். எவ்விதமாயினும், காற்றின் வாட்டமறிந்து புகை தன்னை மோதாதிருக்கும் செவ்வி நோக்கி ஜாக்கிரதையாகப் பத்து பலத்திற்குக் குறையாமல் செய்து கொள்க. இங்ஙனம் முடிவுபெற்ற அயச்சிட்டத்தைக் கல்வத்திலிட்டுப் பழச்சாற்ருல் நாலு ஜாமம் அரைத்துக் காயவிட்டு மீண்டும் சிற்றண்ட வெண்கருவால் நான்கு ஜாமம் அரைத்து ஒரே வில்லையாக அகலமாகத் தட்டி அடியில் வரைந்துள்ள சித்திரத்தின்படி ஒரு முழ அகலமும், ஒரு சாண் உயரமுமுள்ள இரண்டு சட்டிகளைக் குயவன் கை வழிக்கும் மண்ணினல் அடி மட்டமாகவும், ஒரு சட்டியின் வாய்க்கு மற்றொன்று பொருந்துமாறு வாய் வரம்

புள்ளதாகச் செய்வித்ததில்வைத்து வாய் பொருத்தத்திற்கு எழு சீலை மண்செய்து நான்கு ஜாமம் எரிக்கவும். பின்னர்ப் பாண்டத்தைத் திறந்து முன் வைத்த வில்லையைக் கீழ் மேலாகப் புரட்டி வைத்து மேல் சட்டி மூடி மண் சீலை செய்து முன்போல் நான்கு ஜாமம் எரிக்கச் செந்தூர மாகும். இது உபயோகத்திற்கு உரித்ததே யாயினும், இச் சிந்தூரத்தை மீண்டும் கையாந்தகரை, செம்பருத்தி யிலைச்சாறு, வாழைப்பழச்சாறு இவைகளால் இரண்டிரண்டு சாமமரைத்து வில்லைதட்டி முன்போலெரிக்க உயர்தரமான சிந்தூரமாகும். இதனைக் குன்றியளவு தேனில் தினம் இருவேளை சாப்பிட்டுவரப் பாண்டு, இரத்தக் குறைவால்வரும் பல ரோகங் கள், வாதரோகங்கள், மேகரோகங்கள் யாவும் குணமாகும். இன்னும் இதனால் இரத்தத்திலுள்ள கெடுதல்களை நீக்கி இரத்தப் பெருக்க முண் டாக்கித் தேகத்தை அழகுறச் செய்வதுடன் தாது வலுக்கும். இம் மருந்தை யுண்ணுங் காலத்தில் புளி சேர்க்காமலும், காரத்தை யதிகப் படுத்தாமலும் ஆகாரம் கொள்ளல் நன்று ; எ-ம். (1)

## சிந்தூரம் எரிக்கும் சட்டி




சித்திர விளக்கம்

1. அடி சட்டி
2. மேல் சட்டி
3. அடிசட்டியின் வாய் வரம்பு

## இராமபாணச் சிந்தூரம்

337. வியக்க வயமஞ்சி வீரமுடன் பூரம்
வயக்க ரசலிங்கம் வாங்கிப்—பயக்கொன்று
சாட்ட ரணைவெள்ளச் சாறே டெருக்கன்பால்
பூட்டரைத்து வில்லைதட்டிப் போடு.

338. போடுமட் பாண்டமதிற் பூட்டுமேன் மூடியிட்டு
நாடு தனிவேம்பி னல்விறகால்—சூடு
தரவெரிக்கச் சிந்தூரம் தன்பெயருக் கேற்ப
உரமெரித்த நோய்க்கீ துரம்.

339. உரமாலங் கையோன் உயிரிழப்ப ராமன்
கரமார் சரமேபோற் காணுந்—தரமாகும்
பாண்டு பெருவயிறு பாரிசவா தங்கட்கே
மாண்பொருளீ தென்றே மதி.

340. மதிமயக்கஞ் சன்னி மணிக்கரங்கால் குத்தல்
மதிமயக்க மேகரணம் மாறும்—ததிமயக்குஞ்
செந்தூர மோவுண்ணில் சேர்க்காதே கெட்டபுளி
விந்தூரத் தின்ன விரும்பு.

(க - து) நயப்பான அயப்பொடி பலம் 5; வீரம், பூரம், ரசம், லிங்கம் வகைக்குப் பலம் 1, இவைகளைக் கல்வத்திலிட்டு வெள்ளைச் சாட்டரணைச் சாற்றாலும், எருக்கன் பாலாலும் நான்குசாமம் அரைத்து வில்லைசெய்து உலரவைத்து, செந்தூரம் எரிப்பதற்காக முற்கூறியவண்ணம் மட்பாண்டமொன்றில் வைத்து மேல் சட்டிமூடி மண்சீலை செய்து காய்ந்தபின், இரண்டு பகல் ஒரு இரவு வேப்பங்கட்டையால் எரிக்க நல்ல செந்தூரமாகும். இதனில் முக்கால், அரை குன்றி யளவாகத் தேனிலேனும், நெய்யிலேனும் தினம் இருவேளை கொடுத்துக்கொண்டுவர சந்நி சம்பந்தமான பிடிப்பு - குத்தல் முதலியவைகளும் குணமாகும். அரிசி எடைப் பிரமாணம் நீடித்துக் கொடுத்துவரின் பெருவயிறு, பாண்டு, பாரிசவாதம், மேகரணம் யாவும் குணமாகும். இதற்குப் பத்தியம் மருந்துண்ணுங் காலம் வரையில் புளி சேர்க்காதிருப்பது நன்று ; எ - ம். (2)

## அயக் களங்கு

341. போற்றவய நான்கு பொருவில் வெடியுப்போ
டேற்றகா ரஞ்சார மேய்கவுரி—தோற்ற
வயனண்டோ டுத்தூள் வகைப்பலமி ரண்டு
பெயச்சீராய் நீரிறுத்த பின்.

342. பின்னர் மருந்தைப் பெரிதுவந்து கல்வத்தே
நன்னரப் படியாட்டி நன்மூசை—தன்னிற்
புகட்டி யினிதூதப் பொன்ரு துருகிப்
பகட்டிக் களங்காகும் பார்.

(க - து) நயப்பு அயப்பொடி பலம் 4, வெடியுப்பு, பொரித்த வெங்காரம், நவாச்சாரம், கௌரிபாஷாணம், நண்டு ஓட்டுத்தூள் வகைக்குப் பலம் 2, இவைகளைக் கல்வத்திலிட்டு அரைத்துச் சீமை மூசையிலேனும், வஜ்ஜிர மூசையிலேனும் போட்டுக் கனதியான மண்ணோட்டால் மேல் மூடிச் சீலசெய்து காய்ந்தபின், கன்னான் உலையில்வைத்து நிரம்பக் கரியைப்போட்டு ஊதுக. இப்படி மூன்று முறை கரியைப் போட்டு ஊதியெடுக்க அயமானது உருகிக் களங்காக ஏற்படும்; எ - ம். (3)

அயத்தங்கச் சிந்தூரம்

343. பார்த்தகளங் கொன்று பகரு முயர்தங்கம்
சேர்த்துப் பலங்காலாய்ச் செம்மையுறத்—தீர்த்திடக்கேள்
நாயுருவி யுப்பெடுத்து நன்றே பலங்காலாய்ப்
பாயுருகப் பூநாகம் பற்று.

344. பற்றுப் பலமைந்து பாய்ச்சிக் கலுவத்தி
லுற்று நனியரைத்திங் கொன்ருகச்—சுற்றுவில
செய்து தனிவைத்துச் செப்புமா லம்பழுப்புக்
கொய்து படியிரண்டே கொள்.

345. கொள்ளுபெருஞ் சட்டியதிற் கோதிற் றழைபகிர்ந்து
விள்ளு மொருபாதி விட்டமுத்தித்—துள்ளும்
நடுவண் வில்லைவைத்து நாடுந் தழைமேல்
இடுவண் திரிவறட்டி யே.

346. ஏகன் பொருளை யிதயத்தி லெண்ணித்தீ
வேகப் புடமூன்ருய் விட்டெடுக்கச்—சோகத்
தினைமாற் றயத்தங்கச் செந்தூர மீதாந்
தனைமாற் றிளையிதற்கே தான்.

(க - து) அயக்களங்கு பலம் 1, தங்கம் பலம் $\frac{1}{4}$, இவைகளிரண்டையும் உருக்கி, இரும்பு உரலில் போட்டுக் கடப்பாரையால் சேதப்படாமல்

ஜாக்கிரதையாக இடித்துத் தூளாக்கிக் கல்வத்தில் போட்டு அதனுடன் நாயுருவி உப்பு கால்பலம் போட்டு அரைப்பதற்குத் திரவமாக, மோரில் சுத்திசெய்த பூநாகம் 5 - பலமிட்டு நன்ருய் அரைத்து 4, 5 வில்லைகளாகச் செய்து ரவியில் உலர்த்தி ஒவ்வொரு வில்லையையும் ஒரு அகன்ற மண் சட்டியில் பழுத்துலர்ந்த ஆவிலேயை ஒன்றிரண்டாக இடித்து, ஒருபடி போட்டு அதன்மீது வில்லையை வைத்து மேலே முன்போல் 1 - படி ஆவிலைப்பழுப்புச் சூரணம் போட்டு இரண்டு மூன்று சிறு வரட்டிகளைப் பிட்டுவைத்துத் தீமூட்டவும். புடம் ஆறின பின்னர், வில்லையை எடுத்துக் கல்வத்தில் போட்டு முன்னளவு நாயுருவி உப்புக் கூட்டி 5 - பலம் பூநாகத்தைக் கொஞ்சங் கொஞ்சமாகப் போட்டு அரைத்து வில்லைசெய்து முன்போல் ஆவிலைப் பழுப்புச் சூரணத்தில் புடமிடவும். இப்படி மூன்று புடமிட நல்ல சிந்தூரமாகும். இந்தச் சிந்தூரத்தில் தங்கம் அதிகஞ் சேரச்சேர குணவிசேஷமாகும். ஆனல், மூன்று புடத்தில் செந்தூரமாகாது. அயக்களங்கு எடைக்கு மூன்றிலொருபாகம் தங்கம் சேர்த்தால் 5 - புடத்திலும், அரைப்பாகம் சேர்த்தால் 6 - புடத்திலும், முக்கால் பாகஞ் சேர்த்தால் 8 - புடத்திலும், சம அளவாகச் சேர்த்தால் 40 - புடத்திலும் சிந்தூரமாகும்; எ - ம். (4)

வேறு முறை

347. பற்ற முறைகேள் பகரவிது வேருக
உற்ற வயந்தங்கம் ஊட்டுசமன்—நற்பேய்க்
கரும்பு பிழிச்சாற்றில் கான்றபூ நாகம்
விரும்பி யரைக்க விளம்பு.

348. விளம்புமெடை மூன்ருக மிக்கதன்மே லங்கித்
தளும்பச்செய் தேரயியற் ருக்க—வளமைக்
கடத்தி னிறைக் கடலுப்புக் காண
விடத்தி னடுவைத் தெரி.

349. எரிநான்கு சாமவரை யிவ்வணமே யேழு
புரிமுறையி லாகுமிது போற்ற—வுரிமைத்
தருந்திவ்ய செந்தூரஞ் சான்ருேர் மதிக்கும்
பெருந்திவ்ய நற்குணமாம் பேசு.

350. பேசுமிச் சிந்தூரம் பெற்ற குணங்கேட்கில்
தேசுறுநெய் யல்லதுதேன் சேர்த்துண்ண—மாசுற்ற

குன்மங் குளிர்சுரங்கள் குற்றநீ ரீளைமுதற்
றுன்ப மிலையென்றே சொல்.

(க - து) முன் முறையான் முடித்த அயக்களங்கு பலம் அரை, தங்கம் பலம் அரை இவ்விரண்டையும் ஒன்ருக உருக்கி வில்லையாக வைத்துக்கொண்டு அதன்பேரில் சுத்திசெய்த பூநாகத்தைப் பேய்க் கரும்புச் சாற்ருல் அரைத்து வில்லைக்கு மூன்றுமடங்கு எடை இழுக் கும்படியாகக் கவசம் செய்து வைத்துக்கொண்டு, ஒரு பானையில் 2 - படி தூள் செய்த சோற்றுப்பை போட்டு மத்தியில் முன் சித்தப் படுத்திய வில்லையை வைத்து அடுப்பின்மீது ஏற்றி நான்கு சாமம் முத்தீயாக எரித்து எடுக்கவும். மறுநாள் உள்ளிட்ட வில்லையை எடுத்துக் கவசம் நீக்கி முன்போல் பூநாகத்தைப் பேய்க்கரும்புச் சாற்றில் அரைத்துக் கவசம் செய்து உப்பின் மத்தியில் வைத்து முன்போல் எரிக்கவும். இங்ஙனம் 5, 7 முறை எரித்தெடுக்க வில்லை சிந்தூர மாகும். இவ்விரண்டு அயத்தங்க சிந்தூரங்களும் மிகச் சிறந்தவை; இது கல்பத்திற்கு நிகரானது. தினம் இருவேளை அரிசிஎடை பசுவின் நெய் அல்லது தேன் இவைகளில் கொடுத்துவரின் குன்மம், குளிர்சுரம், விஷப்பாண்டு, ஈளை முதலிய பல ரோகங்களையும் பரிகரிப்ப துடன் இரத்தத்தைப் பூரணமாய்ப் பெருகச்செய்து எவ்வித ரோகங்களையும் நெருங்க விடாமல் ரக்ஷிக்கும் பெரிய மருந்தென அனுபவத்தில் அறியத் தக்கது.

பத்தியம்: காலந் தவறுதலின்றி பிணிக்கேற்றபடி புளியைச் சேர்த் தும், நீக்கியும் இச்சாபத்தியங் கொள்ளல் எவ்விதத்தினும் நன்மை பயக்கும்; எ - ம். (5)

### பஞ்சபூதச் சிந்தூரம்

351. வீரரசச் செந்தூரம் வெய்யலிங்கம் தன்னோடு
பூரரச நேரளவாய்ப் போட்டைந்தும்—சாரவே
காதலித்துச் செய்மருந்து காணுஞ்சிந் தூரந்தான்
ஓதபஞ்ச சூதமா மொப்பு.

352. ஒப்புஞ் சரக்கதனை யோட்டில் பொடித்திட்டுச்
செப்புநெருஞ் சிச்சாறும் சேரவே—யப்பால்
முருங்கைப்பூச் சாறும் முலைப்பால் சமனைக்
கருதிச் சுறுக்காகக் காட்டு,

353. காட்டி யெடுத்தபின் காணவொரு வாரமே
ஆட்டிக் கலுவத்தே யாறவிட்டு—நீட்டுவாய்க்
குன்றி யெடைதேனில் கூறவே யைந்துநாள்
நன்றி தருமென்றே நாடு.

354. நாடும் பிடிப்பும் நவில்பக்க வாதமுடன்
சாடுங்குத் தல்வாய்வு சாராமல்—ஓடும்
துறக்கப் புளியும் தொடுமாத ரிச்சை
சிறக்கநற் பத்தியமாஞ் செப்பு.

(க - து) வீரம், இரசச்சிந்தூரம், இலிங்கம், பூரம், சூதம் வகைக்கு $\frac{1}{2}$-பலம் வீதம் கல்வத்தில் போட்டு அரைத்து ஒரு மண்ணோட்டில் போட்டுத் தீயின்பேரில் வைத்து முருங்கைப்பூரசம், செப்பு நெருஞ்சி இலைச்சாறு, மூலைப்பால் சமனளவாகக் கலந்து வைத்துக்கொண்டு, நான்கு சாமம் சுறுக்குக் கொடுத்து ஆறினபின், இரண்டொருநாள் உலரும்படி வைத்துக் கல்வத்திலிட்டு ஒரு வாரம் வரையில் தினம் 2, 3 - மணி நேரத்திற்குக் குறையாமல் அரைத்துவரச் சிந்தூரமாகும். இதனைப் பத்திரப்படுத்துக. இம் மருந்தில் தினம் இருவேளை காலை மாலை தேன், நெய் முதலிய அனுபானங்களில் அரைமுதல் ஒரு குன்றிமணிப்பிரமாணம் கொடுக்கப் பாரிசவாதம், கைகால் பிடிப்பு, சர்வாங்கவாயு, குடைச்சல், மேகரணம் முதலியவைகள் குணமாகும். பத்தியம்: புளி நீக்கி இச்சாபத்தியமாக இருக்க வேண்டும். இச் சிந்தூரத்தைத் தேன் விட்டு அரைத்து வைத்துக்கொள்வதுமுண்டு. இதற்குப் பஞ்சசூத மெழுகு என்று சொல்வர். எங்ஙனம் செய்துகொள்ளினும் குணமொன்றே. இச் சிந்தூரம்செய்து நாட்பட்டதாக இருப்பின் நல்லது. புதிதாக இருப்பின் சில தேகத்திற்கு வாயில் நீர் சுரப்பு உண்டாகும். உடனே அவிழ்தத்தை நிறுத்திவிட வேண்டும்; எ - ம். (6)

### ஆறுமுகச் சிந்தூரம்

355. சேர்க்கவே நல்விரும்பு சேரப் பலமெட்டு
பார்க்கவூ சிக்காந்தம் பாதியாம்—ஆர்க்க
விலிங்கம்பூ ரங்கெந்தி யின்னும்வீ ரந்தான்
சலிக்க விராகனெடை தந்து.

356. தந்தவா றுச்சரக்கைத் தள்ளிக் கலுவத்தே
விந்தையாஞ் சுன்னநீர் விட்டுநீ—யந்தமுடன்
ஆட்டிவில்லை செய்தே யருக்கன் தனிலுலர்த்தி
நீட்டு முழப்புடத்தி னின்று.

357. நின்றசிந் தூரம் நிலைக்கப் புளியங்காய்
நன்றும் பழரசமும் நாப்புளிக்கத்—தின்றுவிடும்
மாதுளங்க ளிச்சாறும் மாற்றியே யாட்டிப்பின்
வாதுபுரி யாதுபுட மாட்டு.

358. மாட்டி யெடுக்க மலருமே சிந்தூரம்
ஆட்டித் துகளாக்கி யாகுமிதை—ஊட்ட
வரைக்குன்றி நெய்தேனி லாற்றுநோய் கேட்கில்
உரைக்கக் குருவருளாம் உன்.

359. உன்னிதமாம் பித்தம் உதிக்கு மெரிச்சலுமே
சன்னி சுரங்கட்டி சாரிரத்தங்—குன்றி
வரும்பாண்டு சோகை வருத்துகுன்மத் தோடு
பெரும்பிடிப்பும் போக்குமாம் பேசு.

(க - து) நயப்பான அயப்பொடி பலம் - 8, நல்ல காந்தம் பலம் - 4, வீரம், பூரம், இலிங்கம், கெந்தகம் வகைக்கு விராகனெடை - 1 இவைகளைக் கல்வத்தில் போட்டுச் சுன்னநீரால் 12 - சாமம் அரைத்து வில்லை செய்து அகலில் இட்டுக் காய்ந்தபின் மேல் அகல்மூடிச் சீலைசெய்து காய வைத்து 30 - வறட்டியில் புடமிடவும். பின்னர் வில்லையை எடுத்துக் கல்வத்தில் போட்டுப் புளியங்காயை இடித்துப் பிழிந்த சாறு, எலுமிச்சம் பழச்சாறு, புளிப்பு மாதுளம்பழச் சாறு இவைகளால் ஒவ்வொன்றிலும் அரைத்து வில்லைசெய்து அகலிலிட்டு இரண்டு புடமிடவும். இப்படி முடிந்த சிந்தூரமானது உயர்தா முடையதாக இருக்கும். இதனில் $\frac{1}{4}$, $\frac{1}{2}$ குன்றிப் பிரமாணம் தேனிலேனும், நெய்யிலேனும் தினம் இருவேளை கொடுக்கப் பாண்டு, வயிற்றுவலி, எரிச்சல், தேகக்குத்தல், சோகை, குன்மம், ஜுரக் கட்டி, வாதரோகங்கள், கைகால் பிடிப்பு, மகோதரம் முதலியவைகள் குணமாகும்; எ - ம். (7)

வேறு

360. சீராரு மாறுமுக செந்தூர பாகமிது
செப்புதற் கெளிதாகுமோ
சீர்த்தியே ரசமைந்து பலமேழு காந்தமுஞ்
சேர்ப்பையொன் பதுகந்தியும்
பாராரு தூய்மைவெங் காரமே நிறையெட்டு
பகருமதி யுப்புநான்கு

பலமுடன் கொண்டயப் பொடிபன்னி ரண்டிவை
பாவையின் மூலிசாற்றால்
நேராரு விதமாட்டி வில்லைதட்டிப் பாண்டமதில்
நேருமம் மூலிமடலை
நிரப்பியே வில்லைவைத் தெழுசீலை மண்செய்து
நின்றெரித் தட்டசாமம்
நாரார் மருந்தினிது நன்கெடுத் தம்மூலி
நாட்டிமுன்போ லெரிவுசெய்
நவையற்ற சிந்தூர மாதுளந் துணர்வண்ண
நற்குன்றி எடையுண்ணுவாய்.

361. உண்ணவே வெடிசூலை பிடிசூலை யொடுகோழை
யுந்திவரு கின்றகயமு
முடலார் கிரந்திவகை தசபாக வாதமு
மூறுசெய் திடுதேகமாங்
கண்ணமர் பலவேறு வகைரணங் குட்டமுடன்
காணும்வெண் மேகமூடு
கண்டமா லைச்சோகை பலவேறு வகைபாண்டு
காட்டுமதி சாரவகையும்
நண்ணுமரை யாப்பண்ட வாதமொடு மண்டைநோய்
நாடுசிலை யொடுபவுத்ரம்
நாடாது குன்மவகை சுவாசகா சங்களொடு
நவமூல மேகீர்வகை
திண்ணமுறு பலரோக வகைதீர்ந்து தேகமே
செவ்வையாம் படிசெய்திடும்
தேவதா பெயர்கொண் டிலங்குசிந் தூரமிது
செய்துபார்த் திடவேண்டுமே.

(க - து) சூதம் பலம் 5, காந்தம் பலம் 7, கந்தகம் பலம் 9, வெங்காரம் பலம் 8, இந்துப்பு பலம் 4, அயப்பொடி பலம் 12, இவைகளைக் கல்வத்தில் போட்டுக் கற்றாழைச் சாற்றினால் 3 - நாள் அரைத்து வில்லை செய்து உலர்த்தி, ஒரு மட்பாண்டத்தில் கற்றாழை மடலின்மீதுள்ள தோலைச் சீவி உள்ளிருக்கும் சோற்றை மூன்று அங்குலம் கனதியாகப் பரப்பி அதன்மீது வில்லையை வைத்து, மேலும் முன்போல் கற்றாழைச் சோற்றைப் பரப்பி, மேல் சட்டிமூடிச் சீலைசெய்து 8 - ஜாமம் எரித்து எடுத்து மீண்டும் முன்போலரைத்து வில்லைசெய்து காயவைத்து எரித்தெடுக்க நல்ல செந்தூரமாகும். இதனைத் தக்க அனுபானங்களில்

½ - குன்றி வீதம் கொடுக்க வெடிசூலை, பிடிசூலை, ஈளை, க்ஷயம், கிரந்தி, வாதரோகங்கள், மேகரணம், குட்டம், வெண்குட்டம், கண்டமாலை, சோகை, பித்தப்பாண்டு, பலவித பேதி, அரையாப்பு, தலைநோய், கொடிப் பவுத்திரம், குன்மம், சுவாசகாசம், நவமூலம், நீர்ரோகங்கள் முதலிய எவற்றையும் பரிகரிக்கும். பத்தியம்: வியாதிக்குத் தக்கபடி புளி சேர்க்காமலும், புளி சேர்த்தும் இச்சா பத்தியமாக இருத்தல் நன்று. சிலர் கற்றாழைச் சோற்றைப் பரப்பி அதனிடையில்வைத் தெரிக்காமல் வெறும் வில்லையை வைத்து எரிப்பதுமுண்டு. அது சிறிது வீறுடைய மருந்தாகவிருக்கும். ஆதலால், கற்றாழைச் சோற்றில் வைத்தெரிப்பது எவ்விதத்திலும் சிறந்ததாகும். இன்னும் அம் மருந்திேனாடு சம்பந்தப்பட்டுள்ள கற்றாழைச் சாம்பலையும் கூட்டிச் சேர்த்து அரைத்துக் கொள்ளல் சாலச் சிறந்தது ; எ - ம். (8)

## அயச் சிந்தூரம்

362. இச்சை யயப்பொடியை இட்டுக்கா ரோட்டினில்
மெச்சுங்கோ வின்நீர் மிதக்கிட்டு—நச்சகற்றி
வட்டப் பழச்சாற்றை வார்த்துடன் மேல்மூடி
இட்டுப் பரிமலத்து ளிங்கு.

363. இங்கிரு பத்தோ டிருநாளும் நீகாத்துத்
தங்குந் திரிபலையின் சாறிட்டுப்—பொங்கமுடன்
ஆட்டி வில்லைதட்டி ஆகுமுழ மாமெருவில்
நாட்டி யெடுத்திடவே நன்று.

364. நன்றே புடமைந்து நாதாக்கள் கூறுமொழி
யென்று மனம்பொறுத்தே ஏற்கவரை—குன்றியள
வுண்ண மிகுந்தாதும் ஓத விரத்தமிகும்
திண்ண மிதுவென்றே தேர்.

(க - தி) ஐந்து பலம் அயத்தூளை ஒரு பீங்கான் பாத்திரத்தில் போட்டு மூழ்கக் கோநீர்விட்டு மூன்று நாள் வைத்து, நான்காவது நாள் கோநீரை வடித்தலம்பி நிரம்பப் பழச்சாறு விட்டு மேல் அகல் மூடி இரண்டொரு மண்சீலை செய்து வைத்துக்கொள்க. பூமியில் முழ ஆழமுள்ள சதுரமான குழிதோண்டி அதனில் பாதிக்குழி வரையில் குதிரை லத்தியைப்போட்டு அழுத்தி, அதன் பேரில் முன் சித்தப் படுத்திய கோப்பையை வைத்து மேலும் குழி நிரம்பக் குதிரை லத்

தியைப் போட்டு அழுத்தி, மேல் மண்மேடிடும்படியாகச் செய்க. இங்ஙனம் மூன்று வாரம் வைத்தெடுத்து அயத்தூளைக் கல்வத்திலிட்டு திரிபலையின் கியாழத்தினுல் 3 - நாள் 12 - சாமம் நன்கு அரைத்து வில்லை செய்து காய்ந்த பின் அகலில் அடக்கிச் சீலைசெய்து உலர்ந்த பின் புளியம்புராணி காட்டெரு கூட்டி அரை கஜக் குழிப்புட மிடவும். இங்ஙனம் 5 - புடமிட்டெடுத்துக் கல்வத்திலிட் டரைத்து, சீசாவில் வைக்கவும். தேக திடத்திற்குத் தக்க வாறு குன்றியளவேனும் அரைகுன்றி யளவேனும் தேன், நெய் முதலிய அனுபானங்களில் தினம் இருபோது கொடுத்துவர இரத்த விருத்தியையும், நல்ல தேஜசும் உண்டாகும். புளி தள்ளி இச்சாபத்தியமாக இருத்தல் நன்று ; எ - ம். (9)

## பாலசஞ்சீவி சிந்தூரம்

365. சிந்தூர மேகோரின் செய்பால சஞ்சீவி
உந்தூரக் கால்பலமா மொவ்வொன்று—நந்தூரப்
பாணிரசச் சிந்தூரம் பண்பார்லிங் கம்பூரம்
பூணித்த நேர்வாளம் பூ.

366. பூவொன் றுளசங்கன் பொன்னேர் தழையரைத்துத்
தாவொன் றரைபலமே தான்சேர்த்து—மாவொன்
றிடநான்கு சாம மினிதாட்டி வில்லைத்
தடநான்கி னங்குலமே தான்.

367. தாண மிரவி தனிலுலர்த்தி யேதணலில்
தானும் படிவாட்டிச் சார்குணமே—தானும்
படிகாண நன்கரைத்துப் பத்திரஞ்செய் நோய்கள்
படிகாணற் கில்லை பகர்.

368. பகரும் புவிமஞ்சர் பற்றிய நோய்நீங்க
நிகரும் மருந்திதனை நித்தஞ்—சுகமாக
நெல்லளவி லுண்ண நிலைத்த பலமாந்தம்
இல்லையென வோடிவிடும் எண்.

(க - து) இரசச்சிந்தூரம், இலிங்கம், பூரம், சுத்தி செய்த நேர் வாளம் வகைக்குப் பலம் - $\frac{1}{4}$ கல்வத்திலிட்டு நன்ருய் அரைத்து அதனுடன் நற்சங்கன் இலையை அரைத்து $1\frac{1}{2}$ - பலம் கூட்டி மெழுகு பதம்வர அரைத்து வில்லைசெய்து காய்ந்தபின் கரிநெருப்பின்மீது ஒரு புது மண் ணோட்டை வைத்து அதன்மீது வில்லையைப் புதையாது புரட்டி புரட்டி கொடுத்துக் கொண்டுவருக. சிந்தூரநிறம் வரும்போது எடுத்து ஆறவிட்டுக்

கல்வத்தில் போட்டு நன்ருய் அரைத்துச் சீசாவிலிடுக. இதனைக் குழந்தைகளுக்கு அரிசிப் பிரமாணமும், பெரியவர்களுக்கு அரைகுன்றிப் பிரமாணமும் தேன், நெய் முதலிய அனுபானங்களில் தினம் இருவேளை கொடுக்க வாய்வு சம்பந்தமான வலி, பாரிசவாய்வு, சுவாசகாசம், விடாசுரம், ஜன்னி முதலியவை குணமாகும்; எ - ம். (10)

## இலிங்கச் சிந்தூரம்

369. காணரிய வில்வக் கனியி லிலிங்கமது
தோணப் பலமிட்டுத் தோதாக—வேணமட்டும்
சீலைப் புரிந்துமுப்பான் சிரெருவி லிட்டக்கால்
வேலையாம் பார்க்க விரும்பு.

370. விரும்பும் மருந்திதினல் வீறிட்ட பித்தம்
பொருமுஞ் சுரமயக்கம் பூவில்—வருத்தமுற
வாட்டு முளைச்சல் வகைக்கெட் டொழிந்திடவே
காட்டு மருந்தாகுங் காண்.

(க - து) வில்வக் கனியை ஓடு நீக்கி நீர் சுண்ட நிழலில் உலர்த்திச் சுமார் உரித்த தேங்காய்ப் பிரமாணம் திரட்டி, மத்தியில் ஒரு பலம் இலிங்கத்தைவைத்து எழெட்டு மண்சீலை செய்து இரவியில் காயவைத்து, முப்பது எருவில் புடமிடவும். இதனை ஒருநாள்வரையிலும் சாங்க சீதளமாகும்பொருட்டு விட்டுவைத்து மறுநாள் சீலையை நீக்கி இலிங்கத்தைக் கல்வத்தில் போட்டு நன்ருய் அரைத்துக் குப்பியிலிடுக. வேளைக்கு கால் அரை குன்றிப்பிரமாணம் மூன்றுநாள் காலை, மாலை தேன் இஞ்சிசுரசம் முதலிய அனுபானங்களில் கொடுக்க எத்தகைய பித்த சுரங்களும் நிவர்த்தியாகும்; எ - ம்.

குறிப்பு:—சிலர், சிற்றண்ட வெண்கருவையும் பழாசத்தையும் சமனெடையாகக் கலந்து வில்வப்பழத்தோடு சேர்த்துப் பிசைந்து விதை முதலியவற்றை நீக்கிக் குழம்பு பதத்தில் இலிங்கத்திற்கு 4 - சாமம் சுறுக்குக் கொடுத்தும், வேறுசிலர் வில்வப்பழத்தை ஒட்டுடன் நறுக்கி நிழலி லுலர்த்திக் குழித்தைலம் இறக்கி அதனை இலிங்கத்திற்கு, நான்குசாமம் சுறுக்கிட்டும், கல்வத்திலிட்டு அரைத்துச் சிந்தூரமாக வைத்துக்கொண்டு உபயோகப் படுத்துவார்கள். எங்ஙனமாயினும் இத்தகைய இலிங்க சிந்தூரங்கள் சுரரோகங்களைப் பரிசளிக்கத்தக்க நல்ல அவிழ்தமென அனுபவத்தில் அறியப்பட்டன. (11)

## மேகசிந்தாமணிச் சிந்தூரம்

371. தப்பில்லாக் காந்தமுடன் தங்து பிரவாளம்
செப்பும பரிகெந்தி சேருமெடை—ஒப்ப
விருகழஞ்சோ டப்பிரகர மிஃதுடனே சூதம்
கருதக் கழஞ்சஞ்சு கண்டு.

372. கண்ட விவையாறும் கல்வத்தே யிட்டபின்
தண்டு குமரித் தருஞ்சாற்றைக்—கொண்டு
பதமா யரைத்தபின் பாங்கா மதனை
இதமாகக் குப்பியிலே யிட்டு.

373. இட்டநற் குப்பி யிடுக்கிநடு வாலுகத்தில்
கட்டுறவே நாழியெட்டு காணவெரி—திட்டமுடன்
ஆறவிட்டுக் கொண்டதனை யம்மூலி சாறுகொண்டு
கூறரைப்பு நாட்டக் குறித்து.

374. குறித்த மருந்ததனைக் கூறவொரு வில்லை
தெறிப்பாகச் செய்துலர்த்தித் தீயில்—நெறியாய்ப்
புடமூன்று போடப் புகழ்பெறுஞ் செந்தூரம்
திடப்படுமே கத்திற்காந் தேர்.

375. தேருஞ்சிந் தூரம் தெரிவிக்கும் மேகநீர்
நேரும் பலக்குறைவு நீரடுத்துச்—சேரும்
மதுமேகம் தாகம் மருவுமனல் தீரச்
சதுராயுண் குன்றிடையே தான்.

(க - து) காந்தம், பவழம், தங்கம், கெந்தி இவைகள் வகைக்குக் கழஞ்சு-2, அப்பிரகச் சிந்தூரம் சூதம் வகைக்குக் கழஞ்சு-5 இவைகளுள் முதலில் கல்வத்தில் சூதத்துடன் தங்கரேக்கையிட்டு நன்றாய் அரைத்துச் சூதத்துடன் இலேசித்த தறுவாயில் கெந்தியைச் சேர்த்து அரைக்கக் கறுப்பாக இருக்கும். பின்னர் மற்றவற்றை ஒன்றன்பின் ஒன்றாய்ச் சேர்த்துக் குமரிச்சாறுவிட்டு நான்கு சாமம் அரைத்து, கல்வத்தோடே காயவைத்துச் சேதமின்றிச் சுரண்டி எழு சீலைசெய்த குப்பியிலிட்டு, வாயைப் பலப்பக்கல்லால் அடைத்துச் சீலைசெய்து உலர்த்தி சித்திரத்தில் கூறப்பட்டவிதமாக ஒரு மட்கடத்தில் இரண்டு மூன்று விரற்கடை மணல்கொட்டி அதன்மீது பருந்திட்கி குப்பியை வைத்துக் கழுத்தளவு மணல் நிரப்பி அடுப்பின்மீது எற்றி நான்கு சாமம் முத்தீயாக எரிக்கவும். பின்னர் ஆறவிட்டு, குப்பியை யுடைத்து, உள்ளிருக்கும் மருந்தை யெல்லாம் சேதப்படாமல் எடுத்துக் கல்வத்திலிட்டு

மீண்டும் குமரிச்சாற்ருல் நான்குசாமம் நன்ருய் அரைத்து வில்லைசெய்து காயவைத்து, அகலில் அடக்கி, மேல் அகல்மூடிச் சீலைசெய்து 10, 12- எருவில் புடமிடவும். தங்கச்சாயல் இருப்பின் இரண்டொரு புடம் இட்டுக் கொள்க. எங்ஙனமாயினும் மூன்று புடத்தில் மருந்து நன்ருய் முடியும். இதனில் குன்றிப் பிரமாணம் தினம் இருவேளை நெய், வெண்ணெய் முதலிய அனுபானங்களில் 10, 20- நாள் கொள்ள நீரிலுள்ள இனிப்பு, மேக அழலை, தாகம், வெகு மூத்திரம், சக்திக்குறைவு முதலியவைகள் குணமாகும். பத்தியம்: நல்ல ஆகாரங்களை உண்ணல் வேண்டும்; போகம் கூடாது. இந்த மேகசிந்தாமணி சிந்தூரத்தில் சேர்க்கவேண்டிய அப்பிரகச் செந்தூரம் உயர்தரமாக முடிவுபெற்றிருத்தல் ஆவசியகம். ஆதலான், அது அடுத்தமுறையில் குறிப்பிட்டிருக்கின்றது. அதனைக் கிரமமாகச்செய்து உபயோகிப்பாரேல் எல்லா விதத்திலும் எல்லோரும் நற்பயனை அடைவர்; எ - ம். (12)

## வாலுகா யந்திரம்




சித்திர விளக்கம்

1. மட்கடம்
2. மணல்
3. மருந்திட்ட குப்பி

### அப்பிரக சிந்தூரம்

அகவற்பா

376. ஐங்கர னடியை யன்பாய்ப் போற்றிச்
சங்கரன் றன்னைச் சாலத் துதித்துச்

சீரப் பிரேகச் சிந்தூ ரங்கேள்
கோரப் பலந்தான் கொள்ளே யெட்டு
பனங்கள் ளதனுட் பதமிட வெண்ணித்
தினமா மைந்து சிறக்க இட்டுக்
கன்ன னுலேயில் கறுக்கா யூதி
நன்ருய்ப் புளித்த நலமாந் தயிரில்
மூன்றுநாள் வரையில் மூழ்கப் போட்டு
நான்காம் நாளில் நலம்பெறச் சாக்கில்
முடிச்சுக் கட்டி முன்னீர் விட்டுப்
பிடித்துப் பிசையப் பிறங்குஞ் சத்து
நவநீ தந்தான் நனிபெறக் கொண்டு
குவலயந் தன்னில் கொள்ளும் மூலி
ஈறுள் ளிச்சா றிட்டே யரைத்துக்
கூறும் வில்லே குறிப்பாய்ப் பலவே
செய்தே யதனேச் செங்கதி ரோன்பால்
பைய வுலர்த்திப் பண்பா யகவில்
அடக்கஞ் செய்தே யணேமண் ணிட்டுப்
புடமே யிடுவீர் புகல்கஜ எருவில்
மீண்டுங் குமரி மீளுஞ் சாற்றில்
தூண்டு மாலந் துளிராம் விழுது
கொடுத்த ரசமும் கொள்ளுந் தேசி
அடுத்த ரசமும் ஆன மஞ்சள்
கரிப்பான் சாறும் கருதி யரைமின்
சரிவரப் புடமே சாற்று முன்போல்
தனித்தனிப் போடத் தருநிறஞ் சிவப்பே
இனிது பயக்கும் இதுவே யுண்மை
குன்றி யளவாம் குறிக்கும் நாளே
நன்றி பயக்கும் நாளிரு போது
வார முண்ண வருநீர் மேகம்
சாரு மதுவும் சத்துதக் கேடும்
தாக மடங்கும் தடமுங் கண்டீர்
பாக மிதுவே பத்திய மில்லே
இப்படி மும்முறை யேற்கு நாளில்
செப்பும் நோய்கள் தீர்த்திடுந் தானே.

(க - து) ஒரு படி பனங்கள்ளில் ஒரு சேர் கிருஷ்ண அப்பிரகத்தை 5 - நாள் ஊறப்போட்டு, எடுத்துக் கன்னனுலேயில் நன்ருய்ப் பழுக்கக் காய்ச்சிப் புளித்த தயிரில் 3 - நாள் ஊறப்போட்டுக் கழுவியெடுத்து, கம்பளத்திலாவது கோணியிலாவது முடிச்சுக்கட்டித் தயிர்

சலம் விட்டுப் பிசைந்து பிசைந்து, அழுத்தித் தேய்க்க வழுவழுப் பாக உள் முடிந்த அப்பிரகம் வெளிப்படும்; இதனைச் சேதப்படாமல் குடவான சட்டியில் போட்டுத் தயிரின் தெளிவு சலம் விட்டுக் கலக்கி ஒருநாள் முழுவதும் அசையாமல் வைத்திருக்க, அப்பிரகத் தூளெல் லாம் கீழிறங்கிச் சலம் தெளிந்து நிற்கும். இந்தச் சலத்தை அசை யாமல் சாய்த்து இரவியில் வைக்க வெண்ணெய்போ லிருக்கும். இத னையே அப்பிரக நவநீதம் என்று கூறுவர். இதனை, வெங்காயச்சாறு விட்டு 3 - சாமம் நன்ருய் அரைத்து சிறு வில்லைகளாகத் தட்டி இரவி யில் காயவைத்து, அகலில் பரப்பி, மேல் அகல் மூடி மண்சீலை செய்து காய்ந்தபின் 50 - எருவில் புடமிடவும். மீண்டும், இதனையே குமரிச்சாறு, ஆலம்விழுதுச்சாறு, பழச்சாறு, பொற்றிலைக் கையாந்தகரைச் சாறு முதலியவைகளால் ஒவ்வொரு புடம் போட தளுக்கில்லாமல் சிந்தூர மாகும். ஒருகால் அரைப்பின் குறைவாலாவது, புடத்தின் மென்மையா லாவது தளுக்கிருந்தால், பொற்றிலைக் கையாந்தகரைச் சாற்ருல் இரண் டொரு புடம் அதிகமாகப் போட்டுக் கொள்ளவேண்டியது ஆவசியக மாகும்.

இதனில், குன்றிப்பிரமாணம் தினம் இருவேளை தேக சுபாவத் திற்கு எற்றவாறு தக்க அனுபானங்களில் கொடுத்துவர 7 - அல்லது 10 - நாளில் தாகம், அதிநீர், பலஈனம் முதலிய குணங்களையுடைய மதுமேகம் குணமாகும். பத்தியம்: ஸ்திரீபோகம், லாகிரி, மதுர முடைய வஸ்துக்கள் நீக்கி மற்றவற்றைப் புசிக்கலாம். இதனை மேக சிந்தாமணிச் சிந்தூரத்தில் சேர்த்துச் செய்தல் பெரும்பான்மை விசேட நன்மையைப் பயக்கும்; எ - ம். (13)

ஷட்குணச் சிந்தூரம்

377. நாற்ற முடன்சூதம் நாக மிருவங்கம்
ஏற்ற பலமிரண் டேந்திழையே—சாற்றக்கேள்
எட்டுபலங் காந்தம் எடுத்தே யொருமிக்க
யிட்டுக் கலுவத்தே யிங்கு.

378. இங்குக் குமரி யினிதாங் கரிசாலை
தங்குந் தனிச்சாற்றில் தானரைத்து—பொங்கா
தடைதட்டி நன்குலர்த்தி யாரத்தீ மூட்டில்
தடையிலையாஞ் சிந்தூரந் தான்.

379. தானாகுஞ் சிந்தூரம் தாழ்வின்றிக் காற்குன்றி
கோனா திருநேரம் கொண்டிடவே—வீணாய்
வரும்பேதி வெட்டை வழுமூலம் மேகம்
பெரும்பா டகன்றிடுமாம் பேசு.

(க - து) கெந்தகம், ரசம், நாகம், வெள்வங்கம், கருவங்கம் இவைகள் வகைக்குப் பலம் இரண்டாகவும், காந்தம் பலம் எட்டாகவும் கல்வத்தி விட்டு குமரிச்சாறு, பொற்றிலைக் கையாந்தகரைச்சாறு இவைகளால் ஒவ் வொன்றிலும் இரண்டுநா ளரைத்து அகல வில்லையாகச்செய்து உலர்த்திச் சிந்தூர சட்டியிலிட்டு மேல் மூடிச் சீலைசெய்து காய்ந்தபின் முத்தீயாகப் பன்னிரண்டு சாமம் குறைவாரது எரித்தெடுக்க நல்ல சிந்தூரமாகும். இதனில் கால் குன்றிப் பிரமாணம் தினம் இருவேளை நெய், தேன் முதலிய வைகளில் கொடுத்துவரின் பேதி, கிராணி, வெட்டை, மூலம், மேக விரணம், பெரும்பாடு முதலியவைகள் குணமாகும் ; எ - ம். (14)

காடிகாரச் சிந்தூரம்

380. சூதத்தின் சிந்தூரம் சொல்ல விரண்டாகும்
ஏதமிலா லிங்க மெடையெட்டுக்—காதலுடன்
காடிக்கா ரம்மொன்று காட்டி யரைத்திடவே
சாடிக்கும் பேதியிலே சார்.

381. சாரவொரு குன்றி சமனாங் கருப்பூரம்
சேர வுறவாக்கித் தேனிலிடும்—நேரமதில்
வாந்தியுடன் பேதி வயிற்றுப்பல் சீதளமும்
சாந்தியா மென்றுபறை சாற்று.

(க - து) இரசச் சிந்தூரம் இரண்டு கழஞ்சு, சுத்திசெய்த லிங்கம் எட்டுக் கழஞ்சு, வெள்ளைக் காடிக்காரம் ஒரு கழஞ்சு இவைகளை எல்லாம் கல்வத்திலிட்டு இரண்டுமணி நேரம் அரைத்து ரவியில் ஒரு சாமம் வைக்க வும். இப்படி 7 - முறை அரைத்தெடுத்த பின்னர் சீசாவில் அடைத்து வைக்கவும். மூன்றுநாளைக் கொருதடவை சீசாவில் வாயடைப்பைத் திறந்து இரண்டு மூன்று நிமிஷம் மருந்தின் உள்ளாவி வெளியாகும்படி விட்டு மீண்டும் அடைத்திடுக. இப்படி ஒரு மாதம் வைத்தெடுத்த சிந் தூரம் தேவாமிர்தத்திற்கு ஒப்பானதாகும். வாந்திபேதிக்கு ஒரு குன்றி யெடை சிந்தூரத்துடன் சமனெடை கர்ப்பூரஞ் சேர்த்துத் தேனில்

கொடுக்கவும். இரண்டுமணி நேரத்திற்குள் வாந்தியாய்விடின் மீண்டும் கொடுக்கவும். இங்ஙனம் கொடுத்த மருந்து இரண்டுமணி நேரம் உள் தங்குமாயின் பேதியையும் சீதளத்தையும் திருவருளால் குணமாக்கும் என்பது திண்ணம்; எ-ம். (15)

## சிங்கி சிந்தூரம்

### கலி விருத்தம்

382. ஓங்கு சிங்கியு முற்றன பேதியும்
தாங்கு வைமழை தண்ணீர்விட் டாட்டியே
பாங்கெரு வைந்திற் பற்றிப் புடமிட
வாங்கு சிந்தூர வன்மையைச் சொல்லவோ.

383. வன்மை தாதுவ லுத்துடற் கட்டிடும்
புன்மை மேகமும் புண்புரை நோய்களும்
இன்மை யேவாத பித்தமுன் மத்தமும்
நன்மை யாவரை நாடரைக் குன்றியே.

(க-து) மிருதார்சிங்கி பலம் 1, அன்னபேதி பலம் 1 இவ்வையிரண்டையும் கல்வத்திலிட்டு மழைச் சலத்தில் 10-சாமம் அரைத்து வில்லைதட்டிக் காயவைத்து அகலிலடக்கி மேல் அகல் மூடிச் சீலைசெய்து காய்ந்தபின் 20-பலம் கொண்ட வறட்டியில் புடமிடச் சிந்தூரமாகும்.

இதனில் வேளைக்கு அரைகுன்றிப் பிரமாணம் தினம் இருவேளை தேன், நெய் முதலிய அனுபானங்களில் கொடுத்துவரத் தாது வலுக்கும். இன்னும் மேக விரணங்கள், வாதபித்த ரோகங்கள் குணமாகும்; எ-ம்.(16)

## அன்னபேதிச் சிந்தூரம்

384. நல்ல வேளை நவிலன்ன பேதியும்
சொல்ல வேசமன் தொக்க வரைத்திடு
வல்ல தாங்கல யத்திடு வைபுடம்
தொல்லை யில்லைசிந் தூரஞ்சொல் குன்றியே.

385. குன்றி நேரரைக் கொள்ளிரு நேரமு
நன்று கொள்ள நலிசுரஞ் சோகையும்
துன்னு காமாலை சொற்பெரும் பாடது
மின்று பித்தமு மேகிடு முண்மையே.

(க - து) ஒரு பலம் நல்லவேளை யிலையையும் அதற்குச் சமன் அன்ன பேதியையுங் கூட்டி நன்றாய் அரைத்து ஒரு சிறு குடுவையில் போட்டு வாய் மூடிச் சீலைசெய்து காய்ந்தபின் 15 - வறட்டியில் புடமிடச் சிந்தூரமாகும். இதனில், அரைகுன்றி தினம் இருவேளை தேக சுபாவத்திற்குத் தக்கபடி நெய், தேன் முதலிய அனுபானங்களில் கொடுக்கச் சுரம், சோகை, பாண்டு, காமாலை, பெரும்பாடு பித்த சம்பந்தமான பல ரோகங்கள் தீரும்; எ - ம். (17)

இரசச் சிந்தூரம்

386. நெல்லி கெந்தி நிறுத்தரை வீசையே
வெல்ல கம்மாறு வெற்றிலைச் சாறதால்
கல்வத் திட்டரை காண்பத்து நாளெனச்
சொல்லக் கட்பறை யிற்பாதி சொட்டுமே.

ஸீதாராம ஆயுர்வேத ஔஷதசாலை.

387. சொட்டியே பள்ள மிட்டதிற் சூதமே
நட்ட மின்றி நவிலப்ப லம்பத்தை
இட்டு கெந்திமே லிறுக வழுத்தியே
தட்டு மூடிப்பின் னேர்தந்திச் சூடுமே.

388. சூடி யேமணற் ரேண்டியிற் புக்கிட
நாடி பன்னிரு சாமமு நன்றெரி
மூடிச் சிந்தூர முண்ண ஜனிசுரம்
சாடி யேரணந் தப்பிலை தீருமே.

(க - து) அரைவீசைக் கந்தகத்தைக் கல்வத்திலிட்டுக் கறுப்புக் கம்மாறு வெற்றிலைச்சாறு விட்டுப் பத்து நாளரைத்து, கள்ளுக்கடையில் அளவுக்காக உபயோகப்படுத்துகின்ற குடுவை (மொந்தை) ஒன்றில் முக்கால்பாகம் கந்தகத்தைப் போட்டு இடையில் பள்ளம் செய்து அதனில் 10 - பலம் சூதத்தையிட்டு மற்ற மிகுதி கந்தகத்தை அடை யாகச் செய்து மேலிட்டு மெதுவாக அழுத்திக் குடுவையின் வாய்க்குப் பொருத்தமான அகல்மூடிச் சீலைசெய்து சிறு கம்பியால் வரிந்துக்கட்டிக் குடுவை முழுவதும் 7 - சீலைசெய்து காயவைத்து மறுபக்கத்தில் குறிப்பிட்ட சித்திரத்தின்படி ஒரு பெருஞ் சட்டியில் மூன்று அங்குலம் மணல் பரப்பி அதனிடையில் குடுவையை வைத்து மறைய மணலிட்டு வாய்மூடிச் சீலை செய்து இரண்டு பகல் ஒரு இரவு முத்தீயாக எரித்து, இரண்டுநாள் ஆற விட்டுக் குடுவையிலிட்ட மருந்தைப் பார்க்க இரசகெந்தகமானது குடுவை யின் பக்கங்களிலும் மேல்பாகத்திலும் சில சமயம் மேல்ஏறி உருகிச் செந்தூரமாக அடியில் விழுந்திருக்கும். இதனைப் பத்திரமாக மண் சம் பந்தமில்லாது பெயர்த்தெடுத்துக் கல்வத்திலிட்டு அரைத்து வைத்துக்

கொள்க. இதனில், கால், அரைக்கால் குன்றியெடை நெய், தேன் முதலிய அனுபானங்களில் தினம் இருவேளை கொடுக்க மேகசுரம், சந்நி, வாதப் பிடிப்பு, மேகாணம் முதலிய பலரோகங்கள் குணமாகும்; எ - ம். (18)

## வாலுகா யந்திரம்

வேறு




### சித்திர விளக்கம்

1. பெருஞ்சட்டி
2. மருந்திட்டுச் சீலைசெய்த குடுவை
3. குடுவை மறைய மணல் நிரப்பியது

### காளமேக நாராயண சிங்தூரம்

389. வெங்காரம் சீனம் வெடிகறி யுப்புடனே
மங்காத பூநீறு மன்னுகெந்தி—சிங்காக்
கடனுரை யோரிடையாய் கண்டுபனி நீரில்
இடப்பெருகுங் காரநீர் இங்கு.

390. இங்கதனை யப்படியே ஏற்றுச் சமாதிவைத்
தங்க ணடைத்துக்கொள் ளன்பாகப்—பொங்குமுயர்
கந்திலிங்கம் தாரம் கருதிரசம் மண்ணுசிலை
சந்தமுறக் கொண்டிடுவாய் தான்.

391. தானே முறையாகச் சாற்றவி ராகனெனை
மானே புனிரண்டு வார்பத்தைந்—தேனே

பதுமுப் பதுநான்கு பார்த்திடசீ கொண்டே
மதுகைபெற பின்கேள் வழி.

392. வழியான முன்நீரால் வாழநாற் சாமம்
கழிய வரைத்தபின் கண்டு—செழியச்
சிறுகண் குடுவை செறியமணல் வைத்தா
றிரண்டுசா மங்க ளெரி.

393. எரித்தவிதே மேலோர் இயம்புபெரு சீரின்
தரித்தவுயர் சிந்தூரம் தானே—விரிகாள
மேகநா ராயணப்பேர் மேன்மையுறக் கொண்டதென
நீகருத ரோகமிலே நேர்.

394. நேரக்கா லோரரையே நீட்டசீசெங் குன்றிநிகர்
கோரச்சி லேத்துமம் கூட்டொழியும்—சேரும்
வலிகுன்மம் சந்நிசுரம் வாதமுடன்
பொலியா திதன்முன்னே போற்று.

(க - து) வெங்காரம், படிகாரம், வெடியுப்பு, கரியுப்பு, நூசீர், கெந்தி, கடல்நுரை வகைக்குப் பலம் 1, இவை தம்மைப் பொடிசெய்து ஒரு பீங்கானில் போட்டு பனிசலத்தையேனும், சிறு நீரையேனும் விட்டுக் குழம்பு பதமாகக் கரைத்து வாய்மூடிச் சீலைசெய்து சமாதியில் 21 - நாள் வைத்தெடுத்துத் தெளிக்துள்ள நீரை சீசாவில் வடித்துக்கொள்க. இதற்கே "காரநீர்" என்று கூறுவர்.

கந்தகம் 12, இலிங்கம் 15, அரிதாரம் 10, சூதம் 30, மனோசிலை 4 ஆகிய இவற்றை விராகனெடையாகக் கல்வத்திலிட்டு நன்றாய் அரைத்து முன் சித்தப் படுத்தியுள்ள காரநீர் விட்டு நான்கு ஜாமத்திற்குக் குறையாமல் அரைத்துலர்த்தி எண்ணெய் குடுவை என்று வழங்கும் சிறு வாயை யுடைய குடுவை வொன்றில் போட்டு வாய்க்குப் பொருத்தமான வட்ட மான மண்ஞோட்டைமூடிச் சீலைசெய்து பின்னர் குடுவை முழுவதும் சூழ 4, 5 - சீலை வலுவாகச் செய்துலர்த்தி முற்கூறிய வண்ணம் வாலுகா இயந்திரத்திலிட்டு 12 - சாமம் எரித்து சாங்க சீதளமாக ஆறவிட்டுக் குடுவையிலிட்ட மருந்தைப் பார்க்க முன்னிட்ட சரக்குகள் யாவும் உருகி மேலேறிச் சிவந்து மேலுங் கீழுமாக உருகி நிற்கும். இவைகளைக் கல்வத்திலிட்டு அரைக்க முருக்கம்பூ வர்ணமாகத் தோற்றும். இதனைச் சீசாவில் பத்திரப்படுத்துக; எ - ம். (19)

தூதுளை, கண்டங்கத்திரி, ஆடாதோடை இவற்றை ஓர் நிறையாய் இடித்துப் பிட்டவித்துப் பிழிந்தெடுத்த ஒரு பலம் சாற்றில் ஒரு விராகனெடைத் தேனும், அரைகுன்றி எடை செந்தூரமும் கலந்து தினம் இருவேளை 15 - நாள் கொடுக்க கபசம்பந்தமான மந்தாரகாசம், இறைப்பு, ஈளை, எலிகடியினு லுண்டான இருமல், ஜன்னி, மூர்ச்சை யாவும் குணமாகும்.

திப்பிலியை வெதுப்பி பொடித்த திரிகடி பிரமாணச் சூரணத் துடன் அரைக்குன்றிஎடை சிந்தூரம் சேர்த்து, தேன்விட்டு மத்தித்துத் தினம் இருவேளை 15 - நாள் உட்கொள்ள சூலை, குட்டம், விரணம், கடிவிஷம், அரையாப்பு, புத்து, பீனிசம், நெஞ்சுநோய், காதடைப்பு, மாரடைப்பு முதலியவைகள் தீரும்.

வெள்ளுள்ளித் தைலத்தில் அரைக்குன்றி எடை தினம் இருவேளை 10 - நாள் உட்கொள்ள வாதரோகங்கள் வாதசீதளத்தினு லுண்டான நரம்பு சம்பந்த வலி மூர்ச்சைகள், பித்த சீதளத்தினு லுண்டான சந்நி மூர்ச்சைகள் தீரும்.

நெற்பொரி, அசமதாகம், சுக்கு, மிளகு இவை தம்மை வெதுப்பிப் பொடித்த திரிகடிப்பிரமாணம் சூரணத்துடன் அரைக்குன்றிஎடை சிந்தூ ரம் சேர்த்து முருங்கப்பட்டைசுரசம் சேர்த்துக் கலக்கிச் சாப்பிட சன்னி வாதம், பக்கவாதம், சர்வாங்கவாதம், தோள்வாதம், எரிவாதம், உதிர வாதம், நடுக்குவாதம், பிடிவாதம், முடக்குவாதம் எனக் காரணப் பெயர்களை இடுகுறியாகப் பெற்ற சகலவித வாயுக்களும் குணமாகும். நிலவாகைச் சாற்றில் அரைக்குன்றிஎடை சிந்தூரம் சேர்த்து ஒன்றைவிட்டொருநாள் தினம் ஒரு வேளையாகக் கொள்ள கர்ப்ப விப்புருதி, மடுவிப்புருதி, விலா விப்புருதி, உழைமாந்தம், பக்கவாயு, அண்டவாயு, கழல்வாதம், தொடை வாதம், இடிசூலை, பக்கசூலை, வாதசூலை, யோனிசூலை, நாபிசூலை, கிருமிசூலை முதலான வியாதிகள் தீரும். மற்ற வியாதிகளுக்கும் சமயோசிதமாக ரோகத்தின் வன்மை மென்மைக் கேற்றவாறு பொருத்தமான கியாழம், சூரணம் முதலியவற்றை அனுபானம் செய்துகொடுக்க அளவற்ற நற்பலனை யுண்டாக்கும்.

### அயச் சிந்தூரம்

395. சேற வயத்தூளைத் தேசிகனி சாறதனில்
ஊற வலம்பிமண் ணேட்டதனில்—ஏறவிட்டுத்
தென்ன மரப்பழுப்பின் தேர்மட்டை கொண்டுநீ
இன்னலற வேவறுக்க இங்கு.

396. இங்காகுஞ் சிந்தூரம் ஈடேற உட்கொள்ளின்
அங்க மதிலிரத்தம் ஆர்ப்பரிக்கும்—தங்காதே
பாண்டு பெருஞ்சோபை பார்வைகெடும் காமாலை
ஈண்டிரா தென்றே யியம்பு.

(க - து) வேண்டிய அயத்தூளைப் பழச்சாற்றில் ஓரிரவு ஊறப் போட்டு அரைத்து அலம்பி ஒரு அகண்ட மண்ணோட்டிவிட்டுத் தென்னம் மட்டை பழுத்ததாகக் கொண்டுவந்து துடுப்புப்போல் தட்டி அதனால் வறுக்க நல்ல சிவப்பான சிந்தூரமாகும். இதனைத் தக்க அனுபானங்களில் கொடுத்துவரின் பாண்டு, சோகை, காமாலை முதலியவைகளும், இன்னும் இரத்தக்கேட்டினு லுண்டான பல ரோகங்களும் தீரும்; இரத்தமும் விசேடமாக உண்டாகும்; எ - ம். (20)

## அயச் சிந்தூரம்

### (உயர்ந்த முறை)

397. துப்பற் றயப்பொடியும் தோதாங் கொடிசீந்தல்
செப்புந் திரிபலையுஞ் சேர்வீதம்—ஒப்ப
விடித்தே ஒருமிக்க இட்டுக் கடத்தில்
மடிக்க விடுநீரை வாங்கு.

398. வாங்குநா வற்பழமும் வாடா ததன்பட்டை
தாங்கு மதன்சாற்றைத் தானிட்டு—ஏங்காதே
திங்களா மோரிரண்டு தேன்மொழியே! விட்டிருக்கில்
தங்கிக் கரைந்திடுமே தான்.

399. தானு மருந்தை தகர வறுத்திடவே
வீனு மதன்மாசு விட்டகன்று—கோனுய்
வரும்பதத்தி லாவின்நெய் வார்த்தெரிக்கப் பாரி
லுறும்பதமோ நற்சிவப்பென் றுண்.

400. உண்ண மதுமேகம் ஊதுகா மாலையுடன்
நண்ணும் பெருஞ்சோகை நாடாதே—திண்ணமிது
பாண்டு பெரும்பாடு பற்றி வரும்பித்தம்
ஈண்டி யிராதென்று ரிங்கு.

401. இங்குச் சதபுடத்தே யிட்டவய மென்றிடினும்
பங்கமுறு முன்னிதற்குப் பண்டிதரே!—சங்கையிலை
பாகமுடன் செய்து பருகப் பணவெடையே
ஆகம் வலுக்கு மறி.

(க - து) புதிதாக இராவிய அயப்பொடி, சீந்தல்கொடி, கடுக்காய், நெல்லிக்காய், தான்றிக்காய் இவைகளின் சூரணம் ஒவ்வொன்றும் ஒரு சேர் வீதம் ஒரு மட்கடத்திற்போட்டு, ஒரு படி நாகப்பழச்சாறும், ஒரு சேர் படி நாகப்பட்டைச்சாறு அல்லது அதன் கியாழம் விட்டுக் கலக்கி 2 - மாதம் வரையில் அசையாமல் நிழலில் வைக்க அயப்பொடியானது உடன்சேர்க்கப் பட்டுள்ள துவரான திரவத்துடன் சம்பந்தப்பட்டுக் கரைந்து பக்குவப் படும். பின்னர் ஈரம் வறள ரவியில் உலர்த்தி ஒரு இருப்புச் சட்டியிலிட்டுச் செந்நிறமாகும் பொருட்டு வறுக்கவும்; வறுக்கும் பதமானது அயப்பொடி யுடன் சேர்க்கப்பட்டுள்ள சரக்குகள் எல்லாம் சாம்பலாகிக் காற்றுடன் சம் பந்தப்பட்டு வெளியாகவும், அயமாத்திரம் நின்றதாகவும் இருத்தல்வேண்டும். அத்தருணத்தில் மீண்டும் அதிகத் தீயிட்டு அயம் சிவந்திருக்கும் செவ்வி நோக்கி ஒரு சேர் ஆவின் நெய்யைவிடப் பற்றி எரித்துத் தானே தணியும் போது அயமானது மாதுளம்பூ நிறத்திற்கு ஒப்பாகச் சிவந்திருக்கும். அதனை ஆறவிட்டுப் பொடித்துச் சீசாவிலிடுக. இதனை வேளைக்குப் பணவெடை வீதம் நெய், தேன் முதலியவைகளில் கொடுக்க மதுமேகம், காமாலை, சோகை, பாண்டு, பெரும்பாடு, பித்தப்பாண்டு முதலிய பல பிணிகளையும் நிவர்த்தி செய்வதுடன், தேகமானது வலுக்கும். ஆயுள் விர்த்தியாகும். 1000 - புடம் தீர்ந்த அயச் சிந்தூரங்களும் இதற்கு இணையாகா. பத்தி யம்: ரோகத்தின் வன்மை மென்மைக் கேற்றவாறு புளி தள்ளியும், சேர்த் தும் இச்சாபத்தியமாக இருத்தல் ஆவசியகமாகும்; எ - ம். (21)

### சண்டமாருதச் சிந்தூரம்

402. சீர்கெந்தி வீரமுடன் சிந்தூர மோரிரண்டு
பார்வன்னிக் கற்பம் பகரெட்டு—பேர்கொள்ள
பூரமொரு பத்துப் பூட்டிவிடின் மாசண்ட
மாருத மென்றெண்ணி வாங்கு.

403. வாங்கிக் கலுவத்தே வன்மை யுடனாட்ட
ஓங்கும் நிறம்பவளம் ஓகோகோ—நீங்கிடுமே
வாதநோய் புண்புரைகள் வந்த சுரஞ்சன்னி
காத வழியோடுங் காண்.

404. காணும் மருந்தோடு கால்பங்கு வாளமிடின்
தோணும் மலபந்தம் தோற்றுப்போம்—வீணாகச்
சொல்லுதரங் கொட்டுதற்குச் சூதில்லை சேரமினி
வெல்லுங்கை பாகமிதை வேண்டு.

405. வேண்டுஞ் சிகிச்சை விஷபேதிக் காமாயின்
ஈண்டுக் கருப்பூரம் இட்டுசம—ணண்டிடவாம்
மிக்க வதின்வீறு மீரு திருந்திடவே
தொக்க படிகாரஞ் சொல்.

(க - து) கந்தகம், வீரம், இரசச் சிந்தூரம் வகைக்கு விராகனெடை - 2, இலிங்கம் விராகனெடை - 8, பூரம் விராகனெடை - 10, ஆக இவ்வைந்து சரக்குகளையும் கல்வத்திலிட்டு 3 - சாமம் அரைத்து எடுக்க பவளநிறமுடைய சிந்தூரமாகும். இதனில் கால்குன்றிப் பிரமாணம் தினம் இருவேளை 5, 7 - நாள் தேனிலேனும் நெய்யிலேனும் ரோகத்திற்கு எற்றவாறு அனுபானம் செய்துகொடுக்க சுரம், ஜன்னி, குன்மம், பீலிகை மகோதரம், வாதம், பாரிசவாயு, நடுக்கல்வாதம், முகவாதம், கணுக்கால்வாதம், சூலை, பவுத்திரம், கண்டமாலை, அரையாப்பு, புண்புரைகள் தீரும். மிற்க, இச் சிந்தூரத்துடன் நாலிலொரு பங்கு சுத்திசெய்த வாளத்தைக் கூட்டியரைத்து வைத்துக்கொண்டு, முற்கூறப்பட்ட ரோகங்களை யுடையவர்களுக்கு மலச்சிக்கல் இருப்பின் இரண்டொருவேளை கொடுக்க மலம் தள்ளும். பின்னர், தேவையாயின் தனி சிந்தூரத்தை ரோகம் நிவர்த்தியாகும் வரையில் கொடுத்து வருக.

இத்தகையே நாலிலொருபங்கு அபினி சேர்த்து அரைத்து வைத்துக்கொண்டு, முற்கூறப்பட்ட ரோகங்களை யுடையவர்களுக்கு வயிற்றுப் போக்கு இருப்பின் இரண்டொருவேளை கொடுக்க மலம் கட்டும்; பின்னர் தேவையாயின் தனி சிந்தூரத்தை ரோகம் நிவர்த்தியாகும் வரையில் கொடுத்து வருக.

இத்தகையே நாலிலொரு பங்கு பொரித்த படிகாரம் சேர்த்து அரைத்து வைத்துக்கொண்டு, முற்கூறப்பட்ட ரோகங்களை யுடையவர்களுக்கு மருந்து வீறு செய்யாமல் சாந்தமாக நிவர்த்திக்கவேண்டுமாயின் கொடுத்து வருக.

இத்தகையே சமனெடை கற்பூரம் சேர்த்து அரைத்து வைத்துக்கொண்டு விஷபேதிக்குக் கொடுக்க நிவர்த்தியாகும்; எ - ம். (22)

திரிபுவனச் சிந்தூரம்

406. செப்புந் திரிபுவனச் செந்தூரஞ் செய்முறைதான்
ஒப்புங்காந் தங்கெந்தி வோதுமயம்—துப்புரவாய்
நான்குபல மொவ்வொன்றும் நாட்டிக்கல் வத்திட்டே
ஆன்றகும ரிச்சாற்று லாட்டு.

407. ஆட்டி யொருவார மாக வில்லைதட்டி
பூட்டியுள்ளங் கையளவில் பூணகலம்—நாட்டி
யதனுயரம் தானேக்கா தாதவனில் வைத்தே
இதமான பாண்டத்தி விட்டு.

408. இட்டுமேல் மூடி இயற்றிமண் ணேழ்சீலை
முட்டுந்தி யேற்றெரிப்பில் மூன்றுநாள்—விட்டிருந்து
பூக்குமடி வில்லைதனைப் போற்றிச் சுரண்டிப்பின்
நோக்கக் கடிக நுவல்.

409. நுவலுங் கடிசுதனை நோக்கியிடு கல்வத்
தவமில் குமரி யதன்சா—றுவப்பெய்ய
விட்டே வரைப்பிட் டியல்வில்லை முன்போலச்
சட்டமுட ளங்கையுறத் தட்டு.

410. தட்டுவாய் பாண்டமதிற் தான்மூடி ஏழ்சீலை
இட்டுநாற் சாமம் எரிதீயில்—கட்டுறவே
பார்த்தெடுத்த வில்லை பகருமடி பூப்பெல்லாம்
போர்த்தெடுத்தி டற்கேநீ பேசு.

411. பேசுவிலை தானெல்லாம் பேரறிய பூக்குவிதம்
பாசமுட னூட்டிப் பகருவில்லை—மோசமில்லாப்
பாண்டமதில் வைத்தெரித்துப் பாகமொடு சேமிக்க
தூண்டு மருந்தாகுஞ் சொல்.

412. சொல்லுமிதைக் குன்றியெடை சோதிக்க வேண்டின்நீ
நல்லசங்கன் வேரில் நயந்துண்ண—வெல்லுங்கேள்
நீண்டசோ கையுடன் நீதியற்ற காமாலை
பாண்டு மொழியுமாம் பார்.

(க-து) காந்தம், கெந்தகம், அயப்பொடி இவைகளை வகைக்கு நான்கு பலமாகக் கல்வத்திலிட்டு குமரிச் சாற்றால் நாளொன்றுக்கு மூன்று சாமத்திற்குக் குறையாமல் ஒரு வாரம் வரையிலும் நன்றாய் அரைத்து எறத் தாழ உள்ளங்கை அகலமுடைய வில்லையாகத் தட்டி (சரக்கினுடைய அளவிற்கு எற்றவாறு வில்லை எவ்வளவுயா மாயினும் சரி) ஒரு வாரம் வரையில் கடும் ரவியில் உலர்த்தி ஜாண் உயரம் முழ வகலம் உள்ள சிந்தூரச்சட்டியின் மத்தியில் வைத்து அத்தகைய மற்

ஞோர் சட்டியைக் கவிழ்த்து சட்டி வாய்ப்பொருத்தத்திற்கு மண் பூசி ஏழு சீலைசெய்து காய்ந்தபின் அடுப்பின்மீது வைத்து முதல் நாள் தீபாக்கினியாகவும், மற்றிரண்டு நாள் காடாக்கினியாகவும் எரித்து மூன்று நாள் ஆறவிட்டுச் சீலையை நீக்கிப்பார்க்க மருந்தானது சிவந்து உருகிப் பொங்கி அடங்கி யிருக்கும். அடிப் புறத்தில் மாத்திரம் சிறிது பூத்திருக்கும். இதனைக் கத்திகொண்டு மெதுவான பாகத்தை மாத்திரம் சுரண்டி எடுத்துக்கொண்டு மீண்டும் அவ் வில்லையைக் கல்வத்தில் போட்டுக் குமரிச் சாற்றால் அரைத்து முன்போல் நாலு அங்குலம் (உள்ளங்கை யளவு) அகல முடைய வில்லையாகச் செய்துலர்த்திக் கீழ்சட்டி மேல்சட்டியாகவும், மேல்சட்டி கீழ்சட்டியாகவும் மாற்றி, அதனில் முன்போல் வில்லையை வைத்துச் சீலைசெய்து காய்ந்தபின் நான்கு ஜாமம் முத்தீயாக எரித்து ஒருநாள் ஆறவிட்டு சீலையை நீக்கிப் பார்க்க, உள்ளிட்ட வில்லையி னடியில் சிறிது பாகம் பூத்திருக்கும்; இதனையும் சுரண்டி முன் சேகரித்து வைத்துள்ள சிந்தூரத்துடன் கூட்டிக்கொள்க. இங்ஙனம் வில்லை யெல்லாம் பூக்கும் வரையிலும் சிரமமென்று பாராது ஒவ்வொரு முறையும் அரைத்து முன்னளவே வில்லைசெய்து சட்டியில் வைத்து நான்கு ஜாமம் வீதம் எரித்து ஆறவிட்டு ஒவ்வொரு முறையும் பூக்கும் மெதுவான பாகத்தை யெல்லாம் சேர்த்துக்கொண்டு வந்து முடிவில் எல்லாவற்றையும் கல்வத்தி லிட்டு நன்றாய் அரைத்து, காற்று நுழையாத கல்கார்க்குச் சீசாவில் வைத்திடுக. இதனை வேளைக்கு 1, $1\frac{1}{2}$ - குன்றியளவு நெய், தேன் முதலிய அனுபானங்களில் தினம் இருவேளை 5 - நாள் உட்கொள்ள காமாலை குணமாகும். பத்தியம்: வெள்ளாட்டுப்பால் அன்னம் தவிர வேறொன்றும் ஆகாது. இவ்வித சிகிச்சையில் உடனே குணம் தோன்றாவிடின் மூன்று நாள் பொருத்து முக்கூட்டு எண்ணெய் இட்டு ஸ்நானஞ் செய்து இச்சா பத்தியத்துடன் புளி தள்ளி இம் மருந்தை தினம் $\frac{1}{2}$ - குன்றி அளவாக தினம் இருவேளை 10 - நாள் கொள்ள எவ்விதத்தினும் குணமாகும். பாண்டு ரோகத்திற்கு $1\frac{1}{2}$, 2 - குன்றியளவு தேனில் தினம் இருவேளையாகக் கொண்டு பின்னர் நல்ல சங்கன் வேரைச் சந்தனக் கல்லில் சந்தனம்போல் அரைத்து எடுத்த விழுது நெல்லிக்காய் பிரமாணம் வெள்ளாட்டுப் பாலில் கலக்கிச் சாப்பிடவும். இப்படி ஏழுநாள் சாப்பிட்டு வெள்ளாட்டுப் பாலும் அன்னமும் சேர்ந்த ஆகாரம் தவிர வேறொன்றும் சேர்க்காதிருப்பின் வீக்கம் வாடிப்போம். பின்னர், மூன்றுநாள் மருந்தில்லாது விட்டுவைத்து முக்கூட்டு எண்ணெய் தேய்த்து ஸ்நானஞ் செய்து புளி நீக்கி இச்சா பத்தியமாக இருந்துகொண்டு மருந்தைச் சிறிதளவாகத் தேனிலேனும் நெய்யிலேனும் சாப்பிடவும். இரத்தம் அதிகரித்து இனி வீக்கம் வாராமல் செய்யும். இவ்வித பிரயோகத்தில் பாண்டு ரோகம் குணமில்லை யெனத் தோற்றின், அவ்வியாதி கஷ்ட சாத்திய மென்றே கூறல்வேண்டும். மற்றும் இம்

மருந்தை இரத்தக் குறைவினல் வரும் பல ரோகங்களுக்கும் சமயோசித மாய்த் தக்க அனுபானங்களில் கொடுக்க நன்மை பயக்கும்; எ-ம். (23)

### சொர்ணவங்க சிந்தூரம்

413. சுத்திக் கருவங்கம் சொற்பலமே யொன்ருக
நத்திமண் ணேட்டில் நயந்துருக்கிப்—பத்தியுடன்
தங்கம்வி ராகன் தளராது தான்கொடுக்கத்
தங்கி யுறவாகுஞ் சாற்று.

414. சாற்று முறவதனிற் சாட்டரணை வெண்மூலி
தூற்றி வறுக்கத் துகளாகும்—ஏற்றத்
தரும்வறுப்பில் சிந்தூரம் தானுகி லாற்றப்
பெருமை தருமருந்தாம் பின்.

415. பின்னதனை நெல்லளவில் பெற்ருவி னெய்சேர்த்துச்
சொன்ன படியுண்ணச் சுருக்கோடும்—இன்னுஞ்சொல்
வெள்ளையுடன் தந்தி விரும்பாக் கருமேகம்
எள்ளளவு மில்லையா மெண்.

416. எண்ணவே பத்தியந்தான் ஏற்ற வுணவாகும்
நண்ணும் புகைபோகம் நாடாதே—தின்னும்
புளியும் மதுபானம் போதரவாய் நீக்கக்
களிக்கக் குணமாகுங் காண்.

(க-து) ஒரு பலம் கருவங்கத்தை முறைப்படிச் சுத்திசெய்து ஒரு சட்டியில் போட்டு அடுப்பின்மீது வைத்துருக்கி அதனேடு கொஞ்சங் கொஞ்சமாகத் தங்க ரேக்கு ஒரு விராகனெடை கொடுத்துத் தேய்க்க உற வாகும். அத் தருணம் தீயை அதிகப்படுத்திச் சட்டியானது செந்நிறமாக இருக்குந் தறுவாயில் சிறு துண்டுகளாக நறுக்கிய 10-பலம் வெள்ளைச் சாட்டரணை சமூலத்தைக் கொஞ்சங் கொஞ்சமாகப் போட்டுக் காண்டி யால் தேய்க்க ஆறு சாமத்திற்குள் காண அற்புத நிறமுடைய செந்தூரமாகும். இதுவே உட்கொள்ளப் பருவ பக்குவமானது. இதனையே மீண்டும், எட்டுசாமம் வறுக்கப்புகின் செந்நிறம் மாறி மஞ்சள் நிறத்தை யடையும் இங்ஙனம் செய்தது குணவிசேட மென்றே அறியப் பட்டது, இச் சிந்தூரத்தில் அரிசிப்பிரமாணம் தினம் இருவேளை சரீர

தத்துவத்திற்கு ஏற்றவாறு நெய்யிலேனும், தேனிலேனும் ஏழு நாள் கொள்ள நீடித்த வெள்ளை, தந்திமேகம் முதலியவை குணமாகும். ஒரு சமயம் வியாதி பழமையாயிருப்பின் இரண்டு வாரங்கழித்து மீண்டும் முன் போல் ஒருமுறை சாப்பிடவேண்டும். கருமேகத்திற்கு 4, 6 - முறைவரை யில் சாப்பிடவேண்டும். தவிர மேகவிரணங்கள் முதலியவைகளுக்கு 3, 4 - முறை உட்கொள்ளக் குணமாகும் ; எ - ம். (24)

குறிப்பு :—சாதாரணமாய்க் கிடைக்கக்கூடிய மண் சட்டிகள் இத்தகைய எரிப்புக்கு நன்மை பயக்கா தாதலான், குயவனிடம் சொல்லிக் கை வழித்த மண்ணைச் சேகரப்படுத்தி, அதனல் பாண்டத்தைக் கனதி யாக உண்டாக்கிப் பலமுறையாக மண் அழுந்தத் தட்டிச் சித்தப்படுத் திக் கொள்ளல் வேண்டும்.

## பவளச் சிந்தூரம்

### அகவற்பா

417. சீர்பெறும் பவளச் சிந்தூ ரங்கேள்
ஓர்தொடி பவள மொருங்கே பொடித்துப்
பீங்கான் தன்னிற் பிசகா திட்டுப்
பாங்காந் தேசிப் பழச்சா றுடனே
கண்டங் கத்திரி கருதும் ரசமும்
கொண்டு சமனைக் குலவ இட்டுக்
கதிரவன் முன்னே களிப்புட னுலர்த்தித்
துதிக்குஞ் சூதந் துவருங் காரம்
பலமே யாகும் பகரக் காந்தம்
நிலவக் காலாம் நிறைதான் கெந்தி
அரைபலங் கொண்டு அன்றே கல்லில்
விரைந்தே யாட்ட விளம்பு மூலி
கொள்ளுஞ் சிறுதேள் கொடுக்குச் சாறு
விள்ளச் சிறுக விட்டே யரைத்துச்
செப்பும் வில்லை செய்தே பலவாய்
ஒப்ப ரவியில் உலர்த்திப் பின்னே
கறுப்பாங் கண்டங் கத்திரி யோடு
சிறுதேள் கொடுக்குச் சிறந்த மூலி
நன்று யுலர்த்தி நைய விடித்துக்
குன்று தகலில் கூறும் வில்லை
கிடத்துங் காலை கீழும் மேலும்

இடமே கொள்ள இட்டு மூலி
மண்ணுஞ் சீலை மருவச் சுற்றி
எண்ணுந் தொகைதான் ஏழே யாக
செய்து ரவியில் சேர வுலர்த்தி
வெய்ய புடத்தில் வேகும் பதங்கேள்
பள்ளஞ் செய்யே பகர முழமாய்
உள்ளே வறட்டி யுமியுங் கூட்டி
நடுவே யகலை நனிபெற வமர்த்தி
அடுத்தே யெருவை யடக்கி நிறைய
செப்புந் தீயைச் சேர விடுமின்
ஒப்புந் தினமே யொருமூன் றுனல்
சீரும் பவளச் சிந்தூ ரங்காண்
கூறு தீளை குடிகொள் சுரமும்
இருமல் காசம் இறைப்பு நோயும்
விரும்பி யுண்ண விரைந்தே யோடும்
கொடுக்கு மளவு குன்றி யரையாம்
தடுக்கப் பத்தியம் தரணியிற் பெண்ணே.

(க - து) கண்டங்கத்திரிச் சமூலம் இடித்துப் பிழிந்த சாறுடன் எலுமிச்சம் பழச்சாறு சமன் சேர்த்து ஒரு பீங்கானில் விட்டு அதனில் ஒரு பலம் பொடித்த பவளத்தைப் போட்டு ரவியில் வைத்துச் சுண்டின பதத்தில் எடுத்து வைத்துக்கொள்க.

ஒரு பலம் சூதத்தைக் கல்வத்திலிட்டு அதனுடன் $\frac{1}{2}$ - பலம் சுத்தி செய்த கெந்தகத்தைப்போட்டு அரைக்கக் கறுப்பாகும். அப்போது பொரித்த வெங்காரம் பலம் - 1, காந்தம் பலம் - $\frac{1}{4}$, சுத்திசெய்துள்ள பவளம் இவைகளைக் கூட்டிச் சிறு தேள்கொடுக்கின் சமூலச் சாறுவிட்டு எட்டுச் சாமம் நன்றாய் அரைத்து 5, 6 - வில்லைகளாகத் தட்டி ரவியில் உலர்த்தவும்; கண்டங்கத்திரிச் சமூலம், சிறு தேள்கொடுக்குச் செடி சமூலம் இவை இரண்டையும் காயவைத்து இடித்துச் சூரணம்செய்து ஒரு அகலில்போட்டு அதன்மீது வில்லைகளைப் பரப்பி அதன்மீது மீண்டும் மூலிகைச் சூரணத்தைப்போட்டு மேல் அகல் மூடிச் சீலைசெய்து ரவியில் உலர்த்திவைத்துக் கொள்க.

முழவகல நீளமுடைய குழிதோண்டி அதில் வறட்டித் துண்டுகளையும் உமியையுங் கலந்து அரைப்பாகம் வரையில்போட்டு மேலே அகலைவைத்து முன்போல் வறட்டித் துண்டுகளையும் உமியுங் கலந்து குழி நிரம்பக் கொட்

டித் தீயிட்டு மூன்றுநாள் வரையில் சாங்க சீதள மாகும்பொருட்டு வைத்தெடுக்கச் சிந்தூரமா யிருக்கும். ஒருகால் நிறம் கறுத்திடின் மீண்டுங் கண்டங்கத்திரி இலைச்சாற்றில் அரைத்து 5, 6 வில்லைகளாகத் தட்டிக் காயவைத்து அகலில் பரப்பி மேல் அகல்மூடிச் சீலைசெய்து உலர்த்தி வைத்துக்கொள்க.

பின்னர்; 10-வறட்டியையும் புடம்போலடுக்கித் தீயிட்டு அடி வரையிலும் செந்தணலாகவிருக்கும் செவ்விநோக்கி மேற்புறம் தீப்பிடித்த வறட்டிகளில் ஏறத்தாழ அரைப்பாகம் அப்புறப்படுத்தி முன் சித்தப்படுத்தியுள்ள அகலை வைத்து மீண்டும் அவ்வறட்டிகளை யடுக்கித் தீயின் வேகம் விரைவி லாறுதிருக்கும்பொருட்டு ஈரமில்லாத மண்ணை மேற்றூவி வைக்கவும். இங்ஙனம் இரண்டொரு புடமிடச் சிந்தூரமாகும். இதில் அரை குன்றிப் பிரமாணம் தினம் இருவேளை நெய் தேன் முதலிய அனுபானங்களில் கொள்ள இருமல், காசம், இறைப்பு, சுரம் முதலியவை குணமாகும்; எ-ம். (25)

குறிப்பு:—அதிக மண்ணால் காற்று நுழைய இடமில்லாமல் புடத்தை மூடிவிடின் தீயணைந்து மருந்து கெடும். இன்னும் நேர் தீயில் வில்லையை வைத்தால் மருந்தானது உருகிக் கெடும்.

### க்ஷயகுலாந்தகச் சிந்தூரம்

418. காந்தம் பலமிரண்டைக் காண்குமரிச் சாற்றுலே
ஈந்தரைத்துத் தட்டிவில்லை யெய்துரவி—ஏந்தியகல்
ஐயா றெருவதனி லாகுபுட மூன்றிடவே
கையாடுஞ் சிந்தூரங் காண்.

419. காண்பவள முப்பதுவாங் கல்நாரு மத்தகையே
பூண்டகாந் தம்போற் புகல்புடமொன்—றுண்டினிகேள்
தேரவகைக் கோர்பலமாய்ச் சேர்வ துடன்மாலின்
தாரஞ் சிலைபூரந் தந்து.

420. தந்தெருக்கன் பாலதனில் தாளுட்டி ஈரமுடன்
வெந்த குடுவைதனில் விட்டரைத்துப்—பந்தமுடன்
மண்மறைவி லிட்டெரிப்பாய் மாள விருசாமம்
எண்ணு மெடைக்குறையை யேற்று.

421. ஏற்றவரி தாரமுட னிங்குலு ரஞ்சிலை
போற்றச் சமன்கொண்டு பூட்டியரை—சாற்றவினி
கொண்டெரிக்க முற்போலாம் கூறுமெடை தன்குறைக்குக்
கண்டமூன் றுச்சரக்குங் காட்டு.

422. காட்டப் பலமாறு காணுமட்டு மிவ்விதமே
கூட்டி யெரிக்கக் குருவென்பர்—நாட்டவதில்
நான்காம் பரியிரண்டு நற்கெந்தி லிங்கமொன்று
தோன்றக் கழஞ்சாகச் சொல்.

423. சொல்குமரிச் சாற்றாலே தொக்கரைத்துக் குப்பியிட்டு
நல்ல மணலெரிப்பில் நாற்சாமம்—ஒல்லலுற
இட்டரைத்துக் குன்றியெடை யீயவிரு வேளையுமே
விட்டோடும் நோய்தான் விளம்பு.

424. விளம்புஞ் சயகாசம் வேதனைசெய் யீளை
தளம்புங் கயமிறைப்புத் தம்மை—வளமை
நயங்காட்டிப் பல்லுயிரை நாட்டுதலா லிங்கே
சயகுலத்துக் கந்தகனுஞ் சாற்று.

(க - று) இரண்டுபலம் சுத்திசெய்த காந்தத்தைக் கல்வத்திலிட்டுக் குமரிச் சாறுவிட்டு நான்குசாமம் அரைத்து வில்லைசெய்து வெய்யிலில் உலர்த்தி அகலிலிட்டுச் சீலைசெய்து காய்ந்த பின்னர் 30 - வறட்டியில் புடமிடவும். இங்ஙனம் 3 - புடமிட நல்ல செந்தூரமாகும்.

பின்னர் மூன்று பலம் பவளத்தை எலுமிச்சம்பழச் சாற்றில் இரண்டு மூன்று நாள் ஊறப்போட்டு எடுத்துக் கல்வத்திலிட்டுக் குமரிச் சாற்றால் நான்கு சாமம் அரைத்து நாலைந்து வில்லையாகத் தட்டிக் காயவைத்து அகலில் பரப்பி மேல் அகல்மூடிச் சீலைசெய்து காய்ந்தபின் 30 - வறட்டியில் புடமிடவும். இது பற்பமாகும். இன்னும் இரண்டு பலம் கல்நாரை ஒருநாள் இளநீரில் ஊறப்போட்டு மறுநாள் எடுத்துக் குமரிச்சாற்றா லரைத்து நான்கு வில்லையாகத் தட்டிக் காயவைத்து அகலில் பரப்பி மேல் அகல்மூடிச் சீலைசெய்து முப்பது வறட்டியில் புடமிடப் பற்பமாகும். புடபேதத்தினால் பூப்பும் வெளுப்பும் இல்லாதிருப்பின் இரண்டொரு புடம் அதிகமாகப் போட்டுக்கொள்க.

மேற்கூறப்பட்ட முறையால் முடிக்கப்பட்டவைகளில் ஒவ்வொன்றும் ஒவ்வொரு பலமாகவும், தாளகம், மனோசிலை, பூரம் வகைக்கு ஒரு பலமாகவும் கல்வத்திலிட்டு வெள்ளெருக்கன் பாலால் ஒரு சாமம் நன்றாய் அரைத்து உடனே இவை கொள்ளத்தக்க சிறு குடுவையில் போட்டு வாய்க்குப் பொருத்தமான ஓட்டால் மூடிச் சந்துக்கு மண்ணடைத்துச் சீலைசெய்து ஒரு சட்டியில் இரண்டு அங்குலம் மணல் பரப்பி அதனில் வைத்து மறைய மணல் கொட்டி இரண்டு சாமம் முறையே தீபம், கமலாக்கினியாக எரிக்கவும். நன்றாய் ஆறினபின்பு

குடுவையிலிட்ட மருந்தைச் சேதப்படாமல் சுரண்டி எடுத்து நிறை தூக்கிப் பார்க்க குறைந்த எடையை மூன்று பாகமாக்கி அவ்வெடைக்குத் தாளகம், மனோசிலை, பூரம் இவைகளைச் சமனெடையாக நிறுத்துச் சேர்த்து முன் போல் வெள்ளெருக்கன் பால்விட்டு ஒரு சாமம் நன்றாய் அரைத்து முன் போல் குடுவையிலிட்டு எரிக்கவும். இங்ஙனம் 12 - முறை எரிக்கப்புகின் மருந்தானது ஏறத்தாழ 6 - பலம் எடையுள்ளதாக ஏற்படும். இதற்கே சயகுலாந்தகன் குரு வென்று கூறுவர்.

வேண்டும்போது மேற்கூறப்பட்ட குருவில் கழஞ்சு 4, தங்கம் கழஞ்சு 2, கெந்தகம் லிங்கம் வகைக்குக் கழஞ்சு 1 ஆக இவைகளைக் கூட்டிக் கல்வத்திலிட்டு குமரிச்சாற்றா லரைத்து கல்வத்துடனே காய வைத்துச் சுரண்டி சீலைசெய்த குப்பியிலிட்டு வாயை யடைத்துச் சீலை செய்து வாலுகா யந்திரத்தில் வைத்து நான்கு சாமம் எரிக்கவும். மருந்தானது பொடித்த கோரோசனை நிறமாக இருக்கும். ஒருகால் நிறபேதமிருப்பின் மீண்டும் இம்மருந்தைக் கல்வத்திலிட்டுக் குமரிச்சாறு விட் டரைத்து ஒரே வில்லையாகச்செய்து ஓட்டிலடக்கிச் சீலைசெய்து காய்ந்தபின் 10 - வறட்டியில் புடமிடுக. இப்படி இரண்டு புடமிடச் சிவந்த மஞ்சள் நிறமுடைய செந்தூரமாக முடியும். இதில் அரை, கால் குன்றிப் பிரமாணம் தகுந்த அனுபானங்களில் அந்தி சந்தி கொடுக்க காசம், ஈளை, இறைப்பு, க்ஷயம் இன்னு மிவைகளா லுண்டான பலஈனம் முதலியவைகள் குணமாகும். இம் மருந்து குணவிசேட முடையதாயினும், ஷை வியாதிகளால் அதிக உபத்திரவ முடையவர்களுக்கு ஏதேனும் அக்கால சாந்தமாவதற்கு ஏற்றதொரு சிகிச்சை ஒன்று செய்து உபத்திரவத்தைத் தணித்துப் பின்னர் இம் மருந்தைச் சிறு அளவாக நீடித்துக் கொடுத்துக் கொண்டு வர வியாதியைப் பூரணமாய் நிவிர்த்திசெய்யும். இடையில் ஒரு சமயம் வியாதி மீறிடினும் உடனே இம மருந்தை நிறுத்தி முன்போல ஏதேனும் ஒரு அவிழ்தம் சாந்தப்படும்படியாக கொடுத்து மீண்டும் க்ஷய குலாந்தகனை ஆரம்பித்துக் கொடுக்கவும். இப்படி ஒரு மண்டலம் கொண்ட. பின் வியாதி நிவர்த்தியாகும் என்பதில் சிறிதும் சந்தேகமில்லை. பத்தியம்: வியாதியின் நிலைமைக் கேற்றவாறு நல்ல ஆகாரம் கொடுத்து வருக; எ - ம்.

### அப்பிரக சிந்தூரம்

425. கொள்ளவே யப்பிரகங் கோவின்பால் கொண்டுமீ
வள்ளதா மாசறுத்து மத்தித்து—மெள்ளவே
சாரஞ் சரிகூட்டித் தந்து கலசத்தில்
தேரப் புடமொன்றிற் சேர்.

426. சேர்த்து வயிரகம் தேற நிறம்பசுமை
ஆர்த்த சலம்விட் டலம்பியே—மார்க்கங்கேள்
தும்பையுடன் நாயுருவி துய்யதாஞ் செவ்வகத்தித்
தம்மிற்பத் துப்புடமாம் தந்து.

427. தந்திடவே முப்பதனில் தானுகுஞ் சிந்தூரம்
அந்திசந்தி யாக அருந்திடவே—முந்திட்ட
தப்புநீர் போக்கதிகம் தாக மழலையுடன்
ஒப்ப வினியிலையா மோது.

(க - து) கிருஷ்ண அப்பிரகத்தைத் தேவையானது கொண்டுவந்து சிறு துண்டுகளாக நறுக்கிக் குறட்டினல் பிடித்துக்கொண்டு, கன்னு னலையில் நன்ருய்க் காய்ச்சிப் பசுவின்பாலில் தோய்க்கவும்; இங்ஙனம் ஒவ்வொரு துண்டுகளையும் 2, 3 - முறை காய்ச்சித் தோய்த்துலர்த்திக் கல்லுறலில் போட்டுக் கடப்பாறையால் இடித்துத் தூள்செய்து. அதில் ஐந்து பலமும், பொடிசெய்த நவாச்சாரம் ஐந்து பலமும் ஒரு குடுவையில் படிப்படியாகக் கலந்து போட்டு வாய்க்கு ஓடு மூடிச் சீலைசெய்து 80 - வறட்டியில் புடமிடவும். இதில் அப்பிரகமானது தங்கச் சாயலாகவும், பதங்கத்திற்கு ஒப்பாக இலேசான பொருளாகவும் தோற்றும். சலம் விட்டுச் சாரத்தின் சத்து யாவும் விலகும்படி அலம்பி வடித்து, கல்வத்திலிட்டுச் சிறு தும்பை இலைச்சாற்றில் 4 - சாமம் அரைத்து அரையணு அகலமும் கனதியுமாக வில்லைகள் செய்து அகலில் பரப்பிக் காய்ந்தபின் மேல் அகல் மூடிச் சீலைசெய்து 150 - வறட்டியில் புடமிடவும். இப்படி 10 - புடமிடச் சிவப்பாகும். இவ்வண்ணமே சிவப்பு நாயுருவி இலைச்சாற்றில் 10 - புடமும், செவ்வகத்திப் புஷ்பச்சாற்றில் 10 - புடமும் இட்டெடுக்க நல்ல சிந்தூரமாகும். இதில் குன்றி எடையாக வாததேகிக்குச் சுத்தமான பசுவின்நெய்யிலும், பித்த தேகிக்குத் தேனிலும் காலை மாலை இருவேளை 16 - நாள் கொடுக்கவும். மறுபடியும் 10 - நாள் மருந்தில்லாமல் விட்டுவைத்து மீண்டும் முன்போல் 16 - நாள் கொடுக்கவும். இதனுல் மதுமேகம், புலால்மேகம், கண்டமாலை முதலிய ரோகங்கள் குணமாகும். பத்தியம்: சம்பா அரிசி, துவரம் பருப்பு, வெங்காயம் இவை சேர்ந்த கிச்சடி சாதம், கத்திரிப்பிஞ்சு, முருங்கைப்பிஞ்சு, அத்திக்காய்ப்பிஞ்சி, அவரைப்பிஞ்சு, மொந்தை வாழைப்பூ, ஷை கச்சல், காணுங்கீரை, ஆரைக்கீரை, புளியாரைக்கீரை, புண்ணாக்குக் கீரை முதலியவைகள் ஆகும். தாளிதத்திற்கு நெய், சீரகம், வெந்தயம், கருவேப்பிலை, துவரம்பருப்பு இவைகளைச் சேர்த்துக்கொள்ளலாம். புளி கூடாது. அவசியம் வேண்டியதாயின் ஏதேனும் ஒரு பதார்த்தத்தில் சிறிது எலுமிச்சம்பழ ரசம் கூட்டிக்கொள்ளலாம். தயிர், மோர், பால்,

சர்க்கரை, அரிசிமாவு பண்டங்கள் கூடா. கோதுமையை எப்படி வேண்டுமோ அப்படி உபயோகப்படுத்திக் கொள்ளலாம்; எ - ம். (27)

அயச் சிந்தூரம்

428. அயத்தூ ளிரண்டு மனல்கெந்தி யாறு
நயப்பான கல்வத்தே நாட்டி—யக்கமுற
சுன்னநீர் கொண்டிங்கே சொல்லேழு நாளரைத்து
இன்னலறக் காய்ந்திடவே யிட்டு.

429. இட்ட வயமுலர ஈன்றுமண் ணோட்டதனில்
வட்டச் சிறுதீயில் வாட்டமுரு—திட்டு
வறுத்துப் புகைபோக்கி வாங்குஞ்சிந் தூரம்
சறுக்கா ததன்வன்மை சாற்று.

430. சாற்றுங் கரிசாலைச் சத்ததினி லுட்கொள்ளத்
தோற்றுங்கா மாலைமுதல் சோகையெலாம்—மாற்றிடுமே
வெப்பாலைச் சீரகமும் வேகவிட்ட நீரதனில்
கப்புஞ்சூ லைப்போகுங் காண்.

431. காணும் பிரமேகம் கண்டிக்கும் பாலதனில்
நாணுங் கிராணி நறுந்தேனில்—வேணும்நீ
நத்தும் புகைபுளியும் நாட்டிற்பெண் ணிச்சையுமே
பத்தியந்தான் நீக்கிடவே பார்.

(க - து) சுத்தமான இருமடங்கு அயப்பொடிக்கு ஆறுமடங்கு அமரி சிலை கெந்தகத்தைக் கூட்டிக் கல்வத்தில் போட்டு கற்சுன்னத்தை நான்கு மடங்கு ஜலம் விட்டுக் கரைத்துத் தெளிவெடுத்த சலத்தை விட்டு எழுநாள் நன்றாய் அரைத்து ரவியில் உலர்த்துக. பின்னர் இதனைப் பொடித்து ஒரு மண்ணோட்டிலேனும், இரும்பு வாணலிலேனும் இட்டுப் புகை போக வறுத்து எடுக்க நல்ல சிந்தூரமாகும். இதனைக் கல்வத்திலிட்டு நன்றாய் நான்கு ஜாமம் அரைத்துச் சீசாவிலிடவும். இந்தச் சிந்தூரத்தில் பண வெடை கரிசாலை லேகியத்தில் உட்கொள்ள காமாலை, பாண்டு, சோகை முதலியவைகளும்; வெப்பாலை, சீரகம் சேர்ந்த கியாழத்தில் உட்கொள்ள சூலையும்; தேனில் உட்கொள்ள கிராணியும்; பாலில் உட்கொள்ளப் பிரமேகமும் குணமாவதுடன், இரத்தப் பெருக்க முண்டாக்கி நல்ல தேஜசும் வலுவும் உண்டாகும். நிற்க, இப் பாகப்படியே அரைப்படி கற்சுண்ணம்பில்

அரைபலம் நவாச்சாரம் பொடிசெய்து போட்டு ஜலம்விட்டு கரைத்துக் கரைத்து 3-நாள் வரையில் அசையாமல் வைத்துத் தெளிந்துள்ள நீரை வடித்து வைத்துக்கொள்க. பின்னர் ஒரு பலம் அயத்தூளும், ஒரு பலம் கந்தகமும் கல்வத்திலிட்டு முன் சித்தப்படுத்திய சுண்ணநீர் விட்டுக் கையோயாமல் அரைத்துக்கொண்டிருக்க, கல்வத்திலும் குழவியிலும் சூடு பிறக்கும். அப்போது ஆறவிட்டுச் சிறு வில்லைகளாகச்செய்து ரவியில் உலர்த்தி ஒரு அகல மண்ஞேட்டில் பரப்பி அடுப்பிலேற்றி எரித்துக் கொண்டுவர வில்லை சிவந்து பூரித்தெழும்பும். அத் தருணம் வில்லைகளை எடுத்து ஆறவிட்டுக் கல்வத்திலரைத்து வைத்துக்கொண்டு உபயோகிப்பது முண்டு. இதுவும் உயர்தரமான குணங்கொடுக்கக் கூடியதென் றுணர்க; எ-ம். (28)

## பூரச் சிந்தூரம்

432. பாருலகில் இன்னுமொரு பாகம் பகருகின்றேன்
சீருலவ நற்பூரச் சிந்தூரம்—நேராக
பூர மரையோடு பூட்டிக்கால் கெந்திரசம்
சேரளவாம் கொண்டரைக்கச் செப்பு.

433. செப்பு மிதனை சிறுகடத்தி விட்டமா
ஒப்ப கடம்மூடி ஒக்கமண்—ணப்பிசிலைக்
கட்டி யுலர்த்திமேற் காணுங் கடத்திற்கு
இட்டிடவே யோர்துளையா மிங்கு.

434. இங்குத் துளையிட் டிணைத்த கடந்தன்னை
தங்குமண லேந்திரத்தில் தானெரித்துப்—பொங்கமுடன்
இட்டதுளை நேர்வழிபி லேற்றலகு கொண்டடியில்
தட்டுபடக் கிண்டிடவே தான்.

435. தானுஞ் சதுர்சாமம் தானெரித்துக் கிண்டிவரக்
கோனு மருந்தெல்லாம் கொண்டபத—மானுய்கேள்
ஆறவிட்டுப் பார்த்திடவே ஆகுநிற மேபவளம்
சீறதிகச் சிந்தூரஞ் செப்பு.

436. செப்ப வரைக்குன்றி சேர்த்துண்ண நெய்யதனில்
வெப்புக் குடைச்சலுடன் வேதனைசெய்—கப்பும்
பிடிச்சூலை கைகால் பிடிப்பு ரணங்கள்
குடிவிட்டே ஓடுமென்று கொள்.

437. கொள்ளு மழல்வாதம் கொண்ட சுரஞ்சன்னி
தள்ளும் நடுக்கலிவை தத்தளிக்கும்—உள்ளுண்ண
நாட்டிற் றிரிந்து கனமூலி தேடாமல்
வீட்டிலிருந் திம்முறைசெய் மின்.

(க - து) சுத்திசெய்த ரசகற்பூரம் பலம் 4, வாலைரசம் பலம் 2, சுத்திசெய்த கெந்தகம் பலம் 2, இவைகளைக் கிரமப்படி முதலில் கெந்தகத்தையும் வாலை ரசத்தையும் கல்வத்திலிட்டு நன்றாய் அரைத்து சுத்தக் கறுப்பாக இருக்கும் செவ்வி நோக்கி, அதனுடன் ரச கற்பூரத்தைக் கூட்டி, இரண்டு மூன்று சாமம் வரையில் எல்லாம் உறவாகும்படி அரைத்து மறு பக்கத்தில் குறித்த சித்திரத்தின்படி பெருந் தேங்காய்ப் பிரமாணம் உள்ள ஒரு மட் குடுவையில் மருந்தைப் போட்டு அத்தகைய மற்றோர் குடுவையை வாய் பொருந்தும்படி கவிழ்த்து, சந்தில்லாமல் மண் அப்பி ஏழு சீலைசெய்து ரவியில் காயவைத்து, மேல் குடுவையின் உச்சியில் குடைக்கம்பி தாராளமாக நுழையும்படியான ஓர் துளையிட்டு வைத்துக் கொள்க. பின்னர் ஓர் வாயகன்ற மட்பாண்டத்தில் நாலு விரற்கடை பெருமணல் பரப்பி அதன் மத்தியில் முன் சித்தப்படுத்திய குடுவையை அமர்த்தி, மேற்குடுவை முக்கால்பாகம் மறையும்படியாக மணல் கொட்டிப் பரப்பி அடுப்பேற்றி நான்குசாமம் முத்தீயாக எரித்துவருக. இங்ஙனம் எரிக்கும்போது நாழிகைதோறும் மேற் குடுவையிலிட்ட துளையின் வழியாகக் குடைக்கம்பியை விட்டு மருந்தைக் கிளறிக் கொடுத்துக்கொண்டு வருக. கம்பியின் முனை சிவந்த வர்ணம் காட்டிடினும், வெளுத்த புகை படிந்திடினும் செந்தூரமாயிற்றென் றுணர்க.

இதனில் ½, 1 - குன்றி தேக திடத்திற்குத் தக்கபடி நெய், தேன் முதலிய அனுபானங்களில் தினம் இருவேளை 5, 7 - நாள் கொடுக்க வாதக்குடைச்சல், சூலை, கிரந்தி, மேகரணம், சுரம், ஜன்னி முதலிய பல ரோகங்களை நிவர்த்திக்கும் தவிர வாதசீதள சம்பந்தமான பல ரோகங்களையும், மேக சம்பந்தமான பல ரோகங்களையும் பரிகரிப்பதற்கு இது ஓர் விசேஷமான மருந்தாகப் பாவித்தல் வேண்டும். இன்னும் சிலர் இங்ஙனம் முடிவுபெற்ற முழு மருந்தினளவோடு இரண்டுதோலா மொட்டு நீக்கிய கிராம்பு சேர்த்து கம்மாறு (கறுப்பு) வெற்றிலைச்சாறு விட்டு நன்றாய் அரைத்து உளுந்தளவு மாத்திரைகளாகச் செய்து வைத்துக் கொண்டு பல ரோகங்களுக்குக் கொடுத்து வருவது உண்டு. பத்தியம்: ரோகங்களுக்கும் தேக ஸ்திதிக்கும் தக்கவாறு புளி தள்ளியும், தள்ளாமலும் இச்சாபத்தியமாக வைத்தல் நன்று; எ - ம். (29)

குறிப்பு:—இரசகெந்தகங் கூட்டி வாலுகா யந்திரத்தில் வைத்தெரிக்கக் கூறியுள்ள பாகங்களில் புது மட் குடுவையை உபயோகிக்கலாகாது. பாகங்களுக் கேற்ற குடுவைகளைக் கொண்டு வந்து அன்னம் வடித்த கஞ்சியைவிட்டு ஓரிரவு வைத்து மறு நாள் சுத்தமாக அலம்பிவிட வேண்டும். மீண்டும் மறு நாள் முன்போல் கஞ்சியை விட்டுவைத்தல் வேண்டும். இப்படி அலம்பி அலம்பி 7-நாள் பரியந்தம் பழக்கின பின்னர், அக்குடுவைக்குப் போதிய அரிசியையும், சலம் கலந்த பாலையும் விட்டு பொங்கலாகச் செய்து ஆறினபின்னர் குடுவையை அலம்பி ரவியில் காயவைத்து அதனை உபயோகப்படுத்தல் எவ்விதத்திலும் மருந்து கெடாமலும், மருந்தின் அளவு குறையாமலும் முடியுமென்றறிக.

## வாலுகா யந்திரம்

வேறு




சித்திர விளக்கம்

1. மருந்திட்ட அடி குடுவை
2. குடுவையின் வாய்க்குப் பொருத்தமான மேற் குடுவை மூடி சீலைசெய்தது
3. மேற்குடுவையின் உச்சியில் துளையிட்டிருப்பது
4. வாயகன்ற பெரிய மட்பாண்டம்
5. நான்கு விரற்கடை மணல்கொட்டி அதன்மீது சித்தப் படுத்திய குடுவையை வைத்திருப்பது
6. குடுவையிவிட்ட துளை தெரியும்படி மணல்கொட்டி நிரப்பியது

Dr. S. Venkatarajan
L. I. M. (Registered)



## வெள்ளிரசச் சிந்தூரம்

438. சித்தர் களிகூர்ந்து செப்பியதோர் போக்கதனில்
ஒத்த வொருபாகம் ஓதுகின்றேன்—சுத்தமுள
வெள்ளிப் பலமரையில் வேண்டிசிறு சொப்படித்துத்
துள்ளியிடுஞ் சூதமிடச் சொல்.

439. சொல்சூத மாசறுத்துத் தோலா நிரையைந்து
வெல்லும் படியிட்டு மேல்வரம்பில்—கெல்விதுளை
இட்டுசிறு கம்பி யிணைத்தே யுரிமுடைந்து
கட்டுவிதம் பின்னுரைப்பேன் காண்.

440. காணக் கடமொன்றில் கந்தகமிட் டெண்பலமே
தோண வதின்மேலே தொங்கவுரி—பூணவிட்டுச்
சொல்கடத்தை மேல்மூடி சுற்றிமண் சீலையிட்டு
நல்லரவி யிட்டுலர நன்று.

441. நன்றேயென் சொற்றவரு நாதாக்கள் பேர்துணையா
அன்றே யடுப்பேற்றி ஆரணங்கே—இன்பமுற
ஓராறு சாமம் உயர்தீயே யிட்டெரிக்கச்
சீராகுஞ் சிந்தூரஞ் செப்பு.

442. செப்பமுன் னிட்டவெள்ளி சீராய்ச் சிவந்திருக்க
ஒப்பியரைத் தேகுன்றி யுண்ணிடவே—கப்பிவரும்
தேக பலஹீனம் சேர்வாத சன்னிசுர
வேகந் தணிந்திடுமே விட்டு.

(க - து) அரைபலம் சுத்தமான வெள்ளியை 5 - ரூபாய் எடை வாலைரசம் கொள்ளத்தக்கதாகவும், சிறிது மேலே இடங் காலியாக இருக்கவும் ஒரு மூசை அல்லது சொப்பைப்போ லடித்து அதன் வாய்வரம்பில் மூன்று சிறு துவாரங்களை யிட்டு வெள்ளிக்கம்பியாலேனும் இரும்புக் கம்பியாலேனும் உரிபோல் கட்டி வைத்துக்கொண்டு மறுபக்கத்தில் குறிப்பிட்ட சித்திரத்தின்படி ஒருமுழ வுயரமுள்ள ஓர் மட்கடத்தில் எட்டுபலம் கந்தகத்தைக் கட்டிகளாகப் போட்டு, முன் சித்தப்படுத்திய மூசையில் 5 - ரூபாய் எடை வாலைரசத்தை விட்டு அதனில் தொடுத் திருக்கும் உரிக்கம்பிகளைக் கந்தகத்திற்கு மேலே ஆறு விரற்கடை உயரத்தி லமரும்படி கடத்தின் மூடியில் மூன்று சிறு துவாரங்களையிட்டு அதனில் அசையாமல் முடிந்து சந்தில்லாமல் மண்பூசி கடத்திற்கும் மூடிக்கும் ஏற்பட்ட பொருத்தவாய்க்கு மண்சீலை எழுசெய்து, உடனே

அடுப்பேற்றி ஆறுசாமம் முத்தீயாக எரிக்கவும். ஆறினபின்னர் மூடியைத் திறந்து பார்க்க வெள்ளி மூசையானது அதனில் இட்ட வாலாசத்தைக் கிரகித்துக் கனத்துச் சிந்தூரமாயிருக்கும். இதனைக் கல்வத்திலிட்டு நன்றாய் அரைத்து சீசாவில் பத்திரப்படுத்துக. வேளைக்கு $\frac{1}{4}$, $\frac{1}{2}$ - குன்றி பிரமாணம் நெய், தேன் முதலியவைகளில் தினம் இருவேளை கொள்ள மேகவாயு, வாதரோகம், சன்னிசுரம் முதலியவை நீக்குவதுடன் தாது விருத்தி யுண்டாக்கும். பிணியின் வன்மை மென்மைக்கு எற்ற பெற்றியும், பிணியானது மெய்ந் நிலைமைக்கேற்ற பெற்றியுமறிந்து பத்தியங் கோடல் வேண்டும் ; எ - ம். (30)

## செய்பாகக் கருவி




### சித்திர விளக்கம்

1. ஒருமுழ உயரமுள்ள மட்கடம்
2. மட்கடத்தின் மூடி
3. மூடியின் நடுவில் மூன்று துளையிட்டது
4. வெள்ளிமூசை அல்லது செப்பைப்போன்றது
5. ஷை மூசையில் துவாரமிட்டுக் கம்பிகளை உரிப்போல் தொடுத்தது
6. கந்தகம் போட்டிருப்பது
7. கந்தகத்திற்கும் மூசைக்கும் இடைவெளி யிருக்க வமைத்தது

## எஃகுச் சிந்தூரம்

443. பூசார விந்தினங்கன் பொற்புறவே கெந்திசிட்டம்
ஏசாத காந்தமுட னேயுருக்கு—நேசா
அரையொன்றி ரண்டுமூன் ருநான்கைந் தாறேழ்
நிரைகழஞ்சு கொண்டிடவே நேர்.

444. நேரெருக்கன் பாலோடு நீண்டகொடி பொற்றலையின்
கோரவவை சாற்றாலே கொண்டரைத்துச்—சேரவில்லை
தட்டிரவி முன்காயத் தானிட்டு மட்கடத்தில்
இட்டுமேல் மூடிதனை இங்கு.

445. இங்குவாய்ச் சேர வினைத்துமண் சீலையிட்டுப்
பொங்கு மடுக்கஊயில் பூட்டியபின்—சங்கையிலா
நாற்சாமம் தீயெரித்து நன்காற விட்டிடின்கேள்
ஏற்றசிந் தூரமி தெண்.

446. எண்ணி யரைத்ததனில் ஏற்ற பணவெடையாய்
உண்ண விருவேளை ஒன்பதுநாள்—கண்மணியே
நீர்கட்டுக் கல்லடைப்பு நீங்காச் சதையடைப்பு
பேர்கெட் டொழியுமெனப் பேசு.

(க-து) பூநீர் $\frac{1}{2}$, சாரம் 1, சூதம் 2, வெடியுப்பு 3, கெந்தி 4, சிட்டம் 5, காந்தம் 6, எஃகு 7 இவற்றை கழஞ்சு எடையாகக் கல்வத்திட்டு போட்டு எருக்கன் பாலினால் நான்கு ஜாமமும், பொற்றலைக் கையாந்தகரைச் சாற்றினால் நான்கு ஜாமமும் அரைத்து அகலமாக ஒரே வில்லைதட்டி இரவியில் காயவைத்துச் சிந்தூரமெரிப்பதற்காகக் கூறப்பட்டுள்ள மட்கடத்தின் நடுவில்வைத்து அத்தகைய மற்றோர் கடங்கொண்டு மூடி ஏழுசீலை மண்செய்து காய்ந்தபின் அடுப்பேற்றி நான்கு ஜாமம் முறைப்படி முத்தீயாக எரித்து ஓர் நாள் முழுவதும் ஆறவிட்டு கடத்தைப் பிரித்துப் பார்க்க வில்லை சிவந்திருக்கும், இதனைக் கல்வத்தில் போட்டு அரைத்து சீசாவில் பத்திரப்படுத்தவும். வேளைக்குப் பணவெடை வீதம் தினம் இருவேளை வாத கபதேகங்களுக்குத் தேனிலும், பித்தத் தேகத்திற்கு நெய்யிலும், அனுபானம் செய்து கொடுக்கவும்; இதனால் நீரடைப்பு, நீர்க்கட்டு, கல்லடைப்பு, சதையடைப்பு முதலியவைகள் தீருமென்பது எக்காலத்தும் அறிந்த உண்மை. தவிர, நீரைப்பெருக்கி வெளிப்படுத்தக்கூடிய ஏதேனும் கியாழங்களைச் சமயோசிதமாய்ப் பின் கொடுத்தலும் சாலச் சிறந்தது; எ-ம்.

### பூங்காவிச் சிந்தூரம்

447. சொல்லும் படிகாரம் சோதிப்பூங் காவிக்கல்
வெல்லக்கா லொன்ருக விட்டரைத்து—மெல்லியலே
இம்மிக் குடுவைதனி லிட்டுமேல் மூடியுற
செம்மி யனல்வெதுப்பச் சேர்.

448. சேர வரைத்திதனைச் செப்பமுக் குன்றியெடை
கோரவா வின்நெய்யிற் கொண்டிடவே—நேரும்
பெரும்பாடு நீர்சுறுக்கு பேசமழல் பேதி
செருக்ககன் ரேடுமென்றே செப்பு.

(க - து) படிகாரம் பலம் $\frac{1}{4}$, பூங்காவி பலம் 1 இவை தம்மைக் கல்வத்திலிட்டு மிருதுவாக அரைத்து ஒரு சிறு குடுவையில் போட்டு வாய் மூடிச் சீலைசெய்து கரிநெருப்பனலிலாவது, சிறு தீயிலாவது $\frac{1}{4}$ - மணி நேரம் வைத்தெடுத்தாறவிட்டு மீண்டும் கல்வத்திலிட்டு அரைத்துச் சீசாவி விடவும். வேளைக்குப் பணவெடைவீதம் தினம் இருவேளை நெய், வெண்ணெய் இவைகளில் உட்கொள்ள பெரும்பாடு, சீதபேதி, உஷ்ணபேதி மருந்தின்வீறு முதலியவை தீரும்; எ - ம். (32)

---

# மெழுகு வகை

---

### குன்மகுடோரி மெழுகு

449. மண்ணேட்டில் வீரம் மருவப் பலமிட்டே
கண்ணேட்டம் வைத்தெரித்துக் காணெருக்கன்—கொண்டவிலை
நாடிப்பி ழிச்சாற்றில் நற்சுறுக்கோர் சாமமிட்டுக்
காடிக்கா ரங்காசு காட்டு.

450. காட்டியபின் ஞற்சுறுக்குக் காண விருசாமம்
வாட்டி மெழுகாய் வருநேரம்—நீட்டே
கலுவத்திற் ருக்கிக் கலசப்பா விட்டே
வலுவா யரைக்க வனப்பு.

451. வனப்பா மெழுகு வருங்குன்மம் வாய்வு
கனமாம் பெருஞ்சன்னி காணக்—குணமாகும்
பச்சைப் பயறளவே பற்றி யிருசந்தி
இச்சைப் பொழுதாறே எண்.

(க-து) ஒரு பலம் வீரத்தை முறைபோல் சுத்திசெய்து ஒரு மண்ணோட்டில் வைத்துச் சிறுதீயில் எரித்து, எருக்கம்பழுப்பு இலைப் பிழிந்தெடுத்த சாற்றால் ஒரு ஜாமம் சுறுக்குக்கொடுத்து வீரம் கரைந்தபின் ஒரு விராகனெடை வெள்ளிக் காடிக்காரம் போட்டு மீண்டும் அச்சாற்றா லிரண்டு ஜாமஞ் சுறுக்குக்கொடுத்து, மெழுகுபதத்தில் சேதப்படாமல் ஓலையால் வழித்துக் கல்வத்திலிட்டு முலைப்பாலால் நான்கு ஜாமம் அரைத்துக் கொம்பு டப்பியில் வைத்திடுக; எ-ம்.

இதனை ஆறுமாதம் வரையில் உபயோகப்படுத்தக்கூடாது; பின்னர் குன்மம், பாரிசவாயு, ஜன்னி முதலிய ரோகங்களுக்குச் சிறு பச்சைப்பயறு பிரமாணம் பனை வெல்லத்தில் வைத்துருட்டித் தினம் இருவேளை மூன்று நாள் கொடுக்கவும். முதல்நாள் சில தேகத்திற்கு வாந்தியானாலும் ஆகும்; மறுநாள் அதற்குமறுநாள் வாந்தியாகாது. இதற்குள் வாய்வேக்கா டுண்டாகின்றதா வென்று கவனித்துக்கொண்டே வரவேண்டும். அப்படிப் புலப்பட்ட உடனே மருந்தை நிறுத்திவிடவேண்டும். மீண்டும் தேவையாயின் 10-நாள் இடைவிட்டு இரண்டு மூன்றுமுறை கொடுக்கக் குணமாகும். பத்தியம்: புளி சேர்க்காமல் இச்சா பத்தியமாக வைத்தல் வேண்டும். இது குன்ம ரோகத்திற்குக் கைகண்ட அவிழ்தமாகும். அசாத்தியமென்று பரிகாரிகள் கைவிட்ட காலத்தில் தேகக்கூறும் கால பலமும் அறிந்து செய்தல் எவ்விதத்தாலும் நன்மையைப் பயக்கும். (1)

ஆக்கிராண மைனம்

452. பூண்டுதும்பை குங்குமப் பூசௌரி யாதொண்டை
தூண்டு நறுமஞ்சள் சொல்வேம்பும்—ஈண்டுமுயர்
வீம்புலிங்கம் நொச்சி விரும்பிச் சமன்கூட்டி
வேம்புநெய் விட்டரைத்து வை.

453. வைத்த மெழுகதனை வார்சேலை தன்மேலே
உய்த்துருட்டி நன்றே யுலர்த்திப்பின்—வைத்தியனே
பற்றிப் புகைகொடுக்கப் பாரசிரங் குத்தலிடி
யற்றே யொழியு மறி.

(க-து) வெள்ளைப்பூண்டு, தும்பைப்பூ, குங்குமப்பூ, சௌரிப்பழம், ஆதொண்டைப்பழம், கஸ்தூரிமஞ்சள், வேப்பம்பட்டை, லிங்கம், நொச்சியிலை முதலியவைகளைச் சமனெடையாகக் கல்வத்தில் போட்டு, வேப்பெண்ணெய் விட்டு நன்றாய் அரைத்து, மெழுகுபதத்தில் வாயகன்ற குப்பியிலிடுக. வேண்டும்போது கடலைப் பிரமாணம் மெழுகைச் சீலையில் தடவித் திரி

போல் திரட்டித் தீப்பற்ற வைத்து அதிலிருந்து வரும் புகையை முகர, தீராத தலைப்பாரம், தலையிடி, தலை நோய் முதலியவை குணமாகும். பத்தியம்: பாலன்னம் தவிர வேறொன்றும் ஆகாது; எ-ம். (2)

### வீர மெழுகு

454. கொடிக்கள்ளிச் சாற்றோடு கும்பமுலைப் பாலும்
படிய இருநாழிப் பற்றி—வடிச்சட்டித்
தன்னிற் பலம்வீரந் தானிட்டு நற்சுறுக்கை
உன்னித் தனித்தனியே ஊட்டு.

455. ஊட்டமெழு காகுங்கா லுற்ற வளவெடைக்கு
நீட்டிப் பனைவெல்லம் நின்றுறைய—வாட்டி
கடலைப் பிரமாணம் காட்டவிரு வேளை
உடலின் பிடிப்போடும் ஓது.

(க-து) அரைப்படி கொடிக்கள்ளிச்சாறும் அரைப்படி முலைப்பாலும் தனித்தனியாகச் சேகரித்து வைத்துக்கொண்டு ஒரு மண்ணோட்டில் ஒரு பலம் வீரம் சிறு துண்டுகளாக நறுக்கியிட்டு அடுப்பின்மீது ஏற்றிச் சிறு தீயாக எரித்து, ஒன்றன்பின் ஒன்றாய்ச் சுறுக்கிட்டுக் கொண்டுவரின் மெழுகாகும். (வீரங் கரைந்து சுண்டி மெழுகு பதமாகும்.) பின்னர் சமனெடை பனைவெல்லம் சேர்த்து நன்றாய் அரைத்துப் பத்திரப்படுத்துக இதனில் வேளைக்குக் குன்றி பிரமாணம் அல்லது சிறிதளவு அதிகப்படுத்தித் தினம் இருவேளை மூன்றுநாள் கொடுக்க மேக வாயுவினால் உண்டான எவ்விதமான பிடிப்புகளாயினும் குணமாகும். புளி தள்ளி இச்சாபத்தியமாக இருத்தல் அவசியமானது; எ-ம். (3)

### பிரசவ ரக்ஷணி

456. சாரங் கருப்பூரம் சார்தூபந் தன்னோடு
தோரலிங்க மோரெடையாய்ச் சேர்தூக்கிச்—சேரவதைக்
குற்றி மெழுகாக்கிக் குன்றியள வேயெடுத்து
வெற்றிலையி லீய விரும்பு.

457. விரும்பக் கருவுயிர்த்த வேதனையான் பின்னே
வரும்நா வறட்சியுடன் வாட்ட—முருஞ்சன்னி
சூதக்கட் டோடுவலி சொல்லு மதன்குத்தல்
ஓத விடமிலையா லோம்பு.

(க-து) நவாச்சாரம், கர்ப்பூரம், சாம்பிராணி, இலிங்கம் இவை களைத் தனித்தனி சூரணித்துக் கல்வத்திலிட்டு, சூடேறும்படி குழவியால் மர்த்தனம் செய்ய மெழுகாகும். இதனைக் குன்றி யளவாகத் திரட்டி உடனே காற்று நுழையாத சீசாவிலிடவும். வேண்டும்போது பிரசவித்த ஸ்திரீகளுக்கு வெற்றிலையில் ஒரு குளிகை வைத்து நிலைமைக் கேற்றபடி, தினம் ஒன்றல்லது இரண்டுவேளை மென்று தின்னும்படி கொடுக்கவும். இதனால் பிரசவித்த ஸ்திரீகளுக்கு உண்டாகும் நாவறட்சி, சுரம், ஜன்னி, அழுக்குத் தங்குதல், அடி வயிற்றுவலி அல்லது குத்தல் முதலிய பாதைகள் உண்டாகாதபடி ரக்ஷிக்கும்; எ-ம். (4)

## இலிங்க மெழுகு

458. திரிகடுகம் நல்லரத்தைச் சீராங் கிராம்பு
தெரியநீ சூரணங்கள் செய்தே—அரிதவற்றில்
ஒவ்வோர் பலமே உறவாக்கிக் கொண்டபின்
கவ்வையற மேற்சரக்குக் காண்.

459. காணலிங் கம்வீரம் கட்டாபூ ரஞ்சூத
மாணசெந் தூரமது மாண்புறவே—பூணவொன்
ருேர்கால்முக் காலரையே ஓதுகா சாகநிரை
சீர்பெறவே நீயெண்ணிச் சேர்.

460. சேர்த்துப்பின் மூன்றுதினம் தேன்விட் டரைத்தவுடன்
ஆர்த்தியுடன் தூதுளங்காய் அவ்வளவே—பார்த்துக்
கொடுக்க இருவேளை கூறுமேழ் நாளில்
குடைச்சல் பிடிப்போடுங் கூறு.

(க-து) சுக்கு, மிளகு, திப்பிலி, சிற்றரத்தை, கிராம்பு வகைக்கு ஒருபலமாகத் தனித்தனி பொன்மேனியாகவறுத்து இடித்துச் சூரண மாகச் செய்க. பின்னர் லிங்கம் ஒன்று, வீரம் கால், பூரம் முக்கால், ரசச் சிந்தூரம் அரை ஆக இவைகளை விராகனெடை வீதம் கல்வத்திலிட்டு, சித்தப்படுத்திய சூரணத்தையும் கூட்டி மெழுகு பதத்திற்குப் போதிய தேனை கொஞ்சங் கொஞ்சமாகவிட்டு தினம் ஒன்றுக்கு நான்கு சாமத்திற் குக் குறைவின்றி 3-நாள் வரையிலும் மெழுகுபதத்திலேயே அரைத்துச் சீசாவிலேனும், கொம்பு டப்பியிலேனும் வைத்திடுக. வேண்டும்போது தூதுளங்காய்ப் பிரமாணம் தினம் இருவேளை எழுநாள் சர்க்கரையில் புரட் டிக் கொடுக்க; கைகால் பிடிப்பு, சர்வாங்க குடைச்சல் முதலிய மேக வாயுக்கள் குணமாகும். பத்தியம்: ரோகத்தின் வன்மை மென்மைக்

கேற்றவாறு புளி தள்ளியும் தள்ளாமலும் ஆகாரம் கொள்ளல்வேண்டும். இம் மருந்து சில சரீரங்களுக்கு ஈரில் சுரப்பு காணில் உடனே நிறுத்தல் வேண்டும்; அதிக உபத்திரவம் செய்யாது; மருந்துசெய்து பழமை பெற் றிருப்பின் எவ்வித தோஷமும் கிடையாது; எ - ம். (5)

## கற்பூராதி மெழுகு

461. கட்டுலிங்கந் தன்னோடு கர்ப்பூரம் நல்லோமம்
இட்டுப் பலமாக ஈயின்தேன்—விட்டுறலி
லாட்டி மிளகளவே யாம்பேதி கட்கிய
ஓட்டமிடுங் கண்டளவி லொப்பு.

462. ஒப்பவிதன் பத்தியம் ஓதும்நொய் கோதுமையின்
உப்பிட்ட கஞ்சி உணவாகும்—தப்பில்லை
பத்தியங்கேள் மூன்றுநாள் பார்த்தகற்று நல்லன்னம்
சத்தியம் சொன்னேன் சரி.

(க - து) கர்ப்பூரம் சாம்பிராணி இவ் விரண்டையும் சமனளவாகத் தனித்தனிப் பொடித்து ஒன்றாகக் கலந்து வைத்துக்கொண்டு ஒரு ஓட்டின் மீது லிங்கத்திற்குச் சமனெடையாகத் தூளையிட்டு இடையில் லிங்கத்தை வைத்து, சிறு தீயாலேனும், கனத்த திரிபோட்ட விளக்கின் சுடரி லேனும் எரித்துத் தாளுருகின பதத்தில் புரட்டிக் கொடுத்து எண் ணெய் பசுமை வறண்ட சமயத்தில் நெருப்பைக் காட்டப் பற்றியெரியும். ஆறினபின் மீண்டும் முன்போல் செய்க. இப்படி 5 - முறை செய்ய இலிங்க மொருவிதமான கட்டாகும். அவ்வெடைக் கிணங்க கர்ப்பூரம், மண்ணில் லாமல் புடைத்தெடுத்த ஓமம் கூட்டி உயர்ந்த தேன்விட்டு 2, 3 - மணி நேரம் மெழுகு பதத்திலேயே அரைத்துச் சிமிழில் அடைத்திடுக. அஜீரண பேதி, வாந்திபேதி முதலியவைகட்கு அரை பணவெடை வீதம் கொடுக்கக் குணமாகும். பேதியாகுங் காலத்தில் 3 - மணி நேரத்திற்கு ஒரு தடவை யாகப் பேதி கட்டுமளவும் கொடுத்து வருக. இதற்குப் பத்தியம்: அதிக சலம்விட்ட கோதுமை நொய்க்கஞ்சி செய்து உப்பு இட்டு களை வராமல் கொடுத்து வருக; எ - ம். (6)

## விஷபேதி சங்காரணி

463. வீரம் வெடியுப்பு வெங்காரங் கர்ப்பூரம்
சார முடன்சீனம் தான்கழஞ்சாய்ச்—சேர

விதனெடு வன்னிகெற்ப மீறிரண்டாய்க் கூட்டிப்
பதமாய்த்தேன் விட்டாட்டிப் பார்.

464. பாரும் மெழுகதனில் பற்றியெடுத் தோர்குன்றி
தேரு மளவிற்ருன் தேனிலிடச்—சோரும்
விசபேதி வாந்தி மிகுநீ ரடைப்புக்
கசந்தோடும் காணக் கருது.

(க - து) வீரம், வெடியுப்பு, வெங்காரம், கர்ப்பூரம், சாரம், படிகாரம் இவைகள் வகைக்கு ஓர் கழஞ்சாகவும், இலிங்கம் நான்கு கழஞ்சாகவும், கல்வத்திலிட்டுத் தேன்விட்டு நன்ருய் உறவாகும்படி மெழுகு பதத்திலேயே அரைத்துச் சிமிழில் வைத்துக்கொண்டு சந்தர்ப்பத்திற்கு எற்றவாறு ஒன்றல்லது இரண்டு குன்றிப் பிரமாணம் தேனில் கொடுக்க வாந்திபேதியும், அதனல் தடைப்பட்ட சிறுநீரடைப்பும், சீதளமும் உடனே நிவர்த்தியாகும். அங்ஙனம் கொடுத்த 2-மணி நேரத்திற்குள் அவிழ்தம் வெளியாய்விடினும் அல்லது குணமில்லாவிடினும் மீண்டும் முன்போல் கொடுத்துக்கொண்டுவர, திருவருளால் குணமாகு மென்பது திண்ணம்; எ-ம். (7)

தங்கலிங்க மெழுகு

கலி விருத்தம்

465. வாங்கு லிங்கம் வழங்கிடு மோர்பலம்
சேங்க னிதரும் சீர்தயி லஞ்சுறுக்
காங்குத் தந்தே யதனுட னற்பரி
கோங்கு லாவவி ராகனெடை கொண்டே.

466. கொண்டு முன்னநாங் கூறிய நெய்யையே
விண்ட ரைத்து விளங்கிடு கொப்பரை
கண்டுண் மேவிடக் காண்குவை பால்படி
ரண்டு மைந்திறு லாவி யெரிகொடே.

467. எரித்த வத்துவை யேற்க வுளுந்தெடை
சரித்த தேகந் தளர்ச்சியை யற்றிடும்
வருத்துங் காற்பிணி வந்த வழிசெல
பெருத்த ரோகங்கள் பேசுதற் கில்லையே.

(க - து) ஒரு பலம் இலிங்கத்தை மூன்றுநாள் பரியந்தம் சுத்தியாகும்பொருட்டு முலைப்பாலில் ஊறப்போட்டெடுத்து அதனை ஒரு

புது மண்ணோட்டி விட்டுச் சிறுதீயில் எரித்துச் சேங்கொட்டை *குழி தைலத்தால் நான்குசாமம் புரட்டிப் புரட்டிச் சுறுக்குக் கொடுக்க இலிங்கமானது தைலத்துடன் இயக்கப்பட்டு மெதுவாகும். அப் பக்குவத்தில் ஊசியால் குத்திப்பார்க்க நொறுங்கும், அத்தருணம் இலிங்கத்தைக் கல்வத்திலிட்டு அதனுடன் ஒரு விராகனெடை தங்கரேக்கைச் சிறு துண்டுகளாகக் கத்திரித்துக் கொஞ்சங் கொஞ்சமாகப் போட்டு நன்றாய் அரைக்கவும். அரைப்பதற்குப் போதிய பசை யில்லாவிடின் வேண்டிய அளவு சேங்கொட்டைத் தைலத்தைத் துளித்துளியாக விட்டு இலிங்கம் இளகாமல் மெழுகு பதத்திலேயே இருக்கும் பொருட்டு இரண்டு மூன்று நாள் தங்கமும் இலிங்கமும் உறவாகும்படி அரைக்கவும்.

பின்னர், ஒரு முற்றின தேங்காய்க் கொப்பரையை மேலிருக்கும் மெல்லிய தோலைச் சிறு கத்திகொண்டு சீவித் தலைப்புறம் சுண்டுவிரல் நுழையும்படியான துவாரம் செய்து அதன் வழியாக முன் சித்தப் படுத்திய தங்கலிங்க மெழுகைச் செலுத்திக் கண்ணில்லா மூங்கிலைச் சீவியாவது அல்லது வேறு மரவாப்பையாவது இட்டுச் சந்துக்கு உழுத்தமாவைச் சலம் விட்டுப் பிசைந்து பூசி கொப்பரை தெரியா வண்ணம் கும்ப கலசத்திற்கு நூல் சுற்றுவதைப்போல் நெருக்கமாகவும் அழுத்தமாகவும் சுற்றி வைத்துக்கொள்க, இப்பால், மறுபக்கத்தில் குறிப்பிட்டபடி 10-படி ஜலம் கொள்ளக் கூடியதும் உயரமுடையதுமான ஒரு மட்பாண்டத்தைச் சித்தப்படுத்தி அதனில் 5-படி பசுவின் பால் விட்டுக் கொப்பரை, பாலில் மிதக்காமல் பாண்டத்தின் அடித்தூருக்கு மூன்று அங்குலத்துக்குமேல் நிற்கும்படியாக ஒரு சுத்தமான கல்லையுங் கூட்டி ஒரு கயிற்றினால் கட்டித் தொங்கவிட்டு மற்றோர் முனையைப் பாண்டத்தின் வாய்வரம்பின்மேல் ஒரு சட்டமமைத்து அதன் நடுவில் கட்டி அடுப்பிலேற்றி, பால் பொங்கும் குணமுடைத்தாதலால் ஜாக்கிரதையாய்ச் சிறுதீயிட்டு எரித்துவருக. பால் சுண்டி கொப்பரைக்குக் கீழ் வரும்போது கொப்பரையை எடுத்து ஒரு இரவெல்லாம் ஆறவிட்டு மறுநாள் கொப்பரை மேல் சுற்றியுள்ள நூல்களைக் களைந்து இரண்டாகத் துண்டித்து உள்ளிட்டிருக்கும் மெழுகைக் கத்திகொண்டு வழித்துச் சிமிழில் அடைத்து வைத்திடுக. இதனில் பச்சைப்பயறு அளவு அல்லது உளுந்தளவு சர்க்கரையில் புரட்டி, தினம் இருவேளை ஒரு மண்டலம் உண்ண, குன்மம், வாதசம்பந்தமான பல பிணிகள், நரம்பின் பலவீனம், நபும்சகம் முதலியவைகள் நிவர்த்தியாவதுடன், நல்ல தேஜசும், இரத்தப் பெருக்கமும் உண்டாவதற்கு இன்றியமையாத திவ்விய ஔஷதமாகும்; எ-ம். (8)

* இதன் செய்பாகத்தைத் தைல வகுப்பில் காண்க.

பத்தியம்: நெய், பால் முதலியவைகள் சேர்ந்த நல்ல ஆகாரங்கள் கொள்ளல் வேண்டும். மதுபானம், மாதர்பரிசம் இவை மருந்துண்ணும் வரையில் கூடா.

குறிப்பு:—இம் மெழுகை ஒரு மண்டலம் உட்கொண்டாலன்றி இதன் பயன் நன்று விளங்காதாதலான், நான்கு முறைபாகப் பாவித்து மும்மூன்று நாள் மருந்தில்லாமல் இடைவிட்டுச் சாப்பிடவும்.

## முற்பாகத்தில் கூறப்பட்டுள்ள தோலாந்திர விதி




### சித்திர விளக்கம்

1. நீளமான மட்பாண்டம்
2. பசுவின்பால் விட்டிருப்பது
3. கொப்பரை, பாலில் மிதக்காமல் இருக்கக் கயிற்றினுல் கட்டி அதனுடன் சிறிது பளுவுள்ள கல்லைச் சேர்த்துத் தொங்கவிட்டது
4. கயிற்றின் மற்றோர் முனையைப் பாண்டத்தின் வாய்வாயில் ஓர் சட்டமமைத்துக் கட்டியிருப்பது
5. அடுப்பிலேற்றி எரிப்பது

மேகவிரணக் களிம்பு

468. பூரஞ் சிங்கிப் புகழ்படி காரமு
நேர லிங்கமு நேர்நிரை யாட்டியே
சார வெண்ணெயிற் சற்றுக் கலக்கித்தாம்
தேரப் புண்புரை தீரமேற் பூசுமே.

(க - து) பூரம், மிருதார்சிங்கி, படிகாரம், இலிங்கம் இவைகளைச் சமனெடையாகக் கல்வத்தில்போட்டு நன்றாய் அரைத்து வைத்துக்கொண்டு, வேண்டும்போது வெண்ணெயில் சிறிது மத்தித்து மேகவிரணங்களுக்கும், கொருக்கு முதலிய இரணங்களுக்கும் பூச ஆறும்; எ - ம். (9)

---

## திராவக வகை

நவ உப்பு திராவகம்

469. பத்துவெடி யுப்பும் படிகார மாறுபலம்
நத்துவெங்கா ரஞ்சார நல்லிந்து—சுத்த
கறியுப் பொருநான்கு காணுமன்ன பேதி
அரைபூரம் மோரரைக்கா லாம்.

470. ஆன சரக்கோ டதில்வீரம் வீசமிட்
டீன மறவிடித்தே யேலுமண்—பானையதிற்
போட்டுமண் வாலையைமேற் போகவிட்டுச் சீலையுறக்
காட்டியழற் காரநீர் காண்.

471. காணத் துளியைந்து காதலித்து நன்னீரில்
வேணக் கலந்துண்ண வேளைக்கு—மாணமுடன்
தீரும்பக் கச்சூலை தீராத மாரடைப்பைச்
சாரும் வலியோடுஞ் சாற்று.

472. சாற்ற வயிற்றுநோய் சார்குன்மம் வாந்தியுடன்
மாற்றும் புளியேப்பம் மாதருது—பாற்றியே
கப்புங்கீழ் சூலையுடன் காணுங் குடலிரைச்சல்
ஒப்புடனே யோடிவிடு முன்.

(க - து) வெடியுப்புப் பலம் 10, படிகாரம் பலம் 6, வெங்காரம் - நவாச்சாரம் - இந்துப்பு - கறியுப்பு வகைக்குப் பலம் 4, அன்னபேதி பலம் $\frac{1}{2}$, பூரம் பலம் $\frac{1}{8}$, வீரம் பலம் வீசம் இவைகளை இடித்து ஒரு மட்பாண்டத்தில் போட்டு அதற்குப் பொருத்தமான மண் வாலையைச் செருகிச் சீலைசெய்து காய்ந்தபின் அடுப்பிலேற்றி மறுபக்கத்தில் கூறியவண்ணம் திராவகம் வாங்கவும். இதில் 3 - துளி முதல் 5 - துளிவரையில் ஒருவாய் சலத்தில் விளாவி

தினம் இருவேளை உட்கொள்ள பக்கசூலை, மாரடைப்பு, மார்நோய், வயிற்றுநோய், புளியேப்பம், இடுப்புநோய், வாந்தி, அஜீரணம், குடலிரைச்சல் முதலிய ரோகங்கள் குணமாகும். இத் திராவகம் கொள்ளுங் காலத்தில் வாயு சம்பந்தமான பதார்த்தங்களையும், போகம், மதுபானம், புகை முதலியவைகளையும் தள்ளி இச்சா பத்தியமாக ஆகாரங் கொள்வதுடன் பால், நெய் முதலியவைகளையும் ஜீரணசக்திக்கு ஏற்றவாறு அதிகப்படுத்திக் கொள்ளல் வேண்டும்; எ - ம். (1)

இம் மருந்தை ஒருமுறை ஏழு நாள் கொண்டபின் சில தினம் விட்டு மீண்டும் ஆரம்பித்து முன்போல் ஒருமுறை சாப்பிடுக. இப்படி மூன்று முறை கொள்ள, முற்கூறப்பட்ட வியாதிகள் பூரண குணமாகும் என்பதில் ஐயமில்லை.

## திராவக வாலை இயந்திரம்




### சித்திர விளக்கமும், செய்பாகமும்

1. கடம்
2. திராவகத்திற்காகக் கடத்தில் உப்பிட்டிருப்பது
3. மண்வாலையைச் செருகி யிருப்பது
4. வாலையின் மேற்பாகத்தில் விட்ட சலத்தை வெளியாக்கும் குழை

5. குளிர்ந்த சலம் விட்டிருப்பது
6. திராவகம் உள் தங்கும் இடம்
7. திராவகம் வெளிப்படும் குழை

உப்பு இனங்களை இடித்துக் கல்வத்திலிட்டு அதற்குப் பொருத்தமான மண்வாலையைச் செருகி மண்சீலை செய்து, காய்ந்தபின் அடுப்பேற்றி எரிக்கும்போது வாலையின் மேல்குழையை அடைத்துக் குளிர்ந்த சலம் விட்டு வைக்கவும். மேல் விட்டசலம் வெப்பமாகும்போதெல்லாம் குழையைத் திறந்து நீரை வெளியாக்கி, மீண்டும் குழையை அடைத்துப் புதிதாகக் குளிர்ந்த சலம்விட்டு எரிக்க, உட்புறமாக உப்பினிடமிருந்து சத்தாக எழும் ஆவி ஜல ரூபமாக வேறுபட்டு உள்ளிடத்தில் நிரம்பி உட்குழையின் வழியாகச் சொட்டும். அதனை வசதியான குப்பியிலிட்டுக் கல் கார்க்கால் அடைத்து வைத்துக்கொள்க. உள்ளிட்ட உப்புகள் சிறு சப்தத்துடன் வெடிக்குமாயின் திராவகம் வராதென்பதை யறியவும். பின்னர், கடத்தினின்று வாலையை எடுத்து உள்ளிட்ட உப்புகளை நீக்கி வாலையையும் கடத்தையும் ஒரு பெரிய பாண்டத்தில் சலம்விட்டு அதனில் ஓர் நாள் ஊறப்போட்டு அலம்பி எடுத்துக்கொள்க. இங்ஙனம் செய்யாவிடின் கடமும் வாலையும் உளுத்துக் கெடும்.

### பஞ்சலவண திராவகம்

473. பாரரும் வெடியுப்புங் கெடுப்பா யொன்று
பார்க்கவே சிலமரைக் காரங் காலாம்
நேராருஞ் சாரமதிங் கரைக்கா லோடு
நிகழ்த்துகறி யுப்பதுவே வீச மாகும்
சீராருந் திராவகமே யினிது வாங்கிச்
சேர்க்கவே சலத்திலெழு துளியாங் காறும்
சூராருஞ் சூதகநோய் வாய்வு குன்மம்
தொந்தித்த மார்புநோய் தொலையுந் தானே.

(க - து) வெடியுப்பு 1, படிகாரம் $\frac{1}{2}$, வெங்காரம் $\frac{1}{4}$, நவாச்சாரம் $\frac{1}{8}$, கறியுப்பு வீசம் சேர் அளவாய்க் கல்லுரலில் போட்டுக் கடப்பாறையால் தூளாக இடித்து, மட்கடத்தில் இட்டு, மண் வாலையைச் செருகிச் சீலைமண் செய்து, காய்ந்தபின் முன்போல் திராவகம் வாங்கவும்; இதில் வேளைக்கு 7 - துளியாக ஒருவாய் கொள்ளக்கூடிய குளிர்ந்த சலத்தில் விளாவி தினம் இருவேளை உட்கொள்ள ஸ்திரீகட்குண்டாகும் சூதகவலி, வாய்வு, குன்மம், மார்புநோய் முதலியவைகள் நீங்கும். இரவில் படுக்கைக்குப் போகும்போது பசுவின் பால் காய்ச்சிக் கற்கண்டுதூள் போட்டுச் சாப்பிடவேண்டும். வாயு பதார்த்தங்களை நீக்கி இச்சாபத்தியமாக இருத்தல் மிகுந்த நன்மையைப் பயக்கும்; எ - ம்.

(2)

வேறு முறை

லவண திராவகம்

474. ஓதப் பார்வெடி யுப்பறு சீனமும்
தீதி லாத்திரி சேர்த்திடு சாரமும்
பூதி லாக்கறி யுப்பிவை பாதியே
வேதை யாக்குந் திராவகம் வேண்டுமே.

475. வேண்டு திராவகந் தன்னை விரும்பிடப்
பாண்டு குன்மம் பறித்திடு பீலிகை
ஈண்டி ரோமென் றெழும்பி யலைகடல்
தாண்டு மென்று தவமுனி சொற்றதே.

(க - து) வெடியுப்பு ஆறு, படிகாரம் மூன்று, சாரம் ஒன்றரை, கறியுப்பு ஒன்றரை எடைகளாகக் கல்லுரலில் போட்டு நன்ருய் இடித்து, மட்கடத்தில் இட்டு, வாய்க்குப் பொருத்தமான வாலையைச் செருகி மண் சீலைசெய்து, காய்ந்தபின் முன்போல் திராவகம் வாங்கவும். இதில் வேளைக்கு 3, 5 - துளி வரையில் ஒரு வாய் சலத்தில் விளாவித் தினம் இரு வேளை உண்டுவரின் ஜுரக்கட்டி, சூதக்கட்டி, குன்மம், பாண்டு முதலிய ரோகங்கள் நிவர்த்தியாகும் இச்சாபத்தியம்; எ - ம். (3)

வேறு முறை

476. விள்ளவெடி யுப்போடு வீருன சோற்றுப்புக்
கொள்ளப் படிகாரம் கோதில்லா—துள்ளநவாச்
சாரம் பலமெட்டு சாற்ற வகைக்காம்வெங்
காரம் பலமிரண்டாங் காட்டு.

477. காட்டிமண் வாலைதனில் காணுந் திராவகமே
கூட்டுதுளி யைந்து குடிநீரில்—நீட்டிவிடப்
பேதியுடன் வாந்திப் பிறங்கியிடு சீதளமும்
சோதிக்க ஓடிவிடுஞ் சொல்.

(க - து) வெடியுப்பு, சோற்றுப்பு, படிகாரம், நவாச்சாரம் வகைக்குப் பலம் 8, வெங்காரம் பலம் 2 இவைகளை நன்ருக இடித்து மட்கடத்தில் விட்டு வாலையைச்செருகி, சீலைசெய்து காய்ந்தபின், முன்போல் திராவகம் வாங்கவும். இதனைக் கல்கார்க்குச் சீசாவில் காரங்கெடாம லிருக்கும்படி விட்டு அடைத்து வைக்கவும். வேண்டும்போது 5 - முதல் 10 துளி ஒரு வாய் சலத்தில் விட்டுக் கலந்து கொடுக்க வாந்திபேதி நிவர்த்தியாகும்.

சிகிச்சை விதங்களையும், பத்திய விஷயங்களையும் அடுத்துக் கூறப்பட்ட அஷ்டாங்க திராவக முறையிற் காண்க. (4)

அஷ்டாங்க திராவகம்

கட்டளைக் கலிப்பா

478. வாந்தி பேதிக் குயிர்த்துணை யாகவே
வழுத்தக் கேண்மி னட்டாங்க திராவகம்
காந்தி மாமதி யாளர் வகுத்துள
கஷ்டசாத்திய கொள்ளைக் கிதுகொலை
சாந்தியாவதற் கையமொன் றில்லையால்
சபதம் செய்திதை யுண்டன்பின் பார்க்கலாம்
ஏந்திக் கல்லுப் பிடாலவ ணங்கறி
என்றி வைவகைக் கோர்பத்துத் தானெடே.

479. எடுத்தி டாய்தொடி யுப்பு பலத்தோ
டேந்து வாய்வெடி யுப்புப் பனிரண்டு
தொடுத்தி டாய்படி காரம் பனிரண்டு
தூய்மை சேர்நவச் சாரம் பலந்திரி
தடுத்தி டாத வட்டுப்புப் பலந்திரி
தானி டித்ததை வாலையில் தாக்கிடக்
கொடுத்தி டுங்கடுங் காரத் திராவகங்
கொள்ள நோய்க்கிவை கொள்ளைய தாகுமே.

480. ஆகு வாகன தேவ னடிதுணை
யான திராவகந் தன்னை யிருபது
வாகு வாமிரு பத்துட னைந்துளி
வண்மை யோடு சலத்திற் கொடுத்திடச்
சோக மானநீர்க் கட்டை யுடைத்திடுந்
தொல்லை பேதியும் வாந்தியு நின்றிடும்
தேக மார்சிறு நீரிறங் காவிடின்
திரும்பப் பன்னிரண் டுத்துளி நீட்டே.

481. நீட்ட வேகொடுங் கொள்ளைநோய் நீங்கிடும்
நீரி றங்கு நெடுங்களை மாறிடும்
வாட்ட மேபுரி வாந்தியு நீங்கியே
வந்த சீதளந் தீதள வாகிடும்
காட்டொ ணதுபெ ருந்திண்டி பார்லியின்
கஞ்சி போட்டுத் தெளிந்தநீ ருட்கொடு
வேட்டு ஜீரண சக்திய துற்றபின்
வேண்டு மான வுணவதைக் கொள்ளுமே,

(க-து) கல்லுப்புப் பலம்-10, பிடாலவணம் பலம்-10, கறியுப்புப் பலம்-10, வளையலுப்புப் பலம்-10, வெடியுப்புப் பலம்-12, படிகாரம் பலம்-12, நவாச்சாரம் பலம்-3, அட்டுப்புப் பலம்-3 இவைகளை இடித்து ஒரு மட்கடத்தில் போட்டு, அதன் வாய்க்குப் பொருத்தமான வாலையைச் செருகி, சீலைமண் செய்து, காய்ந்தபின் அடுப்பின்மீது வைத்து, முன்போல் திராவகம் வாங்கவும். இதில் 20-முதல் 25-துளி வரையில் ஒரு வாய் கொள்ளக்கூடிய குளிர்ந்த சலத்தில் விளாவி விஷபேதி கண்டவர்களுக்குக் கொடுக்க, அரைமணி நேரத்திற்குள் சிறுநீரை வெளிப்படுத்தும். பின்னர்ப் படிப்படியாகப் பேதி நிற்கும். ஒரு சமயம் கொடுத்த மருந்தானது குறைந்தது கால்மணி நேரமாவது உள் தங்கியிராமல் வாந்தியாய் விடின், அத்திராவகத்தையே மீண்டும் 12-துளியை ஒரு வாய் சலத்தில் கலந்து கொடுக்கவும். இவ்வித பிரயோகங்களுக்குள் வாந்தி நின்று சிறுநீரும் வெளியாகி பேதியும் நின்றுவிடும். அக்காலத்தில் சீதளம் மிகுந்திருப்பின் இந்நூலில் கூறப்பட்ட விஷபேதி சங்காரணி என்னும் மெழுகைக் கொடுக்க, அவ் விஷபேதிக்குள்ள பலவித தோஷங்களையும் நிவர்த்தி செய்யும்.

பத்தியம்: பார்லி அரிசியை வறுத்து உடைத்து மிகுதியாகச் சலம் விட்டுக் கஞ்சிசெய்து தெளிவாக சலத்தை வடித்து, சிறிது உப்பு சேர்த்து வேண்டுமான அளவு களைப்பு வாராதபடி கொடுத்துக்கொண்டு வருக. வாந்தியும், பேதியும் நின்று பசிதீபனம் அதிகரிக்கும் வரையில் காரசாரம் சேர்ந்த அன்னத்தைக் காட்டாது வேண்டுமாயின் கஞ்சியைச் சிறிது குழம்பு பதமாகக் கொடுத்துவருக. பேதி நின்ற மூன்றுவது நாள், இரண்டு முறையாக வடித்த அன்னத்துடன் காரசாரமற்ற குழம்பாகவும், எளிதில் ஜீரணிக்கக்கூடிய பதார்த்தங்களாகவும், கூட்டிப் பத்தியம் செய்க. ஒருவாரம் வரையில் அஜீரணத்திற்கு இடங்கொடாம லிருத்தல் நன்று. பத்தியக்கேட்டால் மீண்டும் பேதிகாணில் எவ்வித மருந்துக்களுக்கும் வசப்படாது; எ-ம். (5)

## தச லவண திராவகம்

482. கான்ற வெடியுப்பும் கார்சீன மீராறு
ஈன்றகல் லுப்போ டினியமதி—நான்குபலம்
சாரங் கறியுப்புச் சாற்றப் பலமிரண்டு
காரை மரைமூன்றுங் கண்டு.

483. கண்டன்ன பேதிதனைக் காதலித்தே யைந்துபலம்
விண்டபூ நீர்துருசு விள்ளபலங்—கொண்டரையாய்த்
தூக்கி யிடித்துத் துகளாக்கி யிட்டுகடம்
ஆக்கநீர் வாலையிலா மாங்கு.

484. ஆங்கு வருங்கார வம்புகத்தி லைந்துதுளி
தாங்கும்வாய் நீரளவிற் ருன்கலந்து—பாங்குடனே
உண்ண விருவேளை ஓதுநா ளேழதனில்
பண்ணுங் குணமதனைப் பார்.

485. பார்க்க வயிற்றுவலி பாயும் பெருஞ்சூலை
மார்க்க மதிசாரம் மார்புநோய்—மூர்க்கமுடன்
வந்த விஷபேதி வாயு ருதுகட்டி
சொந்தமிலை யென்றேடுஞ் சொல்.

(க-து) வெடியுப்பு, படிகாரம் வகைக்குப் பலம்-12, கல்லுப்பு, இந்துப்பு வகைக்குப் பலம்-4, நவாச்சாரம், சோற்றுப்பு வகைக்குப் பலம்-2, வெங்காரம் பலம்-1½, அன்னபேதி பலம்-5, பூநீர், துருசு வகைக்குப் பலம்-½ இவைகளை யெல்லாம் ஒன்று சேர்த்து இடித்துக் கடத்திலிட்டு வாலைச்செருகி திராவக விதிப்படி இறக்கவும். இந்தத் திராவகத்தின் 5-முதல் 10-துளி வரையிலும் ஒரு மிடறு சலத்தில் கலந்து தினம் இருவேளை 7-நாள் சாப்பிட வயிற்றுவலி, சூலை, குன்மம், அஜீரணம், மார்புவலி, வாந்திபேதி, சூதகவாயு அல்லது கட்டி, ஜாரக்கட்டி முதலியவைகள் குணமாகும். பல்நோய், வெட்டுகாயம், வாயுகட்டி முதலிய வற்றிற்குச் சிறிது சலத்துடன் கலந்து அவ்விடத்தில் தடவ வலியை நீக்குவதுடன் சீழ் கொள்ளாமல் ஆறும்; எ-ம். (6)

## வெடியுப்புத் திராவகம்

### புகை நீர்

486. காணும் படிகாரம் காதலித்தே ஐயைந்து
பூணுங் கறியிணங்கள் பூட்டிதசங்—தோணவிதை
போட்டுக் கடமொன்றில் பொத்தியொரு வாலையிட்டுக்
கூட்டுமண் சீலையிடக் கூறு.

487. கூறமண் சீலை குறித்தேழு செய்துலர்த்தி
ஆறரவி காட்டி யடுக்களையில்—ஏறெரித்து

முன்னீரைத் தள்ளி முடிவில் வருங்காரப்
பின்னீரைக் கொண்டிடவே பேசு.

488. பேச வொருமூன்று பெய்துதுளி நீர்கலந்து
நேச முடனுண்ண நீடித்தே—வாசமுள
குன்ம வலியோடக் கூறினரே நாதாக்கள்
இன்பப் புகைநீரா மென்று.

(க - து) படிகாரம் பலம் - 25, கறியுப்பு பலம் - 10, வெடியுப்பு பலம் - 10, இவை தம்மைக் கல்லுரலில் போட்டிடித்து மெல்லிய தூளாகச் செய்து ஒரு மட்கடத்திலிட்டு, அதற்கு ஏற்றவாறு மண்வாலையைச் செருகி, மண்சீலை எழுசெய்துலர்த்தி அடுப்பிலேற்றி, முறைப்படி திராவகம் வாங்கவும். இதில் முதலில் காணும் வெளுத்தநீரை நீக்கிப் பின் வரும்படியான மஞ்சள் நிறத்தையுடைய காரமுள்ள திராவகத்தை மாத்திரம் சேகரித்து கல்கார்க்குச் சீசாவில் பத்திரப்படுத்தவும். வேளைக்கு இரண்டு மூன்று துளி பிரமாணம் ஒருமிடறு சலத்தில் விளாவி, தினம் இருவேளை உட்கொள்ள எட்டுவிதமான குன்மங்களையும் பரிகரிக்கும். இந்தத் திராவகத்திற்கே முன்னோர் புகைநீரென விதந்து கூறுவாராயினர். ஜீரணசக்திக்கிசைந்தபடி பத்தியங் கோடல் வேண்டும்.

இத்தகைய திராவகம் சிற்றளவாக இறக்கவேண்டின் மறுபக்கத்தில் குறிப்பிட்ட சித்திரத்தின்படி ஒரு குடுவையில் அரைபாகத்திற்கு மேற்படாது உப்பினங்களை இடித்துப்போட்டு, அதன் வாய்க்குப் பொருத்தமுள்ளதும், அடிமட்டமின்றி, உள்ளே குவிந்து இருப்பதுமான புட்டியின் நடுவில் ஒரு துவாரஞ்செய்து குடுவையின் கழுத்தில் செருகி, புட்டியின் கழுத்திற்கும் குடுவையின் கழுத்திற்கும் கம்பியால் வரிந்துகட்டி, இவ்விரண்டு பொருத்து வாய்க்கு மண் சீலைசெய்து காய்ந்தபின் அடுப்பேற்றி எரிக்கும்போது, புட்டியின் வாயைச் சடையால் அடைத்து ஒரு சீலையைச் சலத்தில் நனைத்து ஈரமிருக்கப் பிழிந்து புட்டியின்மேல் சுற்றிவைக்க. சீலை வெப்பப்படின் மறுவலும் மேற்படி சீலையை எடுத்துக் குளிர்ந்த சலத்தில் நனைத்துச் சுற்றவும். இப்படி வெப்பமாகும்போதெல்லாம் குளிர்ந்த ஜலத்தில் நனைத்துச் சுற்றி வருக.

இவ்வமயம் சாக்கினின்றெழும் ஆவி, புட்டிக்குள் ஏறி நீராக வடிந்து உள்ளிடத்தில் திராவகம் தங்கும். அதன் வாய் அடைப்பைத் திறந்து பக்குவமாய்ச் சாய்த்துத் திராவகத்தைக் கொண்டபின் மீண்டும் திராவகம் கிடைக்கும் வரையில் எரித்து எடுக்கவும்; எ - ம்.




## சித்திர விளக்கம்

1. குடுவை
2. புட்டி
3. துவாரம்
4. புட்டியின் கழுத்திற்கும் குடுவையின் கழுத்திற்கும் கம்பி கட்டி யிருத்தல்
5. புட்டியின் வாய் சடை ( கார்க்கு )
6. திராவகம் தங்கும் இடம்

குறிப்பு:—சாதாரணமாய் உப்பு இனங்களைக்கொண்டு செய்யும் திராவகங்களெல்லாம் குன்மம், ஜுரக்கட்டி, சூதகக்கட்டி, வயிற்றுநோய், இடுப்புநோய், வாயுவினாலுண்டான மார்புநோய், அஜீரண பேதி, வாந்தி, விஷபேதி முதலியவைகளைக் குணப்படுத்தும். முதலில் வேளைக்கு 3 - துளி வீதம் தினம் 2, 3 - வேளை கொடுக்கவும். மூன்றுநாளில் சிறிதும் குணம் ஏற்படாவிடின் துளியைச் சிறிது அதிகப்படுத்திக்

கொள்க. இங்ஙனம் துளியை அதிகப்படுத்திக் கொடுக்க. 10 - துளிக்கு மேற்படின் இரு வேளைக்குண்டான 20 - துளியை நான்குமணி நேரத்திற்கு ஒருமுறை 5 - துளி வீதம் சலத்தில் விளாவிக் கொடுத்தல் விசேடமான குணத்தை யுண்டாக்குவதுமன்றி, ரோகியையும் கஷ்டப்படுத்தாது. வாந்திபேதிக்கு மாத்திரம் முதலில் 20, 25 - துளியாக ஆரம்பித்துச் சிறுநீர் வெளியாகும் வரையில் மணிநேரத்திற்கு ஒருமுறை முன் கொடுத்த அளவில் அரையாகவும், அதற்குப்பின் அதிலரையாகவும் குறைத்துக்கொண்டே வருதல் வேண்டும்.

---

# ஒழிபு

அயகற்பம்

489. கடுக்காயின் நற்றோலே காதலித்தோர் வீசை
விடுத்துக் கடமொன்றில் வெந்நீர்—கொடுத்துப்
படிமூன்றே யிட்டெரித்துப் பார்த்தது சுண்டப்
பிடித்துப் பிழியவே பேசு.

490. பேசுமந் நீரைப் பிறங்க வொருகடத்தில்
வீசுந்தீ யிட்டெரித்து வெப்பமிக—மாசற்
றிரும்பி னரப்பொடியை யிட்டுப் பலமே
வருநுரையைக் கொள்ளவே வாங்கு.

491. வாங்கும் நுரையதனை வாட்டமுறக் காரோட்டில்
தேங்கத்தா னிட்டுத் தெரிப்பாக—ஓங்கத்
துடிரவியில் நான்மூன்று தோய வுலர்த்திப்
பொடித்தேநீ குப்பியினிற் போடு.

492. போட்டவய கற்பம் புகழ வொருகுன்றி
நீட்டிவர நெய்யதனில் நீடித்தே—நாட்டமுடன்
கொள்ள விருபோது குத்தலுற்ற மேகரணம்
விள்ளவிட மில்லை விளம்பு.

493. விளம்பவினி பத்தியந்தான் வீறுபுளி நீக்கித்
தளும்பநெய் கொள்க தவறில்—வளமான
தேகமன லாவதொடு செப்ப மிகுமெரிச்சல்
ரோகங்கூ டாதே புகல்,

(க - து) விதை நீக்கிய ஒரு வீசை காபூல் கடுக்காய் (சதை மிகுந்தது) ஒரு புது குண்டு சட்டையில் போட்டு மூன்று படி சலம்விட்டு ஒரு படி சலமிருக்கச் சுண்டக்காய்ச்சி ஆறவிட்டு நன்ருய்ப் பிசைந்து, உரப்பான சீலையில் போட்டு வடிகட்டிப் பின்னர் கிழிகட்டிப் பிசைந்து பிசைந்து உள்ள சலத்தை யெல்லாங் வாங்கி வேறு சட்டியில் வைத்துக்கொள்க முன்னர் எரித்த சட்டியைச் சலம்விட்டலம்பாமல் வஸ்திரத்தால் சுத்தி செய்து அதனில் இக் கியாழத்தை விட்டு மீண்டும் அடுப்பின்மீது வைத்துக் காய்ச்சி, கொதிக்குந்தறுவாயில் புதிதாக அராவிய அயப்பொடி 1 - பலம் போட்டுக் கிளறிக்கொண்டுவர நுரை ஏராளமாக உண்டாகும். இதனை குவிந்த சல்லிக் கரண்டியால் வழித்து வழித்து சலம் சொட்டிய பின்பு நுரையை மாத்திரம் பீங்கான் தட்டுகளில் விட்டு இரவி முகத்தில் உலர்த்துக. நுரை காணுதபோது கியாழம் பிரயோசன மற்றதாகும். இங்ஙனம், உலர்த்திய நுரையானது கறுப்புச்சாந்து வண்ணமிருக்கும். இதனைக் கல்வத்திலிட்டு நன்ருய் அரைத்துக் காற்று நுழையாத கல்கார்க்கு இட்ட சீசாவில் அடைத்திடவும். குன்றிப் பிரமாணம் தினம் காலை மாலை நெய்யில் கொடுக்க ஒரு வாரத்திற்குள் மிகுதியான இரத்தத்தை யுண்டாக்குவதுடன் இரத்தக் கெடுதியினல் வெகு நாள் ஆருதிருந்த விரணங்களையு மாற்றும். இதன் பூரண குணத்தை 10 - முதல் 90 - நாளில் அறியலாம். எலும்பைப் பற்றி ஆருதிருந்த மேகவிரணங்களையும் ஆற்றும்; இம்மருந்தைக் கொடுக்குங்காலத்தில் ஜீரணசக்திக்குத் தக்கபடி ஒவ்வொரு நாளும் 5 - பலம் நெய்க்குக் குறையாமல் ஆகாரங்களில் சிறிது சிறிதாகச் சேர்த்துண்ணல் வேண்டும். ஆரம்பத்தில் அவ்வளவு நெய் கொள்ளாவிடினும் மருந்து உட்செல்லச் செல்ல ஜீரணத்திற்குக் கொண்டுவரும். நெய் அதிகமாகச் சேராவிடில் தேக எரிச்சல், வயிற்றுநோய், சிலசமயம் சீதபேதி முதலியவைகளை உண்டாக்கும். இம் மருந்திற்கு முக்கிய பத்தியம்: புளிப்பு வகைகளை முற்றிலும் நீக்கி இருப்பதோடு, ஸ்திரீ சம்பந்தம் நீக்கவேண்டும். நீடித்து உண்ணும்படியான காலத்தில் 10 - நாள் ஒரு முறையாகக் கொடுத்து ஒரு வாரம் மருந்தில்லாது விட்டு, மீண்டும் ஆரம்பித்து முன்போல் கொடுக்கவும். இப்படிப் பூரண குணமாகும் வரையில் கொடுத்து வரவும். மருந்து விட்டிருக்கும் சமயத்தில் ஸ்நானம் க்ஷவரம் செய்துகொள்க. சிறிது புளியும் கூட்டிக்கொள்ளலாம்; எ - ம். (1)

சிரநீர் பேதி

494. நல்லெண்ணெய் காற்பலத்தி னுடெருக்கன் பாலதனைச்
சொல்லுதுளி ஈரைந்து கொட்டியபின்—வெல்லுரவில்

நம்பியொரு சொட்டதனை நாசிற்று னீட்டிடவே
தும்பலினால் நீர்வடியுஞ் சொல்.

(க - து) அப்பட்டமான ஒருபலம் நல்லெண்ணெயில் 10 - துளி எருக்கன் பாலைக்கறந்து விட்டுக் குலுக்கி, நாசியில் நன்றாய்ச் செல்லும்படி ஒன்று அல்லது இரண்டுதுளி விட தும்பலானது அடுத்தடுத் துண்டாகிச் சிரத்திலிருக்கும்படியான நீரெல்லாம் வெளியாகும். நிறுத்த வேண்டுமாயின் குளிர்ந்த சலத்தை முகத்தில் அடித்து நாசியின் துவாரங்களை அலம்பித் துடைக்க நின்றுவிடும். இதனைக் காக்கை வலிக்கு இந்நூலில் கூறப்பட்ட வசியத்தைக் கொடுக்குமுன் இச் சிகிச்சையைச் செய்தல் பெரும்பாலும் நன்மையை யுண்டாக்கும்; எ - ம். (2)

### அயக் கறுப்பு

495. கருவேலங் காய்ச்சாற்றில் காணிருப்புத் தூளைப்
பொருந்த மதியாறு போட்டுத்—திருந்திடவே
கொண்டரைத்து வேளைக்குக் குன்றியெடை யுட்கொள்ள
அண்டுபெரும் பாடில்லை யால்.

(க - து) ஒரு பீங்கானில் கருவேலங்காய்விதை முற்றாத பக்குவத்தில் கொண்டுவந்து இடித்துச் சாற்றைப் பிழிந்து அதில் நயப்பு அயத் தூளைப் போட்டு ஐந்தாறுமாதம் வரையில் துப்பாகும்படி விட்டு விடவும். பின்னர் அப்படியே கல்வத்திலிட்டு நன்றாய் அரைத்து மெல்லிய சீலையில் அரித்துத் திப்பியை நீக்கிச் சீசாவிலிடவும். இது சுத்தக் கறுப்பாக இருக்கும். இதனைத் தேன், நெய் முதலிய அனுபானங்களில் குன்றிப் பிரமாணம் தினம் இருவேளை 3 - நாள் கொடுக்க எத்தகைய கடூரமான பெரும்பாடு ஆயினும் குணமாகும். பத்தியம்: புளி நீக்குதல் ஆவசியகம்; எ - ம். (3)

### சல மஞ்சரி

496. சாரும் பொடிசங்கு சாத்திரவே திக்காந்தம்
நீருஞ் சிலைசத்து நீண்டகல்—நாருடனே
விள்ளவெங் காரமயம் வீறுகெந்தி சீனமிவை
கொள்ளக் கழஞ்செடையாய்க் கூட்டு.

497. கூட்டுஞ் சரக்கோடு குற்றமிலாப் பேரிணங்கன்
போட்டுச் சமனளவே போதரவா—யாட்டியபின்
இட்டுக் குகைதனிலே ஈடேற நீயுருக்கப்
புட்டுத் தனையொக்கும் போற்று.

498. போற்றிப் பொடித்துப் புகலப் பணவெடையாய்
ஏற்ற விளநீ ரெலுமிச்சம்—சாற்றும்வெந்
நீர்கரிப்பான் சாறதனில் நித்தமிரு வேளைகொள்ளச்
சீர்ப்பரிகா ரம்மாகுஞ் செப்பு.

499. செப்பக் கவுசியுடன் சேர்பாண்டு நீராமை
ஒப்பி வரும்வீக்கம் ஓடிவிடும்—தப்பிலேயே
சித்த ருரைத்திட்ட சீராம் மருந்துதனை
நத்தக் குணம்மேலாம் நன்று.

(க - து) சங்கு பொடி, சாஸ்திரபேதி, காந்தம், சிலாசத்து, கல்நார், வெங்காரம், அயம், கெந்தி, படிகாரம் இவைகள் கழஞ்சு எடையாகவும். இவைகளின் மொத்த எடைக்கு வெடியுப்புக் கூட்டி மெழுகுபதமாய் அரைத்து மூசையிலிட்டு அனலில் வைத்து உருகினவுடன் ஆற்றி யெடுத்துப் பணவெடை வீதம் இளநீர், பழச்சாறு, வெந்நீர், கரிசிலாங்கன்னி கஷாயம் முதலியவைகளில் கொடுக்க, கவுசி, நீராமை, பாண்டு, சோகை, வீக்கம் முதலியவைகள் குணமாகும்; எ - ம். (4)

வங்குக்கு மேல் பூச்சு

500 கோவையிலைச் சாறோடு கொண்டே யரிதாரம்
தேவை யளவுறைத்துத் திட்டமுடன்—பாவையரே
வங்கின்மேல் பூசிடவே வாங்கு மதன்கறுப்புத்
தங்கா தொருநாளுந் தான்.

(க - து) கோவையிலைச் சாற்றில் தாளகத்தை யிழைத்துத் தினம் இரவு படுக்கைக்குப் போகும்போது வங்கின்மேற் றடவி வர, சில நாளில் கருமையான நிறம் மாறித் தனது பூர்வ நிறத்தை யுண்டாக்கும் என்பதில் சிறிதும் சந்தேகம் வேண்டாம்; எ - ம். (5)

செவிடு நீங்க

501. கேசரிம லப்பிழிபால் கிஞ்சுகமே யிஞ்சிப்பால்
மாசரிய தாய்க்கூட்டி வண்செவியி—லேசரியாய்
ஓங்குதுளி யேசுலவ ஓதும் பெருஞ்செவிடு
நீங்கிவிடு மென்றே நினை.

(க - து) குதிரை லத்தியிலிருந்து பிழிந்தெடுத்த ரசமும், சுண்ணாம்பு நீக்கிய இஞ்சிச் சாற்றையும், சமமாகக் கலந்து காதில் ஒவ்வொரு துளிவிட்டு அது நன்றாய் உட்செல்லும்படி கவனித்துப் பஞ்சு அடைத்து வைக்கவும். இப்படி ஒரு வாரம் செய்யச் செவிடு நீங்கும். அதிக அளவு

காதில் விட்டால் விரணமுண்டாகும். காதில் வலி யுண்டானுல் உடனே நிறுத்துக. தினம் புதியதாகச் செய்தல் வேண்டும்; எ - ம். (6)

### வீக்கத்திற்குப் பற்று

502. கற்பூர முந்தூபம் காயமூ சாம்பரமும்
நற்புளியங் கொட்டைத்தோல் நங்கைதொடி—பெற்றுசமன்
ஏற்ற கலுவத்தில் ஏறவிட்டு வெண்கருவால்
சாற்ற வரைத்திடவே சார்.

503. சாருங் குழம்பைச் சரிகுரலே கம்மிடினும்
மீறுஞ் சயித்திய மேலிடினும்—வேறுவித
வீக்கம் பலவாயும் விட்டகலா நொந்திடினும்
போக்கும்பற் ருகுமிதைப் போடு.

(க - து) கற்பூரம், சாம்பிராணி, பெருங்காயம், மூசாம்பரம், புளியங் கொட்டைத்தோல், கருவளையல் இவைகளைச் சமனெடையாகக் கல்வத்தில் போட்டுக் கோழி முட்டையின் வெண் கருவை விட்டரைத்து; தொண் டைக் கம்மல், சயித்தியம், வாயுவீக்கம் முதலியவற்றிற்குப் பூசி சிறிது நெருப்பனலில் காட்ட, சீதளத்தின விருப்பின் நீரை வறட்டியும், வாயுவின விருப்பின் அவ்விடத்தைவிட்டு விலக்கியும் வீக்கத்தைக் குணப்படுத்துவ துடன் உபாதையையும் அற நீக்கும்; எ - ம். (7)

### வஜ்ஜிர மூசை

504. இருமூன் றுமிக்காந்தல் ஈருறு மண்ணும்
ஒருமூன்ருஞ் சிட்டமுடன் ஒப்பத்—தருகழுதை
விட்டைதன் னேடே விரும்பிப் பழங்கந்தை
யிட்டரைக்க மூசைக்கா மெண்.

(க - து) உமிக்கரி 6 - பங்கு, களிமண் 12 - பங்கு, அயச்சிட்டம், கழுதைபுட்டை, பழைய துணி வகைக்கு மூன்று பங்காகக் கூட்டி நெகிழ அரைத்து மூசைப் பிடிப்பதற்கே வஜ்ஜிர மூசை எனப்படும்; எ - ம். (8)

### திரிலோகக் குளிகை

505. செப்புப் பொடியோடு சீர்வெள்ளி தாளகமும
ஒப்பப் பலமீக வோர்குகையி—லப்பிவாய்

மூடி யுலேதனிலே மூன்றுவிசை தானமூந்த
நாடி யுருக்கிடவே நன்று.

506. நன்ருங் குளிகைதனே நற்றேனில் மூன்றிழைக்
குன்ருக் கொடுத்திடவே கோதையரே—மன்ருடும்
காசஞ் சுரஞ்சந்நி காணீளே சேர்கபமும்
பேச விடமிலேயாம் பின்.

(க - து) சுத்திசெய்த தாம்பிரப்பொடி, வெள்ளிப்பொடி, அரிதாரம் வகைக்குப் பலமாக்க் கல்வத்திலிட்டு நன்ருய் அரைத்துச் சீமை மூசையிலேனும், வஜ்ஜிர மூசையிலேனும் போட்டமூத்தி மேல்மூடிச் சீலே செய்து கன்னு னுலேயிலிட்டு, மூன்று தடவை கரிபோட்டு ஊதி யெடுக்க உருகிக் குளிகையாக இருக்கும் இதனேத் தின ் இருவேளை தேனில் மூன்று இழை உறைத்துக்கொடுக்கச் சுவாசகாசம், ஈளை கப சம்பந்தமான சுரம், சந்நி முதலியவைகள் நிவர்த்தியாகும்; எ - ம். (9)

வாதரோகப் பற்று

507. துண்டுமை சாட்சியுடன் சூடம்மூ சாம்பரமும்
கண்டுமை லாலக் கடிமிளகுக்—கொண்டுநிரைத்
தொக்கச் சமனிட்டுத் துய்யமூலேப் பாலேந்திப்
புக்கரைத்தே பற்ருகப் போடு.

508. போடச் சுளுக்கு பொலியுங் கணுவீக்கம்
தோடப் பலவாயு தோகையரே—வாடிடுங்கேள்
வையகத்தில் சீதளமும் வாயுக் குடைச்சலெலாம்
ஐயமற விட்டோடு மாம்.

(க - து) மைசாட்சி, கர்ப்பூரம், மூசாம்பரம், மைலாலக்கடி, மிளகு இவைகளைச் சமனெடையாகக் கல்வத்திலிட்டு முலேப்பாலால் நன்ருய் அரைத்துப் பற்றுபோட: சுளுக்கு, கணுவீக்கம், வாதநோய், வாதக் குடைச்சல், சீதளத்தினு லுண்டான வீக்கம், வலி முதலியவைகள் குணமாகும்; எ - ம். (10)

திரிமூர்த்தி சிந்தூரம்

சந்த விருத்தம்

509. பண்பார் லிங்கம் பலமொன்று பகர்தா ளகமும் பலமுக்கால்
நண்பார் வீரம் பலமரையே நனிதே செங்கற் றுளேசெய்து
விண்பார் புகமும் மருந்திதனே விரைந்துள் ளடக்கிச் சீராக்கி
எண்பா ரிருபத் தைந்தெருவி லினிதே புடமிட் டிசைபாரே.

510\. இசைவாஞ் சாணத் திடையிட்டிங் கினிதா றியபின் னென்சொல்வாம்
கசைவொன் றில்லாச் சிந்தூரங் காணற் கரிய செந்நீர்மைத்
தசையார் சச்சுச் சுரஞ்சன்னி வாய்வோ டீளை மிகுசீதம்
வசையா மருந்தின் பெருஞ்சீர்த்தி வரைதற்கேளா வகையம்மா.

(க - து) இலிங்கம் பலம் ஒன்று, தாளகம் பலம் முக்கால், வீரம் பலம் அரை இவை தம்மைக் கலுவத்திலிட்டு நன்றாய் அரைத்து வைத்துக் கொள்க. ஒரு அரை செங்கல்லின் மத்தியில் சிறு பள்ளந் தோண்டி அதனில் முன் சித்தப்படுத்திய சாக்கைப்போட்டமுழுத்தி அக் குழியின் வாய்க்குப் பொருத்தமான செங்கற் றுண்டையேனும் மண்ணோட்டை யேனும் தேய்த்துச் செருகி, சந்துக்கு மண்பூசி. செங்கல் முழுவதும் சூழ எழு மண்சீலை சுற்றிக் காயவைத்துப் பின்னர் 25 - வறட்டியில் புடமிடவும். தீப்பற்றி அடிவரையிலும் வறட்டி வெந்துவந்த சமயம் புடத்தைப் பிரித்து உள்ளிட்ட, செங்கல்லைக் கோவின் சாணத்தில் பொதிந்து சூடாறின பின்னர் எடுத்துச் சீலையை நீங்கிப் பார்க்க உள் ளிட்ட மருந்தானது உருகிச் சிந்தூரித்திருக்கும். இதனை யரைத்துக் குப்பியிலிடவும். வேளைக்குக் கால் அல்லது, அரைக்குன்றிப் பிரமாணம் தேனில் தினம் இருவேளை கொடுக்கச் சுரம், ஜன்னி, பாரிசவாயு, சச்சு வாயு, ஈளை, சுவாசகாசம் முதலியவைகள் நீங்கும். பத்தியம் : ரோகத்தின் வன்மை மென்மைக் கேற்றவாறு புளி தள்ளியும், தள்ளாமலும் இச்சா பத்தியமாக இருத்தல் நன்று. சுரரோகத்தில் மாத்திரம் கஞ்சிதவிர வேறொன்றையும் கொடுக்க லாகாது ; எ - ம். (11)

## தோஷ நிவாரணி

### சந்த விருத்தம்

511\. மானே சுத்த சலமாறு படியோர் மட்பாத் திரத்திட்டுத்
தானே மூன்று படியாகத் தனியே காய்ச்சித் தரையிறக்கிக்
கோனே தொண்டா ருழமண்ணோர் படிகொண் டதிலிட்டிரு பலமாய்
நானே பகர்வேன் கற்சுண்ணம் நன்கிட்டினிதே கரைப்பாயே.

512\. இனிதே கரைத்திங் கசையாமல் இருத்தோர் நாளும் மறுநாளில்
பனிதே மொழியே தெளிவாகப் பார்த்தே வடித்துக் குப்பியிலே
நனிதேவைத்துப் பாழ்விக்கல் நாவின்வறட்சிப் பிணிக்கெல்லாம்
உனிதே பலங்காற் கொப்பளித்தங் குமிழப்பறக்கு முறுதியிதே.

(க - து) ஆறுபடி சுத்த ஜலத்தை ஒரு புது மட்கடத்தில் விட்டு அடுப்பேற்றித் தீயெரித்து அச்சலம் 3 - படியாகச் சுண்டின தறுவாயில் கீழ் இறக்கி ஒருபடி சுத்தமான உழமண்ணையும் 2 - பலம் கற்சுண்ணத்தையும் போட்டுக் கரைத்து ஒருநாள் முழுவதும் அசையாமல் விட்டுவைத்து மறுநாள் தெளிந்துள்ள நீரைக் கலங்காமல் வடித்துக் குப்பியிலிடச் சுத்த பனிநீர்போ லிருக்கும். பிரசவமானபின் ஸ்திரீகட்குச் சீதளத்தினால் காணும் கொடூரமான நாவறட்சிக்கும், அல்லது ஜன்னிபாதங்களில் காணும் நாவறட்சி - கிருஷ்ணதோஷம் - முட்பாய்தல், விக்கல் முதலியவைகளுக்கும் இந்நீரில் கால் அரைபலம் வாயில் விட்டுக் கொப்பளித்து உமிழச்செய்க. உடனே சிறிது நேரத்தில் நாவறட்சி அடங்கி நீர்சுரப்புக் கண்டு தோஷத்தை நிவர்த்தி செய்யும்; எ - ம். (12)

சிந்தாமணிக் குளிகை

513. கந்தி யுடன்சூதம் காண விருபலத்தை
நந்திக் கலுவத்தே நட்புறவே—சிந்தித்து
முத்தெண்ணெய் விட்டு முதிரும் பதமாட்டிப்
பத்தியொரு நற்குளிகைப் பண்.

514. பண்ணுங் குளிகைமேற் பட்டுத் துணிச்சுற்றி
உண்ணி மணலிடையி லுட்கிடத்தி—நண்ணியதீ
இட்டுச் சதுர்சாமம் ஏற்கக்குன் றுமலெடை
கட்டுறவே நீயெடுக்கக் காண்.

515. காணப் பொடித்துக் கணக்கா யொருகுன்றி
பூணநெய் தேனிலிடப் பூட்டுவாய்—கோணல்
பெருத்த வலியிழுப்பு பேச்சுமிகுஞ் சன்னி
வெருத்தே விலகிவிடும் விட்டு.

(க - து) வாலைரசம் பலம் - 2, கந்தகம் பலம் - 2, இவைகளைக் கல்வத்திலிட்டுச் சிற்றுமணக்கெண்ணெய் துளித்துளியாக விட்டு மெழுகு பதத்திலேயே அரைத்து, கோழிமுட்டைபோல் உருண்டைசெய்து ஒருநாள் ஆறவிட்டு அதன்மேல் கறுப்புப் பட்டுத்துணியைச் சுற்றிப் பின்னர் நூலால் வரிந்து கட்டிவைக்க. ஒன்றரைபடி பிடிக்கும்படியான ஓர் சட்டியில் 5 - அங்குலம் மணல் போட்டுப் பரப்பி, அதன்மீது முன் சித்தப்படுத்திய உருண்டையை வைத்து நிறைய மணல் கொட்டி மேல் மூடிச் சீலைசெய்து காலையில் அடுப்பேற்றி 4 - சாமம் முத்தீயாக எரிக்கவும். ஓர் இரவு ஆறவிட்டு மறுநாள் எடுத்துப்பார்க்க உருண்டை

யானது பளுவாக இருத்தல் வேண்டும். அதன்மேல் இருக்கும் பட்டுத் துணியை நீக்கி அவ் வுருண்டையின்மேல் வெள்ளி மோதிரத்தை இழைக்க உறைவிழ வேண்டும். உருண்டையானது பளுவாக இருந்து முற்கூறப் பட்ட பரீட்சைக்கு நிற்காவிடின் மீண்டும் ஒரு சிறு குடுவையில் 2 - அங்கு லம் மணல்போட்டு உருண்டையின்மீது பட்டுச்சுற்றி நூலால் கட்டிவைத்து மணல் கொட்டி ஒரு சாமம் எரிக்கவும். நன்றாய் ஆறினபின்னர் முன் கூறியவண்ணம் பரிட்சை பார்க்கவும். சொல்வண்ணம் ரசமும் கெந்தகமும் இடை குறையாமல் இறுகி வெள்ளியின் உறையை வாங்கும்படியான குளிகையாய்விடின் இதுவே மிகச் சிறந்தது. உருண்டை இலேசாய்ப் போய்விடின் பிரயோசன மற்றதாகும். மறுபடியும் விவேகிகள் கஷ்டம் என்று பாராது செய்து முடிப்பார்கள்.

கிராம்பு, திப்பிலி, மிளகு, தாளிசபத்திரி சமனெடையாக நிறுத்துப் பொன்மேனியாக வறுத்து இடித்துச் சூரணஞ்செய்து வைத்துக்கொண்டு, வேளைக்கு $\frac{1}{2}$ - விராகனெடை சூரணத்தில் குன்றிப் பிரமாணம் முன் சரிவர முடித்த மருந்தைப் பொடித்துச் சேர்த்துத் தேனில் மத்தித்துத் தினம் இருவேளை 5, 7, 10 - நாள் கொள்ள ஜன்னி, வாயு, காக்கைவலி, முயல்வலி, தனுர்வலி, இடிவாதம், கரபாத ஜன்னி, குத்தல், எரிச்சல், வாய் - கண் - முகம் கோணல், பிரசவ ஜன்னி முதலியவைகள் தீரும். பத்தியம்: முதல் பத்து நாள் புளி தள்ளி இச்சாபத்தியமாகவும்; அதற்கு மேல் உப்பு, புளி சேர்த்து இச்சாபத்தியமாகவும் இருக்கவேண்டும்; எ - ம். (13)

கண்டா அவிழ்தம்

516. ஒப்பப் பவள முயருருத்தி ராட்சமொடு
செப்பப் பறிவெள்ளி சீர்முத்து—இப்புவியில்
நத்திப் பணவெடையே நங்கை தனப்பாலைக்
குத்தி யரைத்திடவே கூறு.

517. கூறக் கிராம்பு குணமதுரங் கோஷ்டமுடன்
சேரத் திரிகடுகு சேயிழையே—தேரவதில்
வில்வக் கனியோடும் வேண்டிலவ நற்பிசினி
சொல்லப் பலமரையே சொட்டு.

518. சொட்டிப் பெருஞ்சங்கு சுத்தமான் கொம்புடனே
வட்ட முலைப்பாலை வார்த்தரைத்து—நட்டமிலா

காற்பலமே யொவ்வொன்றும் கண்காண விட்டுடனே
ஏற்றதேன் விட்டரைக்க எண்.

519. எண்ணி யரைத்திங்கே ஏற்றசிறு பீங்கானில்
நண்ணி யடைத்தேநீ நாவிவிட—விண்ணுலகில்
சன்னியுடன் நாவறட்சி சாற்றும் பெரும்விக்கல்
சின்னமற விட்டொழியுஞ் செப்பு.

(க - து) பவளம், உருத்திராட்சம், தங்கரேக்கு, வெள்ளி அரப்பொடி, முத்து இவைகளை வகைக்குப் பணவெடையாகக் கல்வத்திலிட்டு முலைப்பாலால் மூன்று நாள் அரைத்துப் பின்னர் கிராம்பு, அதிமதுரம், கோஷ்டம், சுக்கு, மிளகு, திப்பிலி, வில்வப்பழத்தோடு, இலவம்பிசின் இவைகளைத் தனித்தனிச் சூரணித்து வகைக்கு அரை பலம் வீதம் கூட்டிச் சிறிது முலைப்பால் விட்டு அரைக்கவும். இவைகள் உறவான சமயம் தேயாத சுத்தமான சந்தனக்கல்லில் முலைப்பால் விட்டுச் சங்கையும் மான் கொம்பையும் இழைத்து வகைக்குக் $\frac{1}{4}$ - பலம் வீதம் கூட்டித் தேன் விட்டுக் குழம்பு பதத்திலேயே இருக்கும் பொருட்டு இரண்டு மூன்று நாள் அரைத்து வாயகன்ற பீங்கானில் இட்டுவைக்கவும்; இதனில் பணவெடை அரை ஒருமணி நேரத்திற்கு ஒரு முறை நாவில் தடவிக்கொண்டுவரச் சீதளத்தினல் உண்டான நாவறட்சி, நாக்கருப்பு, சுரசுரப்பு, விக்கல் முதலியவை தீரும்; எ - ம். (14)

குறிப்பு:—சன்னி தோஷங்களில் இதனையே பெரிய மருந்தாகப் பாவித்து இருக்கலாகாது. சந்தர்ப்பத்திற்கு ஏற்றவாறு சீதளத்தைப் பரிகரிக்கக்கூடிய ஏதேனும் உயர்தரமான செந்தூரங்களைப் பிரயோகித்துப் பின்னர் இக் குழம்பை அடிக்கடி நாவில் தடவிக்கொண்டுவர, நாவிலுண்டான தோஷங்கள் எத்தகைய கடுமையான நிலைமையில் இருப்பினும் குணப்படுத்து மென்பது உண்மை.

ஸ்ரீதாராம் ...

## மருந்துண்ணும் காலவரை

### நொண்டிச் சிந்து

(சந்தம்)

தெந் தின தின தின தோம்—தினஞ
தின தின தின தின தின தின தோம்.

520. சுக்கில நஷ்டம் காசம்—உன்மாதம்
தோயாத வியாதிகளுக் கொருதிங்கள்
பக்குவமில் கிரிச்சர நோய்—துட்டரணம்
பாதகாஸ் மரிமது மேகநோய்க்குத்
தக்கவித மாய்மருந்து—பத்துதிங்கள்
தாஞக வுண்ண வேண்டும் மானே நீகேள்
விக்கலுறும் வாதரோகம்—பச்சவாதம்
விளம்புமேழ் விதக்கட்டிக் கறுதிங்கள்
நஞ்சமரும் பவுத்திரநோய்—மூலரோகம்
நாயகியே குன்மந்திமிர் படைக்ஷயத்துக்
கெஞ்சாமல் நான்கு திங்கள்—மருந்துண்ண
இருந்த விடத்தைவிட்டுப் பெயர்ந்திடுமே
இருதய ரோகம் மூர்ச்சைப்—பித்தரோகம்
ஏடாகொட வதிசார சோபைகளுக்கு
விருதாவென் றெண்ணமல்—மருந்துகள்
விளம்புவன் மூன்று திங்கள் வழங்கிடுமே
சொல்லுவேன் வாந்தி விக்கல்—கணச்சூடு
தோய்ந்துள வியாதிகளுக் கேந்திழையே
நல்லதா மொரு திங்கள்—மருந்துண்ண
நாட்டிலேகில் லாமலோடும் பாட்டினிது பார்
காமாலை பாண்டிழுப்பு—சோகைக் கெல்லாம்
காட்சியுடனே மருந்தின் மாட்சிமையைக்கேள்
தாமாலை கொள்ளாது—திங்கள் ரெண்டு
தப்பாம லுண்டுவரச் சாத்திர விதி
தொண்டைகட்டுச் சீதளஞ்சேர்—மகோதரமும்
தொந்தமுள பிணிக்குணு மூன்றுதிங்கள்
கண்டுபுகல் சாத்திரத்தார்—மருந்தின்
காலவளவாக வுண்ண வியாதியிலையே. (தெந்தின)

கண்ணுசாமியம் முற்றிற்று.

---

# அட்டவணை

நூற்கண்ணு சாமியமை நூற்றிருப தாம்புவியில்
சேர்த்தே சிலபாக்கள் செப்பினேன்—பார்த்திதனை
என்னிறைவன் பேரருளால் எக்காலு மெவ்வெவரும்
பன்னிப் பலனடையப் பார்.

---

திருமகள்விலாச அச்சு நிலையம், சென்னை :—1939.

வைத்திய வித்வன்மணி

சி. கண்ணுசாமிப் பிள்ளை அவர்கள் இயற்றிய

**சிகிச்சாரத்ந தீபம்** என்னும்

**வைத்திய நூல்** விலை ரூ. 2-8

[வாலையந்திரப் படங்களுடன் உயர்ந்த கிளேஸ் கடிதத்தி லச்சிடப்பட்டுள்ளது.]

சென்னைமா நகரின்கண் "விடோபா" அவிழ்த சாலையை ஸ்தாபித்த வரும், "கண்ணுசாமியம்" என்னும் வைத்திய சேகரத்தின் நூலாசிரியரு மான ஸ்ரீமான் கண்ணுசாமிப்பிள்ளை யவர்கள் தென் நாடு முதல் வடநாடு வரையிலும் அனுசரித்துவரும் அரிய பெரிய பாகங்களையும், யூனனி வைத்திய முறைகளையும், பெரும் பொருள் செலவிட்டு முடித்துப் பயன் பெற்றவைகளாயுள்ள பாகங்களை யெல்லாம் ஒருங்கு தொகுத்து ஒவ்வொரு வரும் எளிதி லுணரும் வண்ணம், தேக பஞ்ச பூதம், நாடி, ரோக நிதானம், செய்பாக விளக்கம், கியாழம், சூர்ணம், மாத்திரை, மெழுகு, லேகியம், கிருதம், செந்தூரம், பற்பம், தீநீர், திராவகம், ஆசவம், அரிஷ்டம், பத்தியம் இன்னும் பல பாகங்களையும் இலம்பகங்களாக வரைந்துள்ளார். இந்நூல் வைத்தியத் தொழிலைக் கற்க விரும்பும் மாணவர்களுக்கும் வைத்தியர்களுக் கும் மற்ற ஏனையோருக்கும் பெரும் நன்மையைத் தரத்தக்க தென்பது எவருமறிந்த உண்மை.

சிகிச்சாரத்ந தீபம் இரண்டாம் பாகமாகிய

**வைத்திய சிந்தாமணி** விலை ரூ. 2-0

[வைத்திய வித்வன்மணி சி. கண்ணுசாமிப்பிள்ளை யவர்கள் இயற்றப்பட்டது.]

இந்த "வைத்திய சிந்தாமணி" என்னும் நூலானது பூர்வாசிரியர்களில் ஒருவராகிய யூகிமாமுனி என்பவரால் கூறப்பட்டது. இதனில், ரோக நிதானங்களை ஏறக்குறைய கூறி யிருப்பதினால் இதனை ஆதாரவாகக்கொண்டு வசன காவியமாக எழுதினதுமல்லாமல், சில விடங்களில் சமயத்துக்கேற்ற வாறு மற்றும் சில கிரந்தங்களினின்று சிலது சேர்க்கப்பட்டும், ஒவ்வொரு ரோகங்களின் இறுதியில் ஆங்கிலேய மருத்துவத்தில் கூறப்பட்டுள்ள ரோக நிதான விஷயங்களை மாதாந்தரமாகவும், அமைத்துக் காலதேச வர்த்த மானங்களுக்குத் தக்கவாறு சிகிச்சைகளையும் கூட்டி அநேக அருமைவாய்ந்த முறைகளுடன் எழுதப்பெற் றிருக்கின்றது.

B. இரத்தின நாயகர் ஸன்ஸ், புஸ்தக வியாபாரிகள்,

நெ. 41, வெங்கடராமய்யர் தெரு, ஜார்ஜ் டவுன், சென்னை.

எட்டயாபுரம் சமஸ்தான வைத்தியர்

டாக்டர் S. A. சின்னப்பா M. D. (ஹோமியோ)

அவர்கள் இயற்றிய

**ஸ்திரீபால சிகிச்சை** விலை ரூ. 3-0

அருமை வாய்ந்த இந்த வைத்தியக் கிரந்தத்தில் ஸ்திரீகளுக்கும், பாலர்களுக்கும் தனிப்பட சம்பவிக்கும் ரோகங்களையும் அவற்றிற்கான செய்முறை, கைமுறை, ஆங்கிலமுறை ஆகிய மும்முறைகளிலும் சிகிச்சைகளை விளக்கியுள்ளன. மேலும், ஸ்திரீ ஜாதிகளுக்கேற்பட்ட தனித்தனி வியாதிகளுக்கும், பாலர்களின் பல பிணிகளுக்கும் சிகிச்சை முறைகளையும், ரோக நிதானங்களையும் கூறும் நூற்கள் ஒன்றுமில்லாதது கண்டு, நமது தாய் நாட்டிற்குள்ள இக்குறையை நீக்குவான்வேண்டி ஷை டாக்டர் S. A. சின்னப்பா M. D. (Homeo) அவர்கள் அநுபவத்திற் கையாண்டு வந்த முறைகளை வெகு விமரிசையாக இந்நூலில் விளக்கியுள்ளார். தவிரவும், ஆங்கில தமிழ் சிகிச்சைகளைச் சம்பூரணமாகவும், யாவரும் எளிதில் கையாண்டு கொள்வதற் கேற்றபடி இலகுவான விதமாகவும் வரையப்டிருக்கிறது.

**இங்கிலீஷ் தமிழ்**

**வைத்திய சிகாமணி** விலை ரூ. 3-0

இவ்வரிய புத்தகத்தில் ஆயிரக்கணக்கான வியாதிகளுக்கு ஒவ்வொரு வியாதிக்கும் பலவித சிகிச்சை முறைகள் அடங்கியதாய் ஆயிரம் முறைகள் சேர்க்கப்பட்டிருக்கிறதுமன்றி, இந்து ஆயுர்வேத அபூர்வ முறைகள் பலவும் தனியாய் இதில் சேர்க்கப்பட்டிருக்கிறது. இப்புத்தகம் இங்கிலீஷ் படித்தவர்களுக்கும், தமிழ் மாத்திரம் வாசித்தவர்களுக்கும் ஆக இருவகுப்பாருக்கும் உபயோகப்பட வேண்டுமென்று யோசித்து ஒவ்வொரு முறையும் இங்கிலீஷில் ஒரு பக்கத்திலும் அதற்கு நேர்பக்கத்தில் தமிழிலுமாக கைமுறைகள் ஒவ்வொன்றையும் எந்த வைத்தியர்கள் கையாண்டிருந்து உண்மையானதென்று வெளியிட்டிருந்தனரோ அவரவர்கள் பெயரை இரு பாஷைகளிலும் அந்தந்த முறைகளின் கீழேயே சேர்த்து உயர்ந்த கிளேஸ் கடிதத்தில் அச்சிட்டிருக்கிறது. இந்நூல் ஆங்கில வைத்தியம் கற்றுக் கொள்ள விரும்பும் மாணவர்களுக்கும், (Compounder) காம்பவுண்டர்களுக்கும் மிகவும் அவசியமானது.

---

B. இரத்தின நாயகர் ஸன்ஸ், புஸ்தக வியாபாரிகள்,

நெ. 41, வெங்கடராமய்யர் தெரு, ஜார்ஜ் டவுன், சென்னை.

உயிரெழுத்து

## மூலிகை மர்மம்

4 - பாகங்கள் அடங்கியது விலை ரூ. 3-0

இதனில் பாஷாணாதி கொடுஞ் சரக்குகள் கலப்பின்றி தனித்து மூலிகைச் சரக்குகளினாலேயே முடியும் முறைகள் அநேக நூற்றுக்கணக்காக எழுதப்பட் டிருக்கின்றன. எல்லாவகை நோய்களுக்கும் இந்த ஒரு நூலிலேயே பலவகை முறைகள் அடங்கி யிருக்கின்றன. ஒவ்வொரு முறைகளும் எவரும் எளிதாகச் செய்து கையாளலாம். எல்லாம் மூலிகைச் சரக்குகளினாலேயே மூடிவதாகையால், ஒருவித பயமும் கெடுதியும் இல்லை. இதுவரை அநேக ஆயிரம் புத்தகங்கள் செலவழிந்திருக்கின்றன. வைத்தியர்களுக்கும், வைத்தியர் அல்லாதவர்களுக்கும் இது பெரும் பயன் தருவது.

பார்வதி பரணிய மென்னும்

## விஷ வைத்திய சிந்தாமணி

விலை அணா. 12

இந்நூலில் எத்தகைய கொடிய விஷ ஜந்துக்களின் கடிகளுக்கும் தகுதியான கைகண்ட முறைகள் விளக்கமாக எழுதப்பட் டிருக்கின்றன. இவ்வரிய புத்தகம் ஒன்றிருக்குமானால் பாம்பு முதலிய விஷ ஜந்துக்களைப் பற்றிய பயமே இல்லாமல் போகும். அஷ்ட நாகங்கள் வசிக்குமிடம், பரிமளக்குறி, படத்தின்குறி, ஆடுங்குறி, விஷத்தின் அளவு, சாத்தியா சாத்தியம், எலி, பெருச்சாளி, பல்லி, அரணை, பணைநாய், வண்டு முதலியவற்றின் விஷங்கட்கு அவுடதம், கலிக்கம், மூலிகைப் பிரயோகம், புகை, முடிக்கயறு மந்திரம் முதலிய சகல சிகிச்சைகளும் அடங்கியது.

## சுகந்த பரிமள சாஸ்திரம்

விலை அணா. 12

இதில் சுகந்த மூக்குத்தூள், சுகந்த ஸ்நானப்பொடிகள், பல்பொடி, புதுக்கோட்டை மைசூர் முதலிய சமஸ்தான அத்தர் பில்லைகள், ஊதுவர்த்திகள், பரிமள தைலங்கள், கர்ப்பூரம், கர்ப்பூரத் தைலம், சந்தனாதித் தைலம் முதலிய இன்னும் பல அருமையான பரிமளத் திரவியங்கள் செய்யும் முறைகள் அடங்கி யிருக்கின்றன.

---

B. இரத்தின நாயகர் ஸன்ஸ், புஸ்தக வியாபாரிகள்,

நெ. 41, வெங்கடராமய்யர் தெரு, ஜார்ஜ் டவுன் சென்னை.